# சமூகப் பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்

காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழக

முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி)

அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

ஆ.பிரபு

தமிழ்த்துறை

காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகம்

காந்திகிராமம் - 624 302

திண்டுக்கல் மாவட்டம்.

ஜூலை - 2013

**முனைவர் அ.பிச்சை** எம்.ஏ(தமிழ்),எம்.ஏ(உளவியல்),மொழியியல்(பட்டயம்),பிஎச்.டி.,
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகம்,
காந்திகிராமம் - 624 302.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"சமூகப் பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்"** என்னும் தலைப்பில் **ஆ.பிரபு** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு, காந்திகிராம கிராமியப் பல்கலைத் தமிழ்த்துறையில் அவர் முழுநேர ஆய்வாளராக ஆய்வுசெய்த காலத்தில் எனது மேற்பார்வையின்கீழ் முனைவர் பட்டத்திற்காகத் தன்னிச்சையாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வேட்டின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம்: காந்திகிராமம் **(அ.பிச்சை)**

நாள்: 22 / 07 / 2013 மேற்பார்வையாளர்

**ஆ.பிரபு** எம்.ஏ, பி.எட், எம்.ஃபில்.,

முனைவர்பட்ட ஆய்வாளர்,

தமிழ்த்துறை,

கிராமியப் பல்கலைக்கழகம்,

காந்திகிராமம் - 624 302.

## ஆய்வாளர் உறுதிமொழி

"**சமூகப்பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்**" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் சமர்ப்பிக்கப்படும் இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம்: காந்திகிராமம் ஆ.பிரபு

நாள்: 22 / 07 / 2013 (ஆய்வாளர்)

மேற்பார்வையாளர்

# நன்றியுரை

**‘சமூகப் பண்பாடு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்’** என்னும் தலைப்பில் ஆய்வு செய்திட அனுமதி வழங்கிய காந்திகிராம கிராமியப் பல்கலைக் கழகத்திற்கும், என் நெஞ்சார்ந்த நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன். இந்த ஆய்விற்கு என்னைத் தேர்வு செய்தது முதல், ஆய்வு நெறியாளராகவும், தனிப்பட்ட முறையில் எனக்குச் சிறந்த வழிகாட்டியாகவும் இருந்து செயல்பட்ட தமிழ்த் துறையின் மூத்த பேராசிரியரும், ஒப்பிலக்கிய அறிஞருமான பேராசிரியர் அ.பிச்சை அவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகின்றேன். இந்த ஆய்வுத் தலைப்பினை ஏற்றுக்கொண்டு தக்க தருணத்தில் உதவித்தொகை வழங்கிய **செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கு** என் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இந்த ஆய்விற்குப் பயன்படும் பல நூல்களையும், கருத்துக்களையும் வழங்கி ஊக்கப்படுத்தி உதவிய பேராசிரியர்கள் பா.ஆனந்தகுமார் மற்றும் து.மூர்த்தி (அலிகார் முஸ்லிம் பல்கலைக் கழகம்- UP), பேராசிரியர் தமிழ்மணி (கூட்டுறவியல் துறை) மற்றும் பேராசிரியர் வ.இராசரத்தினம், மற்றும் இதரத் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

ஆய்வுக்குத் தேவையான தரவுகளைத் திரட்டிட நூல்களையும், ஆய்வேடுகளையும் பார்வையிட அனுமதி வழங்கிய காந்திகிராம பல்கலைக்கழக டாகடர்.இராமச்சந்திரன் நூலகம், தமிழ்த்துறை நூலகம், திண்டுக்கல் மாவட்ட மைய நூலகம், மதுரைக் காமராசர் பல்கலைக்கழக நூலகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன நூலகம் ஆகியவற்றிற்கு நன்றி கூறுவது என் கடமை.

எனது ஒவ்வொரு முயற்சியிலும் உறுதுணையாக இருந்து ஊக்கப்படுத்தும் என் பெற்றோர் அ.ஆறுமுகம் - ஆ.ஆரோக்கியம் அவர்களுக்கு நன்றி. எல்லா வகையிலும் எனக்கு உறுதுணையாக இருக்கும் என் மாமா வே.ராஜ் மற்றும் அக்கா ரா.சுசீலா, சந்தோஷ், ஜாய்சன் ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன். எனது கல்லூரிப் படிப்பிற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்த என் பெரியப்பா மைக்கேல்ராஜ் மற்றும் பெரியம்மா சவரியம்மாள், அண்ணன் ரிச்சர்ட் அவர்களுக்கும் நன்றி கூறுவதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

எனது இந்த ஆய்வில் அனைத்துத் தருணங்களிலும் உறுதுணையாக இருந்து ஊக்கமூட்டிய கோ.மகாலட்சுமி அவர்களுக்கும்; எனது இந்த ஆய்விலும், தனிப்பட்ட முறையில் என்மீதும் அக்கறை கொண்டு பல்வேறு உதவிகளும், ஊக்கமும் தந்து என்னை உற்சாகமூட்டிய பாசமிகு சகோதரர்கள் அகஸ்டின்.அமல்ராஜ், அ.சதீஸ்குமார், மணி மற்றும் எனது நண்பர்களான மோ.மேகநாதன், ந.சங்கரநாராயணன், பெ.ஜெயசங்கர் மற்றும் அன்புத் தம்பிகள் அ.ஜெயராஜன், அ.லட்சுமணன், ராமகிருஷ்ணன் ஆகியோருக்கும் இத்தருணத்தில் என் நன்றியினைச் தெரிவிக்கின்றேன்.

**_ ஆ.பிரபு**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| எ.கா. | - | எடுத்துக்காட்டு |
| எச்ச. | - | எச்சவியல் |
| கற்பு. | - | கற்பியல் |
| களவு. | - | களவியல் |
| கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| செய்யுள். | - | செய்யுளியல் |
| சொல். | - | சொல்லதிகாரம் |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டின. | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பா வ. | - | பாடல்வரிகள் |

| | | |
|---|---|---|
| புறத். | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| பொருந. | | பொருநராற்றுப்படை |
| வ.எண். | - | வரிசை எண் |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மரபு. | - | மரபியல் |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| மு.நூ. | - | முன்னர் சுட்டிய நூலிலிருந்து |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மூ.உ. | - | மூலமும் உரையும் |
| மேலது. | - | மேற்சுட்டிய நூலிலிருந்து |
| மொ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| P. | - | Page |
| PP. | - | Pages |
| RP. | - | Reprint |

# பொருளடக்கம்


| இயல் எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| 1 | ஆய்வு அறிமுகம் | 1 |
| 2 | சங்கத் தமிழரின் வாழ்விடமும் வகைப்பாடும் | 9 |
| 3 | சங்ககாலச் சிற்றூர்ச் சமூகமும் அதன் உட்கூறுகளும் | 69 |
| 4 | சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல் | 143 |
| 5 | இன்றைய தமிழகத்தில் சங்ககாலச் - சிற்றூர் வாழ்வின் எச்சங்கள் | 181 |
| 6 | முடிவுரை | 239 |
| | துணைநூற்பட்டியல் | 249 |
| | பிற்சேர்க்கை | i |

## சங்ககால எச்சங்கள் குறித்த நிழற்படங்கள் மற்றும் நிலவரைபடங்கள்


| வ.எண் | நிழற்பட விளக்கங்கள் | பிண்ணினைப்பு பக்க எண் |
|---|---|---|
| 1. | ஐவகை நிலங்களின் அமைப்பு | i-v |
| 2. | மூவேந்தர்குடிப் பூக்கள் | vi-vii |
| 3. | சங்ககாலத்தில் குடிசைகள் அமைக்கப் பயன்பட்ட புற்கள், தழைகள், மரங்கள். | viii-ix |
| 4. | சங்ககால அமைப்பிலுள்ள சிற்றில்கள் | x-xiii |
| 5. | ஆய்வுக் களத்தில் தரவுகள் சேகரிப்பு | xiv-xxii |
| 6. | சங்ககால மரங்களும், மலர்களும் செடிகொடிகளும் | xxiii-xxx |
| 7. | சங்ககால உயிரினங்கள் இன்று எஞ்சியுள்ளவை | xxx-xxxix |
| **நில வரைபடங்கள் (Map)** | | |
| 8. | சங்ககால ஊர்ப்பாகுபாடுகளின் அடிப்படையில் உள்ள திண்டுக்கல் மாவட்டச் சிற்றூர்கள் அட்டவணை | xl. |
| 9. | திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள சங்ககாலச் சிற்றூர்கள் | xli. |
| 10. | திண்டுக்கல் மாவட்டத்தில் தொல்லியல் (ஆய்வுகள் நடைபெற்றுள்ள இடங்கள்) எச்சங்கள் காணப்படும் இடங்கள் | xlii. |

# சமூகப் பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்

இந்தியாவின் முதுகெலும்பாகவும், உயிர்நாடியாகவும் விளங்குவது சிற்றூர்களேயாகும். எனவேதான் ‘சிற்றூர் உயர நாடு உயரும்’ என்றார் மகாத்மா காந்தி அவர்கள். ‘இந்தியாவின் இதயம் சிற்றூர்களில்தான் உள்ளது’ என்பதும் அவரது கூற்றேயாகும். நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் ஆதார விளைநிலமாக விளங்கும் சிற்றூர்களில்; சமூக ஒழுக்கம், இனக்குழு வாழ்க்கை, உணவு உற்பத்தி, இயற்கைச் சூழல் போன்ற அடிப்படைக் காரணிகள் முக்கிய அங்கம் வகிக்கின்றன. சிற்றூர்களில் பண்பட்ட வாழ்க்கையினை மேற்கொண்ட நம் முன்னோர்கள் நாகரிக வளர்ச்சியிலும், இயற்கைப் பாதுகாப்பிலும் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர். இன்று அப்படிப்பட்ட தொன்மையான வாழ்வியலை நாம் மறந்து வாழ்ந்து வருகின்றோம்.

அவ்வகையில் சங்ககாலத் தமிழர்கள் வாழ்ந்த சிற்றூர்கள் குறித்து ஆய்வதால் ‘சமூகப் பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்’ என்ற தலைப்பின்கீழ் ஆய்வுசெய்யப்பட்டுள்ளது. சிற்றூர் வாழ்வே சிறந்தது. பண்பாடுகளும் ஒழுக்கங்களும் அங்குதான் சிறப்பாகப் பேணப்படுகின்றன. ஆகவே சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல் குறித்து ஆய்வுசெய்து விளக்குவதாக இவ்வாய்வு அமைகின்றது. சங்ககாலச் சமூகம் குறித்தப் பதிவுகளை சங்க இலக்கியங்கள் துணைகொண்டு ஆய்வதால் விளக்கவியல் ஆய்வு மற்றும் சமூகவியல் முறைகளையும்; சிற்றூர்கள் குறித்து ஒப்பீடு செய்வதால் ஒப்பீட்டு முறை ஆய்வும்; கள ஆய்வு முறையும் இந்த ஆய்வில் ஆய்வு அணுகுமுறைகளாகப் பின்பற்றப்பட்டுள்ளன.

தமிழக வரலாற்றில் சங்ககாலச் சிற்றூர்ப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் ஆதி இனக்குழுச்சமூக எச்சங்களுடன் வாழ்ந்தவர்களாவர். அவர்கள் குழுக்களாக வாழ்ந்த சிற்றூர்களில் பேணப்பட்ட வாழ்வியல்களும், பண்பாடுகளுமே தமிழர்களின் அடையாளங்களாக இன்றுவரை நிலைத்துள்ளன. தமிழ்ச் சமூகத்தின் வேர்கள் சிற்றூர்களில்தான் உள்ளது என்ற கருதுகோளினை இவ்வாய்வு

கொண்டுள்ளது. செவ்வியல் நூல்களான எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களும் இவ்வாய்விற்கான முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. சங்ககால வாழ்வியல், சங்ககாலச் சிற்றூர்கள், சங்ககாலச் சமூகம், சங்ககால இனக்குழு மக்கள், சீறூர் மன்னர்கள் குறித்து தமிழில் வெளிவந்துள்ள ஆய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள் தொல்லியல் சான்றுகள் மற்றும் கள ஆய்வில் திரட்டிய தரவுகள் போன்றவை இந்த ஆய்விற்கான துணைமைச் சான்றுகளாக அமைகின்றன. முன்னுரை முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களை இந்த ஆய்வு கொண்டுள்ளது.

முதல் இயலில் ஆதிமனிதனின் குடியேற்றமும் இருப்பிடமும், சங்ககாலத் தமிழரின் திணைசார் இருப்பிடங்கள், நிலப்பகுப்பு, குடியிருப்புகள்-இருப்பிடங்கள் குறித்த சொல்லாடல்கள், கட்டுமானப் பொருட்கள், குறிஞ்சிநில இருப்பிடங்கள், குடியிருப்பும் அரணும், முல்லைநில இருப்பிடங்கள், முல்லைநில உழவர்கள் இருப்பிடம், முல்லை நிலவேட்டைத் தொழில் செய்வோர் இருப்பிடம், முல்லைநிலப் போர்வீரர்கள் இருப்பிடம், வீரர்கள் தங்கும் படைவீடுகள், பாலைநில இருப்பிடங்கள், பாலைநில அரண்கள், மருதநில இருப்பிடங்கள், மருதநில உழவர் இருப்பிடம், மருதநிலத்துத் தோப்புக் குடிகளின் இருப்பிடம், மருதநிலத்து அந்தணர் இருப்பிடங்கள், நெய்தல்நில இருப்பிடங்கள், பரதவர் குடியிருப்பு, நெய்தல்நில அரண்கள், சிறுகுடி, இருப்பிடங்களும் சூழலியலும், பொதுவான இருப்பிடங்கள், பொதியில் - மன்றம் போன்ற தலைப்புகளின்கீழ் சங்கத் தமிழர்களது சிற்றூர்களில் அமைக்கப்பட்டிருந்த வாழ்விடங்களைக் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

இரண்டாவது இயலில், சமூகம் - சமுதாயம் சொல்லாடல்கள், சமூகம் (Society), சமுதாயம் (Community) சமூகமும் சமுதாயமும், தொல்காப்பியர் காலச் சமூகம், மக்கட்பிரிவுகள், கலைஞர்கள் நிலை, சமூகத்தில் ஆண், சமூகத்தில் பெண், காமக்கிழத்தியரும் பரத்தையரும், சங்ககாலச் சமூகம், இனக்குழுக்களும் சீறூர் மன்னர்களும், ஐந்திணைச் சமூகமும் இனக்குழு வாழ்வும், சங்ககால அரசியல், சீறூர் மன்னர்கள், சீறூர்மன்னர் இயல்புகள், வறுமையும் கொடைச் சிறப்பும், வேந்துவிடு தொழில், பாதீடு, மகள் மறுத்தல், குறுநில மன்னரும் கிழார்களும், குறுநில மன்னர்கள், கிழார்கள், சமூகப் பாகுபாடுகள், குடி - குலம், குலக்குழுக்களும் பிரிவினைகளும் என்னும் உட்தலைப்புகளில் சங்ககாலச் சமூகம் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

வாழ்வியல் வேறுபாடுகள், சிற்றூர் மக்களின் பண்பாடுகளும், வாழ்வியல் கூறுகளும், உணவும் தொழில் முறைகளும், உணவும் சமூக மதிப்பீடுகளும், திணைவாரியாக உணவுகளும் தொழில்களும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, தமிழர் வாழ்வில் 'கள்', சங்ககாலச் சிற்றூர் மக்களின் பிற தொழில்கள், நம்பிக்கைகளும் வழிபாடும், சங்ககாலச் சிற்றூர்களில் நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும், வழிபாட்டுக் குறியீடுகள், வெறியாட்டு, நடுகல் வழிபாடு, வழிபாடுகளில் ஏற்பட்ட மாற்றங்கள் என்ற வகையில் சங்ககாலச் சிற்றூர் மக்களிடம் நிலவிய சில வாழ்வியல் கூறுகளை விவரிக்கும் விதமாக இவ்வியல் அமைகின்றது.

சங்ககால எச்சங்கள், தொல்லியல் எச்சங்கள், ஊர்களின் தோற்றமும் - ஊர்ப்பெயர் ஆய்வும், சங்ககாலத்தில் ஊர்ப்பகுப்பு, திணைசார் ஊர்கள், பேரூர் (Urban), சிற்றூர் (Rural), சங்ககாலத்து ஊர்கள், சங்ககாலத்துச் சிற்றூர்கள், திண்டுக்கல் மாவட்டத்தில் சங்ககால எச்சங்கள் காணப்படும் பகுதிகளான; கொடைக்கானல், பன்றிமலை (பண்ணிமலை), தாண்டிக்குடி, பொருந்தல் (பொருந்தில்), சிறுமலை, சிறுகுடி, ஐவர்மலை (அயிரைமலை), பழனிமலை போன்ற இடங்கள் குறித்தும், இன்றைய தமிழகத்தில் காணப்படும் சங்ககால வாழ்வியல் எச்சங்களை விவரிக்கும் நிழற்படங்களோடு விளக்கி உரைப்பதாக இவ்வியல் அமைகின்றது. முடிவுரை என்னும் பகுதியில் ஆய்வில் முன்மொழியும் முடிவுகள் பற்றியும், இதனைத் தொடர்ந்து எதிர்காலத்தில் நடைபெறவேண்டிய ஆய்வுகள் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. துணைநூற்பட்டியலில் ஆய்விற்குத் துணைநின்ற நூற்களை அகர வரிசைப்படி தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்வோடு தொடர்புடைய நிழற்படங்கள், நிலவரைபடங்கள்(Map) போன்றவை பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளன.

## இயல் - 1

## ஆய்வு அறிமுகம்

### 1.1 முன்னுரை

இந்தியாவின் முதுகெலும்பாகவும், உயிர்நாடியாகவும் விளங்குவது சிற்றூர்களேயாகும். எனவேதான் 'சிற்றூர் உயர நாடு உயரும்' என்றார் மகாத்மா காந்தி அவர்கள். நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் ஆதார விளைநிலமாக விளங்கும் சிற்றூர்களில் சமூக ஒழுக்கம், இனக்குழு வாழ்க்கை, உணவு உற்பத்தி, இயற்கைச் சூழல் போன்ற அடிப்படைக் காரணிகள் முக்கிய அங்கம் வகிக்கின்றன. சிற்றூர்களில் பண்பட்ட, உயரிய வாழ்க்கையினை மேற்கொண்ட நம் முன்னோர்கள் நாகரிக வளர்ச்சியிலும், இயற்கைப் பாதுகாப்பிலும் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர். இன்று அப்படிப்பட்ட தொன்மையான வாழ்வியலை நாம் மறந்து வாழ்ந்து வருகின்றோம். அதன் விளைவு சூழலியல் மாற்றம், சுற்றுச்சூழல் மாசு, நகர்மயமாதல் போன்ற சிக்கல்கள் ஏற்படுகின்றன. சிற்றூர்களின் அடையாளங்களே இல்லாத அளவிற்கு இன்று அவை அழிக்கப்பட்டு வருகின்றன. எனவே, சிற்றூர் வாழ்வின் இன்றியமையாமையை உணர்ந்து பண்டைய வாழ்வியல் கூறுகளை மீட்டுருவாக்கம் செய்வது காலத்தின் தேவையாகின்றது.

### 1.2 ஆய்வு நோக்கம்

இன்றைய நாகரிக வளர்ச்சி நம் பாரம்பரிய வரலாற்றை நம்மிடமிருந்து பறித்துச் சென்றுவிட்டது. அவ்வகையில் நம் சங்கத் தமிழர்களது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐவகை நிலங்களில் சிற்றூர்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இன்றைக்கு நகர்மயமாதல் என்னும் கொள்கையால் பல சிற்றூர்களும் அவற்றின் அடையாளங்களும் அழிந்து வருகின்றன. இத்தருணத்தில் சங்ககால எச்சங்கள் குறித்த தேடலும் அதனை

ஆவணப்படுத்த வேண்டியதும் அவசியமாகின்றது. ஆகவே சங்ககாலச் சிற்றூர் மக்களின் வாழ்வியல், அதற்கு ஆதாரங்களாக விளங்கும் தொல்லியல் எச்சங்கள், அக்காலப் பண்பாட்டு அடையாளங்கள் குறித்து ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**1.3 ஆய்வுத் தலைப்பு**

சங்ககாலச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்களையும், அவர்களது வாழ்வியல், பண்பாடுகள், அவர்கள் வாழ்ந்த சமூகத்தின் நிலை போன்றவற்றைக் குறித்த ஆய்வாதலின் "சமூகப் பண்பாட்டு நோக்கில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்" என்னும் தலைப்பினை இவ்வாய்வு கொண்டுள்ளது.

**1.4 ஆய்வு முன்னோடிகள்**

சங்ககாலச் சமூகம் குறித்த ஆய்வுகள் நீண்ட காலமாகவே நடைபெற்று வருகின்றன. அவற்றில் மு.சண்முகம் பிள்ளை அவர்களின் 'சங்கத் தமிழர் வாழ்வியல்' மற்றும் ந.சுப்பிரமண்யன் அவர்களின் 'சங்ககால வாழ்வியல்', சு.வித்தியானந்தன் அவர்களின் 'தமிழர் சால்பு' ஆகியவை இவ்வாய்விற்கான முன்னோடி ஆய்வுகளாக அமைகின்றன.

**1.5 ஆய்வுக் கருதுகோள்**

இன்றைக்கு இருப்பது போன்றே சங்ககாலத்திலும் சிற்றூர், பேரூர் என்ற பாகுபாடுகள் இருந்தன. சங்ககாலச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்களே தமிழகத்தின் ஆதிச்சமூக எச்சங்களாக விளங்கியவர்களாவர். அவர்களது வாழ்வியல் முறைகளே தமிழர்களின் பண்பாட்டு அடையாளங்களாக விளங்குகின்றன. ஆகவே தமிழ்ச் சமூகத்தின் வேர்கள் சிற்றூர்களில்தான் உள்ளன என்ற கருதுகோளினை இவ்வாய்வு கொண்டுள்ளது.

**1.6 ஆய்வு அணுகுமுறை**

சங்ககாலச் சமூகம் குறித்த ஆய்வாதலின் சங்க இலக்கியங்கள் விவரிக்கும் சமூகவியல் கருத்துக்களை முன்வைத்து ஆய்கின்ற காரணத்தினால் விளக்கவியல் (Descriptive Approach) ஆய்வுமுறையினையும்,

சங்ককாலச்சமூகம் குறித்த புரிதல்களை முன்வைப்பதால் சமூகவியல் (Social Approach) ஆய்வுமுறையினையும், சங்ககாலச் சிற்றூர்ச் சமூகத்தினை இன்றைய சிற்றூர் எச்சங்களோடு பொருத்திப் பார்ப்பதால் ஒப்பீட்டு ஆய்வுமுறையினையும் (Comparative Method) தொடர்புடைய களங்களில் நேரடிக் கள ஆய்வு செய்துள்ளமையால் கள ஆய்வுமுறையினையும் (Fieldwork Method) இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளது.

### 1.7 ஆய்வு எல்லை

சங்ககாலச் சமூகம் குறித்த இவ்வாய்வில் செவ்வியல் இலக்கியங்களான, சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆய்வு எல்லைகளாக அமைகின்றன. திண்டுக்கல் மாவட்டத்தில் தொல்லியல் ஆய்வுகள் நடைபெற்ற இடங்களும், சங்ககால எச்சங்கள் இருக்கக்கூடிய பகுதிகளும், திணைசார் அடையாளங்களுடன் அமைந்துள்ள ஊர்களும் களஆய்வுக்கான எல்லைகளாக அமைகின்றன.

### 1.8 சான்றாதாரங்கள்

#### I. முதன்மைச் சான்றுகள்

செவ்வியல் நூல்களான எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களும் இவ்வாய்விற்கான முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

#### II. துணைமைச் சான்றுகள்

சங்ககால வாழ்வியல், சங்ககாலச் சிற்றூர்கள், சங்ககாலச் சமூகம், சங்ககால இனக்குழு மக்கள், சீறூர் மன்னர்கள் குறித்து தமிழில் வெளிவந்துள்ள ஆய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள் தொல்லியல் சான்றுகள் மற்றும் கள ஆய்வில் திரட்டிய தரவுகள் போன்றவை இந்த ஆய்விற்கான துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

### 1.9 இயல்பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

1. சங்கத்தமிழரின் வாழ்விடமும் வகைப்பாடும்
2. சங்ககாலச் சமூகமும் அதன் உட்கூறுகளும்
3. சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல் கூறுகள்
4. இன்றைய தமிழகத்தில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வின் எச்சங்கள்

- **சங்கத்தமிழரின் வாழ்விடமும் வகைப்பாடும்**

ஒவ்வொரு தனிமனிதனுக்குமான அடிப்படைத் தேவைகள் மூன்று; அவை உணவு, உடை, உறைவிடம். மனித நாகரிக வளர்ச்சியில் இம்மூன்றும் முக்கியப்பங்கு வகிப்பவையாகும். சமூகத்தின் அடிப்படையாக விளங்குவது குடும்பம் ஆகும். இக்குடும்பம் நிலைபெற்றிட உறைவிடம் எனும் இருப்பிடம் மிகவும் அவசியமான ஒன்றாக அமைகின்றது. மனிதர் தம் இனத்தாரோடு சேர்ந்து வாழவும், தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும் தம் உடைமைகளைப் பாதுகாக்கவும் இருப்பிடங்கள் துணைபுரிகின்றன. இப்புவியில் வாழும் ஒவ்வொரு உயிரினங்களும் அதன் தேவைக்கேற்ப இருப்பிடம் ஒன்றை அமைத்துக் கொண்டு வாழ்கின்றன நாகரிகமும், பகுத்தறிவும் படைத்த மனிதனுக்கு சமூக அங்கீகாரத்தைப் பெற்றுத்தருவது இருப்பிடங்களேயாகும்.

நாகரிகம் அறியாத காலத்தில் ஆதிமனிதன் நாடோடிகளாகக் குகைகளிலும், மரப்பொந்துகளிலும் ஆங்காங்கே கிடைத்ததை உண்டு வாழ்ந்து வந்ததாகவும், பின்பு நெருப்பு, நீர் போன்றவற்றின் பயன்பாட்டினை உணர்ந்ததன் விளைவாக நிலையான வாழ்வும், நாகரிகமும் தோன்றியதாக மானுடவியல் அறிஞர்களும், வரலாற்று ஆய்வாளர்களும் கருதுகின்றனர். குடும்பம் என்ற அமைப்பு இருப்பிடங்கள் உருவானதின் தொடர்ச்சியாகவே

உருப்பெற்றது. இப்பரிணாம வளர்ச்சியின் பின்புலத்தில் நோக்குகையில் நம் சங்கத்தமிழர்கள் வாழ்வில் நாகரிகமும், பண்பாடும் தொன்றுதொட்டு நிலவிவந்ததை உணரமுடிகின்றது. அவ்வகையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களின் தன்மைக்கேற்ப தம் இருப்பிடங்களை அமைத்துக்கொண்டனர். சங்ககாலத்தில் ஒவ்வொரு திணையிலும் எவ்வகையான இருப்பிடங்களில் மக்கள் வாழ்ந்தனர் என்பதையும், சங்ககாலச் சிற்றூர் மக்கள் வசித்த வீடுகள், வீடுகளைச் சுற்றி உருவாக்கிய அரண்கள் (வேலி), பொதுவிடங்கள் குறித்தும் இவ்வியல் ஆராய்கின்றது.

- **சங்ககாலச் சிற்றூர் சமூகமும் அதன் உட்கூறுகளும்**

நாடோடிகளாக வாழ்ந்த ஆதிமனிதன் ஒரு கட்டத்தில் நிலையாக ஓரிடத்தில் வாழத் தொடங்கினான். விலங்குகள் போல் பொதுப்புணர்ச்சி மேற்கொண்ட அவன் வாழ்க்கை மாற்றம் பெற்று, நாகரிகமும் அறிவு வளர்ச்சியும் ஏற்பட்டது. அதன் விளைவாகத் தமக்கெனத் தனித் துணையினைத் தேர்ந்து கொண்டான். வசிப்பதற்கு உகந்த இருப்பிடத்தினை உருவக்கினான். இச்செயல்களின் வாயிலாக, குடும்பம் என்ற சமூக நிறுவனம் படிப்படியாகத் தோற்றம் பெற்றது. உணவுக்கென வேட்டையாடச் செல்கையில் தனியே செல்லாது கூட்டாகச் செல்வது நல்ல பயனளித்தது. அதனால் ஒவ்வொரு குடும்பமும் அருகிலுள்ளோரிடம் சமூக உறவு கொண்டு வாழவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கொண்டும் கொடுத்தும் வாழ்ந்த அம்மக்கள் சமூகம் என்ற வட்டத்திற்குள் தங்களை இணைத்துக் கொண்டனர். இவ்வாறாக ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த மக்கள் இனக் குழுக்களாக, கூட்டுச் சமூகமாக இணைந்து வாழ்ந்தனர்.

இனக்குழு மக்கள் தம் அன்றாட வாழ்வில் வேட்டையாடல், பயிரிடல் எனப் பல்வேறு தொழில்களை மேற்கொண்டனர். தொழில்களின்

அடிப்படையில் குலங்கள் அடையாளப்படுத்தப்பட்டன. திணைசார் மக்கள் தங்களுக்குள் ஒருவரைத் தலைவனாக ஏற்றுக்கொண்டனர். அவ்வகையில், ஐவகை நிலங்களிலும் காணப்பட்ட ஒவ்வொரு இனக்குழுவிற்கும் ஒரு தலைவன் முன்னிலைப் படுத்தப்பட்டான். குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்ட சிற்றூர்ப் பகுதிகளில் வாழும் குடிகளின் தலைமைப் பொறுப்பினை ஏற்பவன் இனக்குழுத் தலைவன் எனப்பட்டான். இத்தகு தலைவர்களைச் சீறூர் மன்னரென இலக்கியங்களில் புலவர்கள் அடையாளப்படுத்துகின்றனர். தம் இனத்தாரைக் காக்கவும், வழிநடத்தவும் வேண்டிய பொறுப்பு அவனுக்கு உரியதாகும். சங்ககாலத்தில் சிற்றூர்ப் பகுதிகளில் இத்தகு சீறூர் மன்னர்களே கோலோச்சினர். பிற்காலங்களில் வலிமை வாய்ந்த அரசர்களால் சீறூர்மன்னர்களும், சீறூர்களும் சூரையாடப்பட்டன. சங்ககாலச் சமூகத்தில் பாகுபாடுகள் புகுத்தப்பட்டன. அவ்வகையில், சங்ககாலச் சிற்றூர்களில் நிலவிய சமூகக் கட்டமைப்பு, அங்கு வாழ்ந்த சீறூர் மன்னர்களின் இயல்புகள், அக்காலத்தைய சமூகப் பிரிவினைகள் குறித்து ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

- **சங்ககாலச் சிற்றூர் மக்களின் வாழ்வியல் கூறுகள்**

இனக்குழு வாழ்வு மேற்கொண்ட ஆதித் தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் அனுபவங்களை எல்லாம் பதிவு செய்து வைத்திருக்கும் ஆவணக்காப்பகமாக விளங்குவதே சங்க இலக்கியங்களாகும். சங்ககால ஐந்திணைகளில் வாழ்ந்த சிற்றூர் மக்கள் பண்பட்ட வாழ்வியலைக் கொண்டிருந்தனர். தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் வரலாற்றினை அறிந்திடப் பன்முக நூலான தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களுமே முதன்மையான மற்றும் முழுமையான ஆதாரங்களாக விளங்குகின்றன. அவற்றைக் கொண்டு ஆராய்கையில் ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த மக்கள், தாங்கள் வாழ்ந்த நிலவியல் சூழலுக்கேற்ப வெவ்வேறு வாழ்வியல் கூறுகளைக்

கொண்டிருந்தனர். இலக்கணநூலார் வகுத்திட்ட கருப்பொருள் பகுப்பினை நோக்கினால் அது புலப்படும். சங்ககாலச் சமூக அரசியல் இயங்குதளத்தில் சிற்றூர்களே அடிப்படை அங்கமாக விளங்கின. பண்டைய இனக்குழு மரபினைப் போற்றிப் பின்பற்றியவர்கள் சிற்றூர்களிலேயே வாழ்ந்தனர். அவ்வகையில், சங்க காலச் சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழு மக்களின் அன்றாட வாழ்வில் இடம்பெற்ற உணவுமுறை, சடங்குகள், நம்பிக்கைகள், தொழில்முறைகள் போன்றவைகள் குறித்து விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

- **இன்றைய தமிழகத்தில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வின் எச்சங்கள்**

சங்க இலக்கியங்கள் வழி அறியலாகும் தமிழ்க்குடிகளின் வாழ்வியல் பற்றிய செய்திகள் யாவும் சற்றேறக்குறைய வரலாற்றுப் பதிவுகளாகவே அமைந்துள்ளன. ஒரு நாட்டின் மொழி, இனம், நிலவியல் குறித்த தொன்மையினை அறியவும், அதனை நிரூபிக்கவும் தொல்லியல் எச்சங்கள் முக்கியப்பங்கு வகிக்கின்றன. எனவேதான் ஒவ்வொரு நாட்டிலும் தொல்லியல் அகழ்வாய்வுகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. அவ்வாறு நடைபெறும் ஆய்வுகள் மூலமாக வெளிக்கொணரப்படும் வாழ்வியல் எச்சங்களை உய்த்துணர்ந்து, பண்டைய வாழ்வியல் முறைகளையும், பண்பாடுகளையும், வரலாற்று நிகழ்வுகளையும் அறிந்துகொள்ளமுடிகின்றது. பொதுவாக, வரலாறு என்பது நடந்து முடிந்த நிகழ்வுகள் குறித்ததாகும். குறிப்பிட்ட ஒரு துறையினைக் குறித்த வரலாறு என்பது, அத்துறை தொடர்புடைய எழுத்துப் பூர்வமான ஆதாரங்கள், தொல்படிமங்கள் போன்ற பல்வேறு மூலங்களில் இருந்து பெறப்படும் தகவல்களை அறிவியல் பூர்வமாக ஆராய்ந்து பகுத்து முடிவுகள் பெறுவதாகும். இதன் மூலம் பல பண்பாடுகளும், பழக்கவழக்கங்களும் வெளிக்கொணரப்படும். சங்ககாலத்தில் வாழ்ந்த மக்களின்

வாழ்வியல் எச்சங்களில் சில புதைபொருள்களாகக் கிடைக்கும் தொல்லியல் எச்சங்களாகவும், மக்களது அன்றாட வாழ்விலும் இன்றளவும் நிலைபெற்றிருப்பதனைக் காண முடிகின்றது. அவற்றை ஆய்வு செய்து, இனங்கண்டு தொகுப்பதன் வாயிலாக அக்காலத்தைய சமூகத்தினைப் புரிந்துகொள்ள இயலும். சங்ககால இனக்குழுக்கள் வாழ்ந்த பகுதிகள்; குறிச்சி, குடி, பாடி, சேரி, ஊர், சீறூர், சிற்றூர், மூதூர் என அழைக்கப்பட்டன. அதே வடிவில் இன்றுள்ள ஊர்கள் அழைக்கப்படுவது சிந்திக்கத்தக்க ஒன்றாகும். மனிதனின் மரபணுவில் அவனது முன்னோர்களின் தாக்கம் தொன்றுதொட்டு இருந்து வருவது அறிவியல் உண்மை. அதற்கேற்ப ஏறத்தாழ 3000 ஆண்டுகட்கு முற்பட்ட சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல் இன்றைய தமிழகச் சிற்றூர்களில் காணப்படுகின்றனவா? என்ற கேள்வியோடு இன்றைய காலச்சூழலில் நிலவக்கூடிய சங்ககால வாழ்வின் எச்சங்களைப் பலதரப்பட்ட தரவுகள் மூலமாகவும், திண்டுக்கல் மாவட்டத்தில் தொல்லியல் ஆய்வுகள் நடைபெற்ற இடங்கள் மற்றும் தொடர்புடைய இடங்களில் கள ஆய்வு மேற்கொண்டு விவரிப்பதாகவும் இவ்வியல் அமைகிறது.

- சங்ககாலச் சிற்றூர் மக்கள் வாழ்ந்த வாழ்வியல், சீறூர்மன்னர்கள் வீழ்ச்சிக்கான காரணங்கள், சங்ககாலத்தில் நிலவிய சமூகப் பாகுபாடுகள், இன்றைக்குக் கிடைக்கக்கூடிய சங்ககால எச்சங்கள் அவற்றை பாதுகாப்பதன் அவசியம் குறித்து ஆய்வில் ஒட்டுமொத்தமாக அறியப்பட்ட முடிவுகள் தொகுப்புரையில் கூறப்பட்டுள்ளன. இந்த ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ள முதன்மைத் தரவுகளும், துணைமைத் தரவுகளும் அகரவரிசைப்படி துணைநூற்பட்டியலில் தரப்பட்டுள்ளன. இந்த ஆய்வுடன் தொடர்புடைய புகைப்படங்கள் மற்றும் நில வரைபடங்கள் (Map), கள ஆய்வு சென்ற ஊர்களின் பட்டியல் பிற்சேர்க்கையில் தரப்பட்டுள்ளன.

## இயல் - 2

## சங்கத் தமிழரின் வாழ்விடமும் வகைப்பாடும்

### 2.1 முன்னுரை

ஒவ்வொரு தனிமனிதனுக்குமான அடிப்படைத் தேவைகள் மூன்று; அவை உணவு, உடை, உறைவிடம். மனித நாகரிக வளர்ச்சியில் இம்மூன்றும் முக்கியப்பங்கு வகிப்பவையாகும். சமூகத்தின் அடிப்படையாக விளங்குவது குடும்பம் ஆகும். இக்குடும்பம் நிலைபெற்றிட உறைவிடம் எனும் இருப்பிடம் மிகவும் அவசியமான ஒன்றாக அமைகின்றது. மனிதர் தம் இனத்தாரோடு சேர்ந்து வாழவும், தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும் தம் உடைமைகளைப் பாதுகாக்கவும் இருப்பிடங்கள் துணைபுரிகின்றன. இப்புவியில் வாழும் ஒவ்வொரு உயிரினங்களும் அதன் தேவைக்கேற்ப இருப்பிடம் ஒன்றை அமைத்துக் கொண்டுதான் வாழ்கின்றன. அவ்வகையில் சங்ககால ஐந்திணைகளில் ஒவ்வொரு திணையிலும் எவ்வகையான இருப்பிடங்களில் மக்கள் வாழ்ந்தனர் என்பதையும், சங்ககாலச் சிற்றூர் மக்கள் வசித்த வீடுகள், அவர்களது வீடுகளைச் சுற்றி உருவாக்கிய அரண்கள் (வேலி), பொதுவிடங்கள் குறித்தும் இவ்வியல் ஆராய்கின்றது.

### 2.2 ஆதிமனிதனும் இருப்பிடம் உருவாக்கமும்

நாகரிகம் அறியாத காலத்தில் ஆதிமனிதன் நாடோடிகளாகக் குகைகளிலும், மரப்பொந்துகளிலும் ஆங்காங்கே கிடைத்ததை உண்டு வாழ்ந்து வந்ததாகவும், பின்பு நெருப்பு, நீர் போன்றவற்றின் பயன்பாட்டினை உணர்ந்ததன் விளைவாக நிலையான வாழ்வும், நாகரிகமும் தோன்றியதாக மானுடவியலறிஞர்களும், வரலாற்று ஆய்வாளர்களும் கருதுகின்றனர். குடும்பம் என்ற அமைப்பு அதன் தொடர்ச்சியாக உருப்பெற்றது. இப்பரிணாம வளர்ச்சியின் பின்புலத்தில் நோக்குகையில் நம் சங்கத்தமிழர்கள் வாழ்வில்

நாகரிகமும், பண்பாடும் தொன்றுதொட்டு நிலவிவந்ததை உணரமுடிகின்றது. அவ்வகையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களின் தன்மைக்கேற்ப தம் இருப்பிடங்களை அமைத்துக்கொண்டனர். இன்றைய சூழலில் இருப்பிடங்களின் தேவையினை நோக்குமிடத்து, "ஐந்தில் ஓர் இந்தியருக்குச் சொந்தமான வீடோ, உறுதியான வீடோ கிடையாது; இந்தியாவில் குடிசைகளில் வசிப்பவர்களின் எண்ணிக்கை 6.2 கோடி"[1] எனப் புள்ளிவிவரங்கள் கூறுகின்றன. எனவே, இருப்பிடங்கள் குறித்துச் சிந்திக்க வேண்டியது அவசியமாகிறது. தொடக்க காலங்களில் மனிதனும் விலங்குகளைப் போன்றே குகை, பாறை இடுக்குகள், மரப்பொந்துகள் போன்றவற்றில்தான் வாழ்ந்திருக்கக்கூடும். பறவைகள் கூடுகட்டி வாழ்வதையும், விலங்குகள் தாம் தங்குவதற்கு ஏற்றவகையில் குகை முதலியவற்றை நாடி வாழ்வதையும் கண்டுணர்ந்த மனிதன் தானும் தங்குவதற்கு ஓர் இடம் அவசியம் என்று எண்ணத் தொடங்கினான்.

நாடோடிகளாக நிலையற்ற வாழ்வினை மேற்கொண்ட ஆதிமனிதன், நாளடைவில் ஓய்வெடுப்பதற்காக ஓரிடத்தினைத் தேர்வு செய்ய நேர்ந்தான். அங்ஙனம் பிற இயற்கைச் சக்திகளிடமிருந்து தன்னைப் பாதுகாக்க முற்பட்ட நிலையே இருப்பிடங்கள் தோன்றக் காரணமானது. இதுபோன்ற நிகழ்வுகளின் விளைவாகவே இருப்பிடம் உருப்பெற்றது எனலாம். மனித வாழிடங்கள் என்பவை வீடுகளையும், அதனைச் சுற்றியுள்ள அவர்களோடு தொடர்புடைய இதர இடங்களையும் குறிப்பதாகும். அறிவியல் பரிணாமக் கோட்பாடுகளின் அடிப்படையில் பல்வேறு படிநிலைகளைக் கடந்து வந்துள்ள மனித இனம்; அநாகரிக நிலை, காட்டுமிராண்டி நிலை, நாகரிக நிலை எனத் தனது வாழ்வினை நகர்த்தி வந்துள்ளதை மானிடவியல் ஆய்வாளர்கள் மெய்ப்பிக்கின்றனர். மனிதன் நாடோடி வாழ்வை விடுத்து நிலையான சமூகக் கட்டமைப்பை உருவாக்கிட வேராக விளங்கியவை இருப்பிடங்களேயாகும். நாடோடிகளாகச் சமூகமயமாகாமல் வாழ்ந்து வந்த மனிதன் குழுவாக

இணைந்து வாழத்துவங்கிய நாள் முதல் கூட்டுச்சமூகம் என்ற அமைப்பு உருப்பெற்றது. இரத்த உறவுடைய இனக்குழுக்கள் தம் தேவைகளுக்கு உகந்த பகுதிகளில் வாழத்தொடங்கினர். தனிமனிதன் ஒவ்வொருவருக்குமான இருப்பிடத் தேவையினை நிறைவேற்ற ஆங்காங்கே இயற்கையாகக் கிடைக்கப்பெற்ற மூலப்பொருட்களைக் கொண்டு இருப்பிடங்களை உருவாக்கினர். அவ்வாறு உருவாக்கப்பட்ட பல இருப்பிடங்கள் சேர்ந்தது ஊர் எனப்பட்டது. கால ஓட்டத்தில் நாகரிகத்தின் படிநிலைமாற்றம் உயர்வை எட்ட, எட்ட இவ்விருப்பிடங்களின் அமைப்பும் மாறத் தொடங்கின. ஆரம்ப காலகட்டங்களில் இலை, தழை, புல், விலங்குகளின் தோல் முதலியவற்றை மரக்கம்புகளைக் கொண்டு இணைத்துக் குடிசை போன்ற வீடுகளை அமைத்து வாழ்ந்த மனிதன்; பின்னாளில் கற்கள், செங்கல், மரங்கள், மண், சுண்ணாம்பு போன்றவற்றைக் கொண்டு உறுதியான இருப்பிடங்களை உருவாக்கக் கற்றுக்கொண்டான். இருப்பிடங்கள் அமைத்ததன் விளைவாகக் குடும்பம், சமூகம், ஊர், அரசு என்ற கட்டமைப்பு நிலையாக உருப்பெற்றன. பழந்தமிழ்ப் பாடல்களில் தமிழர்கள் தங்கியும், கூடியும் வாழ்ந்த இருப்பிடங்கள் குறித்த செய்திகள் பல்வேறு இடங்களில் பதிவாகியுள்ளன.

சங்ககாலச் சிற்றூர்களிலும், பேரூர்களிலும் வேறுபட்ட தன்மைகளில் வெவ்வேறான வடிவமைப்புகளில் இருப்பிடங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வகையில் பேரூர்களில் வாழ்ந்து கோலோச்சிய அரசர்கள், நிலவுடைமையாளர்கள், செல்வந்தர்கள் கோட்டைகளிலும், மாளிகைகளிலும் வசித்ததை இலக்கியங்கள் பகர்கின்றன. சீறூர் மன்னர்களும், இனக்குழுத் தலைவர்களும் ஏனைய சிற்றூர் மக்களும் எளிய இருப்பிடங்களில் வாழ்ந்ததனைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியலாம். ஆப்பிரிக்க மற்றும் தெற்கு ஆசிய நாடுகளில் தான் முதல் மனித இனம் தோன்றியது, பின்பு அங்கிருந்து புலம்பெயர்ந்து பல்வேறு பகுதிகளுக்கும் சென்று குடியேறி வாழ்ந்தனர் என்பதே பெரும்பான்மையான ஆய்வாளர்களின் கருதுகோளாக

இருந்து வருகின்றது. அப்படித் தோன்றிய மனிதனின் வளர்ச்சிக் காலகட்டத்தினைப் பழங்கற்காலம், இடைக்கற்காலம், புதியகற்காலம் என வரலாற்று ஆய்வாளர்களும், மானிடவியல் ஆய்வாளர்களும் பொதுவாக வகைப்படுத்துவர். இப்படிநிலைகளில் உணவு தேடல் மற்றும் வேட்டையாடல் காலம் (Hunting Stage), உணவு சேகரிப்புக் காலம் (Gathering Stage), உணவு உற்பத்திக் காலம் (Producing Stage) எனப் பரிணமித்து வளர்ந்து வந்தமையினை ஆய்வாளர்கள் விவரிக்கின்றனர். திறந்த வெளியில் வாழ்ந்துவந்த தொல்பழங்கால மனிதர்கள் தாங்களாகவே தமது வாழிடங்களை அமைக்க முற்பட்ட தொடக்க காலங்களில் வேட்டையாடுபவர்களாகவும், உணவுப் பொருள்களைச் சேகரித்து உண்பவர்களாகவுமே இருந்தனர். அவர்கள் உணவுப் பொருட்களைத் தேடி அலைந்து திரிந்தனர். அதனால் முறையான வாழிடங்களை அமைத்திருப்பதற்கு வாய்ப்புகள் மிகமிகக் குறைவு.

பிற்காலங்களில் இயற்கைச் சீற்றங்களைக் கண்டு அஞ்சி இயற்கையான கற்குகைகளில் தஞ்சம் புகுந்தனர். நாளடைவில் தங்கள் இருப்பிடமாக அக்குகைகளை மாற்றிக் கொண்டனர். வேளாண்மை செய்யக் கற்றுக்கொண்ட பின்னர், மனிதர் ஓரிடத்தில் தொடர்ந்து நிலையாக வாழத் தலைப்பட்டபோது, தங்களுக்கான வாழிடங்களையும் அமைத்துக்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. அவ்வகையில் தாங்கள் வாழும் இடங்களைச் சுற்றிலும் இயற்கையாகக் கிடைக்கக்கூடிய புற்கள், இலைதழைகள், மரக்கம்புகள், செடிகொடிகள் போன்ற மூலப்பொருட்களைக் கொண்டு இருப்பிடங்களை உருவாக்கினர். சான்றாக, சில மேலைநாட்டுத் துருவப்பகுதிகளிலும், குறிப்பாக ஆர்க்டிக் பகுதிகளில் ஆண்டு முழுவதும் பனிசூழ்ந்து காணப்படும். அங்கு வாழும் எஸ்கிமோக்கள் என்னும் ஒருவகை பழங்குடி இனத்தவர் அங்குள்ள பனிக்கட்டிகளைக் கொண்டே தங்கள் இருப்பிடங்களை உருவாக்கிக் கொள்கின்றனர். அதற்கு ‘இக்லூ’ (Igloo) என்று பெயர். இவ்வீடுகள் பொதுவாக ஓர் அரைக்கோள வடிவத்தில் இருக்கும்.

வெப்ப மண்டல நாடுகளைப் பொருத்தவரை அங்கு வாழ்ந்த மனிதன் தொடக்கத்தில் அவனே முயன்று உருவாக்கிய இருப்பிடங்கள் குடிசைகளே. "மிகப் பழங்கால மனிதர்கள் குகைகளிலேயே வாழ்ந்தனர் என்றும் மனிதர்களின் முதல் வாழிடம் குகையே என்றும் பொதுவான கருத்து உண்டு. எனினும், வீடுகளின் வரலாறு பற்றி எழுதிய நோபர்ட் இசுக்கோனர் (Norbert Schoenauer) என்பவர் இதை மறுத்து உலகின் பல பகுதிகளில் குடிசைகளே மக்களின் முதல் வாழிடங்களாக இருந்தன என்கிறார்"[2] இக்குடிசைகள் விரைவில் அழியக்கூடிய பொருட்களினால் கட்டப்பட்டவை என்பதால் தமிழகத்தில் இவற்றின் எச்சங்கள் எதுவும் தொல்லியல் சான்றுகளாகக் கிடைக்கவில்லை.

மேலைநாடுகளில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில் சில தடயங்கள் கிட்டியுள்ளன. "நத்தூபியப் பண்பாட்டு மக்கள் உலர் கற்கட்டுமான முறையில் அமைக்கப்பட்டவையும் ஒரு பகுதி நிலத்துக்குக் கீழ் அமைந்தவையுமான குழிவீடுகள் எனப்படும் குடிசைகளைக் கட்டி வாழ்ந்ததற்கான தொல்லியல் தடயங்கள் கிடைத்துள்ளன. வட்ட வடிவம் கொண்ட இவை கி.மு. 9000க்கு முற்பட்டவை. இப்பகுதியில் கி.மு. 9000 க்கும் கிமு 7000 க்கும் இடைப்பட்ட காலத்தில் குழைத்த குழைமண் கற்களைக் கொண்டு குடிசைகள் அமைக்கப்பட்டன. இக்காலத்திலேயே குடிசைகள் செவ்வகத்தள அமைப்பைக் கொண்டவையாக மாற்றம் பெற்றன. இப்பகுதியில் காணப்படும் குடிசைகள் தொடர்பான தொல்லியல் எச்சங்களே தற்போது அறியப்பட்டவற்றுள் மிகப் பழையன. எனினும், இது போன்ற குடிசை அமைப்புக்களும் படிவளர்ச்சியும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் பல்வேறு கால கட்டங்களில் இடம்பெற்றமைக்கான சான்றுகள் உள்ளன"[3] என்ற செய்தியின் வாயிலாகப் பண்டைய மனிதன் உருவாக்கிய இருப்பிடம் குறித்து அறிய முடிகிறது.

குறிஞ்சி எனப்படும் மலைப் பகுதிகளிலேயே முதல் மனிதன் தோன்றினான் என்று மானிடவியல் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அவ்வாறு அங்கு தோன்றிய மனிதன் அங்கிருந்து பிற இடங்களுக்குப் பரவினான். இப்பரவல் உணவுத்தேவை மற்றும் தொழில்சார் அறிவு வளர்ச்சியின் விளைவால் ஏற்பட்டது எனலாம். அதனடிப்படையில், மலையினை ஒட்டிய காடுகளில் தடம் பதித்து அங்குக் காணப்பட்ட விலங்குகளை வேட்டையாடியும், சில விலங்குகளைப் பழக்கி உடன் வைத்துக் கொண்டும் வாழ்ந்தான். வளம் நிறைந்த மருத நிலத்தினை அடைந்த போது பயிர் செய்யவும், உணவுப் பொருட்களைச் சேமித்து வைக்கவும் கற்றுக் கொண்டான். உணவுத் தேவையின் பொருட்டு பெரும்பாலான மனித குடியேற்றங்கள் நீர்ப்பாங்கான இடங்களை ஒட்டியே அமைந்தன. ஆறுகள் மூலம் பயணம் செய்யத் தெரிந்த பின் கழிமுகங்களாகிய கடற்கரை ஓரங்களிலும் குடியேற்றங்கள் அமைந்தன. ஆதியில் வாழ்ந்த மனிதனுக்கு இருப்பிடம் அவசியமாகியிருக்க வாய்ப்பில்லை. மரங்களில் உள்ள பழங்களைப் பறித்து உண்பதும், குகைகளில் பதுங்கியிருக்கும் விலங்குகளை வேட்டையாடி உணவினைப் பெறும் பொருட்டும் ஆங்காங்கே பொழுதினைக் கழித்து வாழ்ந்திருக்க வேண்டும். இதுபோன்ற வாழ்க்கை தனிமனிதனாகவும், நாடோடியாகவும் வாழ்ந்த போது பொருத்தமாக இருந்திருக்கலாம். குடும்பம் எனும் அமைப்பு ஏற்பட்டு, இனக்குழுக்களாகச் சேர்ந்து வாழ்கின்ற போது இருப்பிடங்கள் அவசியமாகின்றன.

காலப்போக்கில் மரங்களில் கூடு கட்டி வாழும் பறவையினங்களைக் கண்டு தாமும் அதுபோல் வாழ முற்பட்டு, மரங்களில் பரண் போன்ற வீடுகளை ஏற்படுத்தி வாழ்ந்திருக்கலாம். இக்கூற்றினை மெய்ப்பிக்கும் விதமாக, ஆப்பிரிக்க பழங்குடியினர் தம் வீடுகளை மரங்களில் அமைத்துக் கொண்டு வாழ்ந்து வருவது இங்கு நோக்கத்தக்கதாக உள்ளது. தவிர, நம்

தமிழகப் பழங்குடிகளில் சிலர் மரங்களின் மேல் வீடுகள் அமைத்து வாழ்ந்ததைக் காணமுடிகிறது. "பளியர்கள் பெரிய மரக்கிளைகளின் மீது பரண் அமைத்தும், குகைகளின் உள்ளேயும், பாறைகளுக்கு இடையேயும் வசித்தார்கள்"[4] என்ற செய்தி மேற்கண்ட கூற்றினை மெய்ப்பிக்கத் தகுந்த சான்றாக உள்ளது. மேலும் தமிழகம் மற்றும் கேரளாவில் வாழும் 'ஊராளி' என்னும் பழங்குடியினர் அண்மைக்காலம் வரை மரங்களில் பரண் போன்ற குடிசைகள் அமைத்துக் காடுகளில் வாழும் மரபினைக் கொண்டிருந்தனர். கொடிய விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாக்கும் பொருட்டு இத்தகைய இருப்பிடங்களைத் தேர்வு செய்தனர். தென்னிந்தியாவைப் பொருத்த மட்டில் இயற்கையான கற்குகைகளும், மலை இடுக்குகளும், பாறைப் பிளவுகளும் கற்கால மக்கள் தங்குவதற்கும், பாதுகாப்பிற்கும் உகந்த ஒன்றாகத் திகழ்ந்தது. தமிழகத்தில் பையம்பள்ளி, மயிலாடும்பாறை, மோதூர் போன்ற இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளில் இருப்பிடங்கள் பற்றிய தரவுகள் கிடைத்துள்ளன. சங்ககால மக்கள் குகைகளில் தங்கியமைக்கான குறிப்புகள் (கல்லளை) கிடைக்கின்றன. "திரு.வில்லியம்கிங் அவர்களால் ஆதிமனிதன் தங்கி வாழ்ந்த 16 குகைகள் அக்கிரம்பாக்கம் அருகே கண்டறியப்பட்டுள்ளன"[5] என்னும் ஆய்வுத் தகவல் இதற்கு வலுசேர்ப்பதாகும்.

புதிய கற்காலம் என்னும் காலகட்டத்தில் சமூக வளர்ச்சியின் ஆரம்ப நிலைகள் உருவாகத் தொடங்கியதன் விளைவால் இருப்பிடங்களில் மாற்றங்கள் ஏற்பட்டன. இருப்பிடங்களைத் தாங்களே உருவாக்கத் தொடங்கினர். அதன் முதல்படியாகக் குடிசை வீடுகளை அமைக்கக் கற்றுக்கொண்டனர். கற்கள், மரக்கம்புகள், மூங்கில்கள், புற்கள், நார்கள் கொண்டு கூரைகள் அமைத்தனர். இந்நிலையினை நாகரிகம் தோன்றிய ஆரம்பக் காலகட்டம் (Early Stage) என மானிடவியல் வல்லுனர்கள் கருதுகின்றனர். "புதுக்கற்கால வாழ்விடங்களில் குறிப்பிடத்தக்கது பையம்பள்ளி. இது வடார்க்காடு மாவட்டத்தில் உள்ளது. அங்குக் குழிவீடுகள்

இருந்தன. அவை வட்ட, நீள்சதுர வடிவத்தவை. கற்களால் வீடுகளுக்குத் தரைத்தளம் அமைத்துள்ளனர். இவ்வீடுகளில் குச்சிநடு குழிகள் தெரிந்தன. இதனால் அம்மக்கள் குச்சுகள் நட்டுக் கூரை வேய்ந்திருப்பர் எனக் கணிக்கலாம்”[6] இங்குக் குறிப்பிடப்படும் ‘குச்சுகள்’ என்பது குடிசைகளேயாகும். குகைகளில் மனிதர்களைப் போன்றே பிற உயிரினங்களும் தஞ்சம் புகுவது இயல்பான ஒன்றே. அவைகள் மூலம் தங்களுக்குத் தீங்கும், அச்சுறுத்தலும் ஏற்பட்ட போது அக்குகைகளை விட்டு மனிதர்கள் வெளியேறி அதே வடிவில் வீடுகளை உருவாக்கத் தொடங்கியிருக்கலாம். இது மனிதஇன வரலாற்றின் படிநிலை மாற்றமாகும். இது வெறும் கருத்தாக்கம் மட்டுமல்ல; வரலாற்று உண்மை என்பதனை உணர்த்தும் விதமாக பல்வேறு இடங்களில் தென்படும் தொல்லியல் சான்றுகள் அமைகின்றன. உலகில் மனிதர்கள் வாழ்வதற்காகப் பல வகையான வீடுகள் காணப்படுகின்றன. இவற்றைக் கட்டப் பயன்படுத்தப்பட்ட பொருட்கள், அமைந்துள்ள இடம், வீட்டின் அளவு போன்றவை வேறுபட்டிருந்தாலும் அவை அனைத்துமே மனித இனத்தின் வரலாறு, பண்பாடு போன்ற ஏராளமான தரவுகளைத் தம்முள் கொண்டுள்ளன.

வெவ்வேறு இனங்களும், இனக்குழுக்களும், தங்கள் வாழிடங்களில் அமைத்துக் கொண்டுள்ள வீடுகள் அவர்களது நாகரீக வரலாற்றின் படிநிலைகளை உணர்த்துபவையாக உள்ளன. “தென்னிந்தியாவில் ஆதிமனிதர்கள் குடியிருந்த பல குகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கர்நாடக மாநிலத்தில் நடந்த அகழ்வாய்வில் புதிய கற்காலத்தைச் சேர்ந்த மனிதர்கள் வாழ்ந்த ஏராளமான குகை இருப்பிடங்கள் கண்டறியப்பட்டுள்ளன. குகைகளையொட்டி வீடுகளும் காணப்பட்டன. அவ்வீடுகள் வட்டவடிவில் அமைக்கப்பட்டிருந்தன. மண் சேற்றைக் குழைத்துச் சுவர்கள் எழுப்பப்பட்டுள்ளன”[7] புதிய கற்காலத்தில் மக்கள் வட்ட வடிவம், முட்டை வடிவம் அல்லது நீள்வட்ட வடிவம் கொண்ட குடிசைகளை அமைத்து

வாழ்ந்ததற்கான சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தொல்லியல் சான்றுகளின்படி சங்ககாலத்துக்கு முந்தைய தமிழ் நாட்டில், மரம் மற்றும் இலை தழைகளைக் கொண்டு அமைக்கப்பட்ட குடிசைகளும், குழி தோண்டிக் கற்களைச் சுவர்களாக அடுக்கி, மேற்பரப்பில் புற்களால் வேயப்பட்ட குடிசைகளும் இருந்ததாகத் தெரிகிறது. இக்குடிசைகளின் கூரைகள் பற்றியோ அல்லது அவற்றைத் தாங்கிய அமைப்பு முறை பற்றியோ அறிந்து கொள்வதற்குப் தொல்லியல் சான்றுகள் கிடைக்காவிட்டாலும். வட்டமான தள வடிவத்துக்கு நடுவில் குழிகள் இருப்பதால்; கூரையினைத் தளத்தின் நடுவில் உள்ள குழியில் தூண் ஊன்றி, அது மேற்கூரையின் மையப்பகுதியினைத் தாங்குமாறு அமைத்ததாகத் தெரிகிறது. இதன் மூலம் கூரை கூம்பு வடிவம் கொண்டதாக இருந்திருக்கும் என ஊகிக்க முடியும்.

நிலங்களைப் பண்படுத்திப் பயிரிட்டு, விவசாயம் மேற்கொள்ளக் கற்றுக் கொண்ட பின்பு பயிர்களை விலங்குகளிடமிருந்து பாதுகாக்க விளைநிலங்களை ஒட்டியவாறு தங்க நேர்ந்ததால் அங்கேயே இருப்பிடங்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். இதன் ஒருபடியே பரண் அமைத்து பயிர்களைக் காப்பதாகும். நாளடைவில் இப்பரண் இருப்பிடமாக மாறியிருக்க வேண்டும். “ஆதிமக்கள் அமைத்த முதல் வீடு காற்றுத்தடுக்கு (wind break) என்பதே. அது குச்சிகளால் நேராகவோ அல்லது அரைவட்டமாகவோ வேலிபோன்று அமைந்த தடுக்குகளால் ஆக்கப்பட்டிருக்கும். சில சமயம் இது இலைகளால் வேயப்பட்டிருக்கும். காற்று, மழை முதலிய வானிலை வேறுபாடுகள் மிகுதியாகத் தாக்காமல் சற்றுப் பாதுகாப்பாக இருக்கும்”[8] என்னும் கூற்று இங்கு நோக்கத்தக்கதாகும். ஆதித்தமிழ் இனங்கள் தம் வாழ்வியல் தேவைகள் நிறைவேறும் இடங்களாகிய மலை அடிவாரத்திலும், ஆற்றுப் படுகைகளிலும், சிற்றோடைகள், நீர்நிலைகள் போன்றவற்றின் அருகிலும் தம் இருப்பிடங்ளை அமைத்துக்கொண்டு குடியமர்ந்தனர். பின்பு தாம் வாழ்ந்த சூழலுக்கேற்பவும்,

தொழிலின் அடிப்படையிலும் பெயர்ந்து வாழ்ந்தனர். அங்கு அந்தந்த காலகட்டத்திற்கேற்ப அறிந்துகொண்ட மரபுசார் அறிவினைக் கொண்டு இருப்பிடங்களை உருவாக்கிக் கொண்டனர்.

## 2.3 சங்ககாலத் தமிழரின் திணைசார் இருப்பிடங்கள்

### 2.3.1 நிலப்பகுப்பு

ஒருவர் வாழும் நிலத்தின் இயல்பும், வளமும் அவரது வாழ்வியலைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணிகளாக அமைகின்றன. எனவே சமூகப் பொருளாதாரப் பண்பாட்டாய்வுகளில் நிலவியல் குறித்து அறிவது அவசியமாகின்றது. உலக நிலப்பரப்புகள் ஐந்து வகைப்பாடுகளுக்குள் அடங்குகின்றன. அவை மலைப்பகுதி, கானகப்பகுதி, நீர்வளம் மிக்க ஆற்றுப் படுகைகள் (டெல்டா), கடற்பகுதி, வறண்ட பாழ்நிலப்பகுதி என்பனவாகும். நாகரிகம் குன்றி நாடோடிகளாக வாழ்ந்த கற்காலத் தமிழர்கள் வெவ்வேறு காலகட்டங்களில் புலம்பெயர்ந்து பல்வேறு நிலப்பரப்புகளில் நிலைபெற்றனர். அவர்களது வாழ்வில் ஏற்பட்ட மாறுதல்களும், பரிணாம வளர்ச்சியும் அவர்களைப் பண்பட்ட வாழ்வியலுக்குள் இட்டுச்சென்றுள்ளதை உணர முடிகிறது. இனக்குழுக்களாக வாழ்ந்த தொல்தமிழர்கள் உலக நடப்பு குறித்த செம்மார்ந்த அறிவுதனைப் பெற்றிருந்த மக்கள் என்பதற்குத் தமிழர் வகுத்த நிலப்பாகுபாடுகள் தக்கதொரு சான்றாகும். தமிழர் வாழ்வியலை விவரிக்கும் மூல நூலாகவும், களஞ்சியமாகவும் விளங்கும் தொல்காப்பியத்தை வகுத்தவரும், கி.மு. 5-ஆம் நூற்றாண்டினராகக் கருதப்படுபவருமான தொல்காப்பியர் தமிழர் வாழும் நிலங்களை பின்வருமாறு வரையறுத்துள்ளார்.

"மாயோன் மேய காடுறை உலகமும்

சேயோன் மேய மைவரை உலகமும்

வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும்

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்

சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"

(தொல்.பொருள்.அகத்:5)

காடுகள் சூழ்ந்த பகுதியாகிய முல்லை நிலமும்; மலைகளும் அதனைச் சார்ந்த பகுதியுமாகிய குறிஞ்சியும்; ஆறுகளும், சமவெளிகளும் காணப்படும் மருத நிலமும்; கடற்கரையோரமாகிய நெய்தல் நிலமுமென நானிலங்களைத் தொல்காப்பியர் சுட்டுகின்றார். இவை தவிர பிற்கால இலக்கண ஆசிரியர்களால் குறிப்பிடப்படும் 'பாலை' எனும் வறண்ட ஓர் நிலப்பரப்பும் காணப்பட்டது. அது குறித்துச் சிலப்பதிகார மதுரைக் காண்டத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையால் திரிந்து

நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்

பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"[9]

பாலை என்பது தனியொரு நிலம் அல்ல. குறிஞ்சி என்னும் மலைசார் பகுதியும், முல்லை என்னும் காடுசார் பகுதியும் தன் இயற்கையான இயல்பினை இழந்து பருவ மாற்றத்தால் வறட்சி ஏற்படின் அதனைப் பாலை என்று வழங்குவர். ஆகவேதான் மக்கள் ஒழுக்கங்களைக் (திணை) கூறுமிடத்து பாலை நிலந்தனைச் சுட்டிய தொல்காப்பியர், நிலப்பாகுபாடு குறித்து விளக்கும் போது பாலைதனைக் கூறவில்லை. ஏனெனில் தமிழக நிலவியல் அமைப்பின்படி இயற்கையாகப் பாலை நிலம் என்பது கிடையாது. இப்பாலை நிலத்தினையும் சேர்த்து ஐந்திணை என்று வழங்கும் வழக்கம் பிற்காலத்தில்தான் ஏற்பட்டது. சங்கத் தமிழரின் அக, புற வாழ்வியல்கள்

மேற்கண்ட ஐந்திணைகளில் அடங்கும். சங்க இலக்கியங்களைக் கூர்ந்து நோக்குங்கால் ஒவ்வொரு திணையிலும் அங்கு நிலவிய சூழலுக்கேற்ப மக்களின் பழக்க வழக்கம், வாழ்வியல் கூறுகள் வேறுபடுவதை அறியலாம். சான்றாக, மருதநில மாந்தரின் வாழ்வியலைக் குறிஞ்சிவாழ் மக்களின் வாழ்வியலோடு ஒப்பிடுகையில் பல்வேறு மாற்றங்கள் காணப்படுகின்றன. ஆதலின் நிலங்களுக்கும் தமிழர்களுக்குமான பிணைப்பு குறிப்பிடத்தக்கதாகும். பண்டைய இனக்குழுச் சமூக எச்சங்களைத் தன்னகத்தே கொண்டு, வேட்டைச் சமூகமாக வாழ்ந்து, இக்காலச் சமூகமயத்திற்கு முன்னோடிகளாக விளங்கிய கானவர்கள் வாழ்ந்த நிலமாக விளங்கியது குறிஞ்சி. மேய்ச்சல் சமூகமாக உருப்பெற்று, ஆகோள் புரிந்தும், ஏறுதழுவியும் புற வாழ்க்கைக்குச் சான்றாக விளங்கியது முல்லை நிலமேயாகும். நாகரிகம் துளிர் விட்ட நிலமாகக் கருதப்படும் மருத நிலத்தினில் தான் அரசுகளும், நவீன வாழ்வியலும், வேளாண் தொழில்நுட்பங்களும் வளர்ந்தன. வீரத்திற்குப் பெயர்பெற்றவர்களான மறவர்கள் வாழும் வறட்சியான நிலம் பாலையாகும். மேற்கண்ட நான்கு நிலங்களை ஒப்பிடுகையில் அயல்நாடுகளுடனான தொடர்பிற்கும், வாணிப வளர்ச்சிக்கும் வித்திட்டது நெய்தல் நிலமென்றால் அது மிகையாகாது. ஆகவே ஐந்திணைகளில் ஒவ்வொரு நிலமும் ஒவ்வொரு விதத்தில் தனிச்சிறப்பினைப் பெற்றிருந்தது. இதற்கான காரணங்களை ஆராயும்போது முதலில் நம் கவனத்திற்கு வருவது திணைகளின் நிலவியல் அமைப்பேயாகும்.

### 2.3.2 குடியிருப்புகள்

பொதுவாகக் குடியிருப்பு என்பது, மனிதர்கள் தங்கி வாழ்வதற்காக ஏற்படுத்தப்படுபவையாகும். இங்கே வாழ்வது என்பது, உணவு சமைத்தல், ஓய்வெடுத்தல் போன்றவையும், மேலும் பிற செயல்களையும் உள்ளடக்கியதாகும். இது தனியாகவோ, குடும்பமாகவோ, பல குடும்பங்கள் சேர்ந்து கூட்டாகவோ செயல்படுவதைக் குறிக்கும். மனித இனம் கூடி வாழ்ந்ததின் படிநிலையாக்கமே இனக்குழுக்கள் தோன்றக் காரணமாயின.

அத்தகைய இனக்குழுக்கள் தம்மை வெவ்வேறு ‘குடிகள்’ என அடையாளப்படுத்திக் கொண்டன. குடிகள் என்பது மக்கட் கூட்டத்தினைக் குறிப்பதாகும். இக்குடிகள் தொகுதியாகத் தங்களுக்குள் தங்குமிடங்களை ஏற்படுத்திக் கொண்டு வாழ்ந்த இடங்களே பின்னாளில் குடியிருப்புகள் எனப்பட்டன. இச்சொல்லின் முன்னொட்டான ‘குடி’ என்னும் பதத்திற்குக் குடியிருப்போன், குடும்பம், வீடு, வாழ்விடம் போன்ற சொல்விளக்கங்களை அகராதிகள் தருகின்றன. மேலும் குடியிருப்பு என்பதற்குக் கிராமம், குடியிருக்கை, தங்குமிடம் போன்ற விளக்கங்களையும் சுட்டுகின்றன. ஆகவே குடியிருப்பு என்பது மக்கள் ஓரிடத்தில் நிலையாக வாழ்வதற்கு ஏற்படுத்திக் கொண்ட இருப்பிடம் என்பது தெளிவாகின்றது.

ஒரு பகுதியில் அமைந்திருக்கின்ற வீடுகள், மனிதர் கூடும் இடங்கள், சேர்ந்து வாழும் இடங்கள் அவற்றை உள்ளடக்கிய ஊர்கள் இவையனைத்தும் சேர்ந்ததே மனிதக் குடியிருப்புகள் எனப்படும். “குடியிருப்பு என்பது, தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ மக்கள் வாழும் இடத்தைக் குறிக்கும். பொதுவாக குடியிருப்பு என்னும் போது; அது, ஒரு சில வீடுகள் ஒன்றாக இருக்கும் ஒரு இடமாகவோ, அல்லது அளவில் சிறியதான ஊராகவோ இருக்கலாம். எனவே குடியிருப்பு என்பதில் சிற்றூர்கள், ஊர்கள், போன்றவை எல்லாமே அடங்கும். பொதுவாகக் குடியிருப்பொன்றில் மக்கள் வாழும் வீடுகளைத் தவிரத் தெருக்கள், வழிபாட்டிடங்கள், மக்கள் கூடுமிடங்கள் போன்ற பல்வேறு கூறுகள் அமைந்திருக்கக்கூடும்”[10] என்ற கருத்து குடியிருப்பு என்னும் பதத்தினை விவரிப்பதாக உள்ளது. மனிதக் குடியிருப்புகளின் வளர்ச்சி முற்றிலுமாகச் சுற்றுச்சூழல் அம்சங்களைச் சார்ந்தே அமைகின்றது என்பதைத் திணைமரபு புலப்படுத்துகிறது. பொதுவாக மனித வாழ்வுக்குத் தேவையான வளங்கள் உள்ள இடங்களிலேயே இத்தகைய குடியிருப்புக்கள் அமைகின்றன. குடியிருப்பு என்பதனை உருவாக்கத் தெரிந்திருக்காவிட்டால் மனிதன்

நாடோடிகளாகவே வாழ்ந்திருக்கக் கூடும். குடும்பம், சமூகம், ஊர் போன்ற சமூக அடுக்கின் ஒழுங்கமைவுகள் தோன்றியிருக்காது. சங்கத் தமிழர் வாழ்ந்த நிலவியல் அமைப்பிற்கேற்வாறு இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். சங்ககாலத் தமிழர்கள் உருவாக்கிக் கொண்ட இருப்பிடங்கள் குறித்து அறிந்துகொள்ளத் தேவையான இலக்கியத் தரவுகள் ஏராளமாகக் கிட்டுகின்றன. "குறிஞ்சிநிலக் குறவரும், பாலைநில மறவரும் இலை வேய்ந்த குடிசைகளிலும், குற்றில்களிலும்; முல்லைநில இடையர் கூரை வேய்ந்த சிற்றில்களிலும்; மருத நிலச் சிற்றூர் உழவர் மண்சுவர்க் கூரை வீடுகளிலும்; மருதநிலப் பேரூரார் ஏந்தான (வசதியான) பச்சைச் செங்கற் சுவர்க் காரை வீடுகளிலும் வாழ்ந்து வந்தனர்"[11] ஐவகை நிலங்களில் இருந்த குடியிருப்புகளின் அமைப்பை நோக்கும் போது, ஒவ்வொரு நிலத்திலும் காணப்பட்ட சமூகப் பொருளாதாரப் பின்புலமும், அவரவர்க்கே உரிய பண்பாடும் வெளிப்படுகிறது.

சங்ககாலப் புலவர்கள் தாம் வாழ்ந்த காலங்களில் நிலவிய சமூகத்தினை விவரிக்கும் விதமாகவே சங்க இலக்கியப் பாடல்கள் அமைந்துள்ளன. அவ்வகையில், அன்றைய காலத்துச் சிற்றூர்களில் காணப்பட்ட குடிசைகள் (குரம்பை), குற்றில்கள், சிற்றில்கள் குறித்தும் குறிப்பிட்டுள்ளனர். குடிசை என்னும் சொல்லாட்சி சங்ககாலத்தில் இருந்ததற்கான குறிப்புகள் இல்லை என்றபோதிலும், அதனை ஒத்த சொல்லாகிய 'குடில்' என்னும் சொல் அன்றைக்குப் புழக்கத்தில் இருந்துள்ளது. ஆதிமனிதன் தாம் முயன்று ஏற்படுத்திய இருப்பிடம் குடிசையே ஆகும். கிறிஸ்து பிறப்பு திருநாளைக் கொண்டாடும் பொருட்டு வீடுகளில் அமைக்கப்படும் சிறு குடிசையினை இன்றைக்கும் 'குடில்' (கொட்டகை) என்றே அழைக்கின்றனர். அக்காலத்தில், மக்கள் வாழ்ந்த குடிசைகளை ஒத்த இருப்பிடங்கள் பல்வேறு பெயர்களிட்டு அழைக்கப்பட்டன. குரம்பை (பெரும்:88),

குடில் (பெரும்:225) போன்றவை சங்க காலத்தில் குடிசை போன்ற எளிமையான குடியிருப்பினைக் குறித்த சொற்களாகத் தெரிகின்றது. இவை மலை, காடு, சமவெளி என வெவ்வேறு பகுதிகளில் பல்வேறு வடிவங்களில் காணப்பட்டன. இவற்றுள் பெரும்பாலான சொற்கள் இன்று வழக்கிழந்துவிட்டன. ஆனால், குடிசை என்னும் சொல் எளிய குடியிருப்புகளுகளைக் குறிப்பதற்கான ஒரு பொதுவான சொல்லாகத் தற்காலத்தில் புழக்கத்தில் இருந்து வருகிறது. மக்கள் வாழும் இருப்பிடங்களும் சமூக மதிப்பீடுகளை அளவிடும் குறியீடுகளில் ஒன்றாக இருப்பதால்; சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியப்படும் செய்திகளின் அடிப்படையில் பார்க்கும் போது, அக்காலத்தில் சமச்சீரான சமூகம் இருந்ததாகத் தெரியவில்லை. பண்டைத் தமிழகத் திணைசார் வாழ்வில் நிலவியல் அமைப்பிற்கேற்ப இருப்பிடங்களும், மக்கள் வாழ்வும் அமைந்தது போலவே; அவர்கள் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையிலும் இருப்பிடங்கள் வேறுபட்டுக் காணப்பட்டன.

சங்க காலத்தைப் பொருத்தமட்டில், பொதுவாகச் சிற்றூர்களில் வசித்த மக்கள் எளிய குடிசைகளில்தான் வசித்தனர். அதிலும் விளிம்புநிலை மக்களாகிய கலைஞர்கள், அடித்தட்டு மக்கள் போன்றோரது பொருளாதாரப் பின்புலம், அவர்கள் குடிசைகளில் வசிக்கக் காரணமானது. தவிர, இவ்வகையான குடிசைகள் பருவநிலைக்கேற்ப மாறக்கூடிய தன்மை கொண்டவையாகும். குறைந்த பொருட்செலவில் விரைவாக இவற்றை உருவாக்கி விடலாம் என்பதும் கூட ஒரு காரணமாக இருந்திருக்கலாம். ஏனென்றால் “காலனிய ஆட்சியின் தொடக்கப் பகுதியில் தமிழ்நாட்டில் 90 விழுக்காட்டு மக்கள் பனை, தென்னை, புல்வகைகள் போன்றவற்றால் வேய்ந்த கூரை வீடுகளில் தான் வாழ்ந்தனர்”[14] என்ற செய்தி இங்குச் சிந்திக்கத்தக்கதாக உள்ளது. நாகரிக வளர்ச்சியின் விளைவாலும், உணவுத் தேவையின் பொருட்டும், பொருளீட்டும் நோக்கிலும் பல்வேறு தொழில்களை மனிதன்

கற்றுக் கொண்டு செயல்பட்ட போது, ஒவ்வொரு நிலத்திலும் காணப்பட்ட வளங்களுக்கேற்பவும், இயற்கையாகவும், அனுபவத்திலும் பெற்றிருந்த மரபுசார் தொழில் நுட்பத்தினால் ஐந்திணை மாந்தரும் பல்வேறு தொழில்களை மேற்கொண்டனர். நிலம், வளம், தேவை, சூழல் போன்ற காரணிகள் தொழில்களைத் தீர்மானித்தன. தொழிலின் காரணமாக இருப்பிடத்தின் பரப்பு, அமைப்பு ஆகியவை மாறுபட்டன. சமூக அடுக்குகளுக்கேற்ப வீடுகளும் வெவ்வேறாக அமைந்திருந்ததை உணரமுடிகின்றது.

### 2.3.3 இருப்பிடங்கள் குறித்த சொல்லாடல்கள்

சங்க கால மக்கள் வசித்த வீடுகள் பலவகைகளில், பல வடிவங்களில் உருவாக்கப்பட்டிருந்தன. இருப்பிடங்களைக் குறிக்க அகம், இல், இல்லம், இருக்கை, உறையுள், குடி, குடில், குரம்பை, குடம்பை, சிற்றில், மனை, சிறுமனை, மாடம், நெடுநகர் (நெடிய வீடுகள்), கல்லளை, புக்கில் போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. இச்சொற்களுக்கான ஆங்கிலச் சோற்கள் பின்வருமாறு; Hovel - (குரம்பை), Small Hut - (குடில்), House - (வீடு, மனை, அகம்), Home - (இல், இல்லம்), Quarters - (குடியிருப்பு, இருக்கை), Residence - (இருப்பிடம்), Abode - (உறையுள்), Cave - (கல்லளை) எனப்படும். இருப்பிடங்களைக் குறிக்கும் மேற்கண்ட சொற்கள் தமிழ் நிகண்டுகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

“மனையுங் குடியு மில்லை யென்றலு
மிடமு மிராசியு மில்லென்றாகும்”[15]
“ஊர்ப்பொதுப் பெயரு மகாரமு முறையுள்”[16]
“உறையுள் எனும் பெய ரூரு நாடும்
வீட்டின் பெயரும் விளம்புவர் புலவர்”[17]
“இல்லெனும் பெயரே யில்லை யென்றலும்

இராசியு மனவியு மனையும் இடமுமாம்”[18]

மனை, உறையுள், இல் போன்ற குடியிருப்பு தொடர்பான சொற்களுக்குப் பொருளாக வீடு என்ற மனிதர்கள் வசிக்கும் இடங்களையே நிகண்டுகள் குறிப்பிடுகின்றன.

### 2.3.4 கட்டுமானப் பொருட்கள்

இருப்பிடங்களை உருவாக்கிட முதலாவதாகத் தகுந்த நிலத்தினைத் தேர்வு செய்வது அவசியமாகிறது. அந்நிலத்தினை நீர்வடிவதற்கேற்ப ஒழுங்குபடுத்துவது அடுத்த கட்டமாகும். வீடுகளைக் கட்ட அந்தந்த நிலங்களில் இயற்கையாகக் கிடைக்கக்கூடிய மூலப்பொருட்களே பயன்படுத்தப்பட்டன. மருத நிலம் தவிர்த்து ஏனைய நிலங்களில் மக்கள் வசித்தவை பெரும்பாலும் எளிய வீடுகளே ஆகும். அவ்வீடுகள் கற்களாலும், மண்கலவை மற்றும் மரங்களாலும், தென்னங்கீற்றுகள், புல், இலை, தழை, மடல் போன்றவற்றாலும் உருவாக்கப்பட்டன. ‘ஊகம் புல்’ ’தருப்பைப் புல்’ போன்ற புல்வகையினையும்; தினை, வரகு போன்றவற்றின் கற்றையினையும்; ஈச்சமரத்தின் இலைகளையும்தான் பெரும்பாலும் கூரையின் மேற்புறத்தை உருவாக்கப் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

“ஈத்திலை வேய்ந்த எய்புறக் குரம்பை” (பெரும் - பா.வ:88)

என்னும் பாடலடியில் ஈச்சமர இழைகளால் அமைக்கப்பட்ட கூரை குறித்துக் கூறப்பட்டது. வீட்டின் கூரையினை வேய பனை ஓலையினையும் பயன்படுத்தியதனைக் காணமுடிகிறது.

“அட்டில் ஓலை தொட்டனை நின்மே” (நற் - 300:12)

சமையற்கூடம் ஒன்று பனையோலையால் வேய்ந்து உருவாக்கப்பட்டிருந்ததை மேற்கண்ட பாடல்வரி குறிப்பிடுகின்றது. அதே போல் நெய்தல் நிலத்தினில்

காணப்படும் தாழை மரத்தின் அடிப்புறத் தூறுகளைக் கொண்டும் கூரை வேய்ந்தனர் என்பதையும் அறியமுடிகிறது. சங்ககாலத்தில் பறவைகள் வசிக்கும் கூடுகளைக் குடம்பை என்று அழைத்தனர். மனிதர்கள் வாழும் எளிய குடிசைகளைப் பறவைகள் வசிக்கும் கூடாகப் பாவித்த பாங்கு இங்கு புலப்படுகின்றது. இது ஆதி இனக்குழு வாழ்வின் எச்சமாகத் தெரிகிறது. குடம்பை என்பதனை எளிய குடிசை என்று உரையாசிரியர்கள் சுட்டுகின்றனர்.

"தடந் தாட் தாழைக் குடம்பை" (நற் - 270:1)

இங்கு குடிசையினைக் குறிக்கக் குரம்பை எனச் சுட்டாது குடம்பை எனக் கூறப்பட்டுள்ளது. குடம்பை என்பதற்குக் 'கூடு' என்று அகராதிகள் பொருள்தருகின்றன. தாழை என்ற சொல்லிற்குத் தென்னை என்றும் தாழை மரம் என்றும் அகராதிகளில் பொருள்விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. இங்கு தாழை என்பது தென்னையினையே குறிக்கும் விதமாக உள்ளது. ஏனெனில் கூரை வேயத் தாழைமரத்தினை விடத் தென்னைமரக் கீற்றுகளே உகந்ததாகும். அடுத்ததாகக் 'கூவை' என்னும் ஒருவகைச் செடியினைக் கொண்டும் கூரை வேயப்பட்டுள்ளதனை அறியமுடிகின்றது.

"கூவை துற்ற நாற்கால் பந்தர்ச்

சிறுமனை வாழ்க்கையின் ...." (புறம் - 29:19-20)

காய்ந்த புல்லால் வேயப்பட்ட வளம் குன்றாத இருப்பிடம் என நெய்தல் குடியிருப்பைப் பின்வரும் பாடலடி குறிப்பிடுகின்றது.

"காயல் வேய்ந்த தேயா நல் இல்" (அகம் - 370:5)

புல்லினைக் கொய்து உலரவைத்துப் பக்குவப்படுத்திய பின் பயன்படுத்தியுள்ளனர். வைக்கோல், புல் போன்றவை கொண்டு வேயப்படும் கூரைகள் நீண்ட காலத்திற்குத் தாங்காது. மழைக்கும், வெயிலுக்கும் அவை சிதைவுற்று வீணாகிவிடும். ஆகவே குறிப்பிட்ட இடைவெளியில் அதனை

மாற்றிப் புதியவற்றை வேய வேண்டும். இதனை அன்றைய மருதநில உழவர்கள் செய்து வந்தனர் என்பதனைப் பின்வரும் பாடலடி குறிப்பிடுகின்றது. நெல் வைக்கோல், தினை, வரகு வைக்கோல் இதற்குப் பயன்பட்டது. 'தேயா நல் இல்' என்பது வலிமை குன்றாத இல்லம் எனப் பொருள்படுகின்றது. புல்லால் வேயப்பட்ட இக்குடியிருப்பு மழை, வெயில் போன்றவற்றைத் தாங்கி உறுதியுடன் இருந்தது இங்கு புலப்படுகின்றது.

"புதுவை வேய்ந்த கவின்குடில் முன்றில்" (பெரும் - பா.வ:225)

'புதுவை' என்பதற்குப் புதிய வைக்கோல் எனப் பொருள் கொள்ளப்படும். புதிதாக அறுவடை செய்யப்பட்ட நெற்கதிர்களைச் சேகரித்து, அடித்து நெல்மணிகளை உதிர்த்துவிட்டு எஞ்சுகின்ற வைக்கோலினை கால்நடைகளுக்கான உலர் தீவனமாகப் பயன்படுத்திடச் சேகரிப்பது வழக்கம். இவ்வைக்கோலினை இருப்பிடத்தின் மேற்பரப்பினை வேய்ந்திடவும் பயன்படுத்தியுள்ளனர். இவ்வழக்கம் பொதுவாக மருத நிலத்தினில் காணப்பட்டது. அத்தகு கூரைதனைக் கட்ட தாழை நாரினைப் பயன்படுத்தினர். பெரும்பாலும் மூங்கிலையும் மற்றும் ஆங்காங்கே கிடைக்கக்கூடிய இதரக் கழிகளைக் கூரைகள் எழுப்பப் பயன்படுத்தினர். மண்ணைக் குழைத்து மதிற்புறங்களை எழுப்பினர். வீடுகளைச் சுற்றிலும் முட்களைப் பரப்பி வேலி ஏற்படுத்திப் பாதுகாத்தனர். வேலிக்கு முள் மரங்களையே நட்டு அரண் போல் வளர்த்தனர்.

வசதிபடைத்தோர் பெரிய மாளிகைகள், அரண்மனைகள், கோட்டைகள் கட்ட களிமண்ணால் செய்யப்பட்ட செங்கற்களை அவற்றின் உறுதித் தன்மையினைக் கூட்டும் விதமாகச் சூளைகளில் இட்டுச் சுட்டுப் பயன்படுத்தியதனையும் அண்மைக் காலங்களில் கிடைக்கப் பெற்ற தொல்லியல் தரவுகளின் வாயிலாக அறியலாம். தமிழர் நாகரிகத்துடன்

நெருங்கிய தொடர்பு கொண்டதாக அறியப்படும் ஹரப்பா, மொகஞ்சதோரா அகழாய்வுகளில் கட்டிடங்கள் கட்டப் பயன்படுத்திய சுட்ட செங்கற்கள் கிடைக்கப் பெற்றுள்ளது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். தமிழகத்தைப் பொருத்தமட்டில் அரிக்கமேடு, ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளில் செங்கற்கள், ஓடுகள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பார்க்கும் போது சங்ககாலத்தைய இருப்பிடங்கள் உருவாக்கத்தின் வளர்ச்சி நிலையினை அறியமுடிகிறது.

### 2.3.5 குறிஞ்சி நில இருப்பிடங்கள்

மனித வரலாற்றை நோக்குகையில், ஒவ்வொரு கண்டுபிடிப்பிற்கும், ஒவ்வொரு முயற்சிக்கும் தேவைகள் உருவானதின் பின்புலமே காரணமாக அமைந்துள்ளது. வாழ்வாதாரத் தேவைகள் விரிவடைந்த காலத்து ஏற்பட்ட மாற்றங்களின் விளைவு இருப்பிடங்களிலும் பிரதிபலித்தது எனலாம். அத்தகு இருப்பிடங்களின் அமைப்பினை வைத்து அதனை உருவாக்கிய மக்கள் கொண்டிருந்த பண்பாட்டையும், மரபுசார் அறிவினையும் அறிந்து கொள்ளமுடியும். ஆதிகாலத்து மனிதன் மரப்பொந்துகளையும், மலைக் குகைகளையும் தன் வாழிடமாகக் கொண்டிருந்தான்.

கொடிய விலங்குகளின் தாக்குதலில் இருந்து தப்புவதற்காக அவற்றில் தங்கி வாழ்ந்த மனிதன் மழை, புயல், பனி முதலிய இயற்கை நிகழ்வுகளில் இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டுள்ளான். இலை, தழை, புல் முதலியவற்றைக் கொண்டு குடிசைகள் அமைத்து வாழக் கற்றுக் கொண்டான். குறிஞ்சித்திணையின் நிலவியல் அமைப்பிற்கேற்ப அங்கு வாழும் மக்களின் குடியிருப்புக்கள் அமைந்திருந்தன. மலையும் மலை சார்ந்ததுமான இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் விலங்குகளை வேட்டையாடி வாழ்ந்தவர்கள். தொடக்கக் காலத்தில் குகைவாழ் மக்களாக இருந்தவர்கள். தினை, வரகு முதலிய பயிர்களைப் பயிரிட்ட போது

தினைப்புனக் காவலுக்குப் பரண் கட்டுவது போலத் தம் குடிசைகளையும் பரண் அமைப்பில் கட்டிக் கொண்டனர். அடுத்தகட்ட வளர்ச்சியாக கூம்புவடிவ வட்டத் தரையமைப்பில் குடிசை கட்டி வாழ்ந்தனர். குடிசையினைச் சுற்றிலும் பாறைக் கற்களை அடுக்கி, மூங்கிற் கம்புகளை நட்டு அதன்மேல் தினைத்தாள், வரகுத்தாள் போன்றவற்றை அடர்த்தியாகப் பரப்பி இருப்பிடத்தினை வடிவமைத்திருக்கின்றனர். கொடிய விலங்குகளும், பறவைகளும் வாழும் மலைப்பாங்கான இங்கு பாதுகாப்பான சமதளப் பகுதிகளைத் தேர்வுசெய்து, அங்கு நிலவிய தட்பவெப்பச் சூழலுக்கேற்ப மலைகளில் கிடைக்கக்கூடிய மரக்கட்டைகள், புற்கள், இலைதழைகளால் தம் வாழ்விடங்களை அமைத்துக் கொண்டனர். இவ்வாறு அமைத்துக்கொண்ட குடிசைகள், குறிஞ்சி நிலத்தவரின் இருப்பிடங்களாயின. இதற்குக் 'குரம்பை' என்று பெயர். பொதுவாக வேங்கை மரங்களும், காந்தள்ச் செடிகளும் சூழ்ந்த இடங்களில் தம் இருப்பிடங்களை அமைத்துக்கொள்வது குறிஞ்சிவாழ் மாந்தரின் இயல்பு. இது ஓர் அழகியல்சார்ந்த செயல்பாடு எனலாம். குறிஞ்சிநில மக்களது இருப்பிடங்கள் குறித்து அறிந்திடச் சங்க இலக்கியங்களில் ஏராளமான தரவுகள் கிடைகின்றன. சான்றாக,

"குன்றக் குறவன் புல்வேய் குரம்பை" (ஐங் - 252:1)

மலைதனில் வாழும் குறிஞ்சிநிலக் குறவர் இன மக்கள் உருவாக்கிய புல்லால் வேயப்பட்ட சிறுகுடிலைக் குறித்து உறைப்பதாக இப்பாடல் விளங்குகின்றது. பாடலில் குறிப்பிடப்படும் 'புல்வேய் குரம்பை' என்பது ஊகம்புல் கொண்டு வேயப்பட்ட குடிசையினைக் குறிப்பதாகும்.

"................. ஆங்கண் கழி மிடந்து இயற்றிய
புல்வேய் குரம்பைக் குடிதோறும் பெறுகுவீர்..." (மலை- பா.வ:438-439)

பாணன் ஒருவனுக்குக் குறிஞ்சி நிலத்தாரிடம் செல்லுமாறு ஆற்றுப்படுத்தும் இப்பாடலில் குறிஞ்சி நிலத்தார் வசிக்கும் இருப்பிடம் குறித்தும் விளக்கி உரைக்கப்பட்டுள்ளது. கழிகள் ஊன்றி அதன் மீது ஊகம் புல்லைக் கொண்டு பரப்பி வேயப்பட்ட இருப்பிடங்களை உடைய மலைசார் குடிகள் என்று அறியப்படுதலால் அவர்கள் பயன்படுத்திய இருப்பிடம் இங்குச் சுட்டப்பட்டுள்ளது.

"நடுகாற் குரம்பைத் தன் குடிவயிற் பெயரும்

குன்றநாடன் கேண்மை நமக்கே" (நற் 285:7-8)

குடிசைகளை அமைக்கும் முறை குறித்து இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. கம்புகளை நட்டு எழுப்பப்பட்ட குடிசை என்பதையே 'நடுகாற் குரம்பை' என்று சுட்டப்பட்டுள்ளது.

"இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்

விரிமலர் மராஅம் பொருந்தி, கோல்தெரிந்து,

வரிநுதல் யானை அருநிரத்து அழுத்தி,

இகலடு முன்பின் வெண்கோடு கொண்டு, தன்

புல்வேய் குரம்பை புலர ஊன்றி......" (அகம் 172:6-10)

கானவரான குறிஞ்சி நிலத்து வேட்டுவர்கள் புல்லால் வேயப்பட்ட இல்லங்களை அழகுபடுத்தும் நோக்கிலும், தனது ஆற்றலைப் பிறர் போற்றும் வகையிலும் யானை போன்ற ஆற்றல் வாய்ந்த கானகத்து விலங்கினங்களை வேட்டையாடி அவற்றின் கொம்புகளை வீட்டின் முகப்பில் நட்டு வைத்தனர். இப்பழக்கம் பிற்காலங்களில் வாழ்ந்த ஜமீன்தாரிகளிடம் காணப்பட்டது. காடுகளில் மான், யானை போன்ற விலங்குகளை வேட்டையாடி அவற்றின் கொம்புகளை வீட்டின் முகப்பில் மாட்டிவைத்து அழகு பார்ப்பதைப்

பெருமையாக அவர்கள் எண்ணினர். மேலும், பண்டைக் காலத்தில் யானைத் தந்தங்களை ஊன்றி, கவரிமான் தோல் கொண்டு வேயப்பட்ட குறவரின் குரம்பை குறித்து சீவகசிந்தாமணியில் விவரிக்கப்பட்டுள்ளது.

"யானைவெண் மருப்பினாலியற்றி யாவது
மானமாக் கவர் வெண் மயிரின் வேய்ந்தன
தேனெயூன் கிழங்குகாய் பழங்கள் செற்றிய
கானவர் குரம்பைசூழ் காடு தோன்றுமே"[19]

இத்தகு குடியிருப்புகள் இனக்குழு வாழ்வின் எச்சங்களாக அறியப்படுகின்றன. வேட்டைச் சமூகத்தில் வேட்டையாடப்பட்ட விலங்குகளின் இறைச்சியினை உண்டபின், எஞ்சுகின்ற எலும்புகளை ஆயுதங்களாகவும், தோலினை ஆடையாகவும், இருப்பிடம் அமைக்கவும் பயன்படுத்தியதாகத் தெரிகின்றது. இக்கருத்தினை அடியொற்றியே மேற்கண்ட பாடல் விளங்குகின்றது. தமிழர்கள் தம் இருப்பிடங்களை நீர் வசதி அமைந்த காற்றோட்டமான இடத்தில் அமைத்து, அதனைச் சுற்றிலும் வீட்டுத்தோட்டம் போன்று செடிகொடிகளை நட்டு வளர்த்து வந்தனர். இதன் மூலம் தமது இருப்பிடங்களை அடிப்படை வசதிகள் கிடைக்கக்கூடிய பகுதிகளில் அமைத்தனர் என்பது தெளிவாகிறது. பின்வரும் பாடல் வரிகள் குறிஞ்சி நிலத்தார் வாழ்ந்த வீடுகள் அமைந்திருந்த சூழலினை நம் கண்முன் விவரிப்பதாக உள்ளது.

"நீரிழி மருங்கின் ஆர்இடத்து அமன்ற
குளவியோடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகர,
துறுகல் நண்ணிய கறிஇவர் படப்பைக்
குறிஇறைக் குரம்பைநம் மனைவயின் புகுதரும்...." (அகம் 272:7-11)

இருப்பிடங்கள் நிரந்தரமானவையாகவும், தற்காலிகமாகவும் என இருவகைகளில் அமைந்திருந்ததையும் பார்க்க முடிகிறது. மேலே விவரிக்கப்பட்ட அனைத்தும் நிரந்தரக் குடியிருப்பில் அடங்கும். பின்வரும் பாடலில் காவல் காப்பதற்காகவும், உணவுப்பொருள்களைச் சேகரிப்பதற்கும் சிறிது காலம் கானகங்களில் தங்க நேரிட்ட போது, அங்கும் குடிசைகளை அமைத்துள்ளனர். பின்வரும் பாடல்கள் குறிஞ்சி நிலத்தவர்கள் அமைத்த தற்காலிகக் குடிசைகள் குறித்து சான்றுரைக்கின்றன.

"வேழம் காவலர் குரம்பை ஏய்ப்ப...." (பெரும் பா.வ:51)

தினைக் கொல்லையில் பரண் அமைத்து அங்கு யானை புகாமல் காவல் புரிவதற்காகக் குறவர் அமைத்த பரண் குறித்து இங்கு உரைக்கப்பட்டுள்ளது. இத்தகு பரண்களையும் குரம்பை என்றே அக்காலத்தில் அழைத்தனர் எனத்தெரிகிறது.

"ஏனல் அம்காவலர் ஆனாது ஆர்த்தோரும்
கிளிவிழி பயிற்றும் வெளில்ஆடு பெருஞ்சினை
விழுக்கோட் பழவின் பழுப்பயம் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பை புதைய ........" (அகம் 12:6-9)

தினைப்புனம் காப்போர் காடுகளில் காணப்படும் பலாப்பழங்களைப் பெறும் பொருட்டு அம்மரங்கள் சூழ்ந்த பகுதிகளில் குடிசைகளை அமைத்தனர். வேங்கை மரத்தடியில் அக்குடிசைகள் காணப்பட்டன. குறவர்கள் தொழிலின் பொருட்டு தற்காலிகக் குடிசைகள் அமைத்துத் தங்கினர் என்பது இதன் மூலம் புலனாகின்றது. குறிஞ்சி நிலத்தில் தினைப்புனம் காப்பதற்காக அமைக்கப்பட்ட குடில்கள் அச்சுறுத்தும் ஈந்தின் இலைகளால் அமைக்கப்பட்டன. பொதுவாகப் பாலைநிலமக்கள் இவ்வகை ஈந்தின் இலைகளால் இருப்பிடங்கள் அமைப்பர்.

பின்வரும் பாடலில் குறிஞ்சிநிலக் குறவர்தம் குரம்பைகள் அதேபோல் அமைத்திருப்பதனைக் காணமுடிகிறது.

“கொன்னிலைக் குரம்பையின் இழிதரும்

இன்னாது இருந்தஇச் சிறுகுடியோரே” (குறுந் 284:7-8)

அருவி நீரின் வெள்ளத்தில் பலவகை மரங்கள் அடித்துவரப்படும் காட்சி ஈந்தின் (ஈச்சம்) இலை மற்றும் இதர இலைகளால் அமைக்கப்பட்ட குடிசை என்பதால் கொன்னிலைக் குரம்பை எனச் சுட்டப்பட்டது. இவ்வாறாகக் குறிஞ்சி நிலத்தாரின் இருப்பிடங்கள் காணப்பட்டன. பெரும்பாலும் இங்கு காணப்பட்ட வீடுகள் எளிமையான குடிசைகளாகவே இருந்தன. கானகங்களில் வாழும் குறவர்களுக்கு இது போன்ற குடிசைகளே வசதியானதாக அமைந்தது எனலாம். தவிர இம்மக்களின் பொருளாதாரப் பின்புலமும், நிலவியல் அமைப்பும் இத்தகு இருப்பிடங்கள் அமைப்பதற்கு ஒரு காரணமாகவும் இருந்திருக்கக்கூடும்.

#### 2.3.5.1 குறிஞ்சிநில அரண்கள்

அக்காலத்தில் மக்கள் தம் குடியிருப்பினைச் சுற்றியும், தமது ஊர்களின் எல்லைப்புறத்திலும் எதிரிகள் உட்புகாவண்ணம் காவலுக்கு அரண்களை அமைத்திருந்தனர். இவ்வரண்களும் குடியிருப்பினைச் சார்ந்த ஒன்றாதலின் இது குறித்து அறிவதும் அவசியமாகிறது. இவ்வரண்கள் நில இயல்புகளுக்கேற்ப பல வகைகளில் அமைக்கப்பட்டிருந்தன. அதில் குறிஞ்சி நில அரண்கள்; இயற்கையாக அமைந்த மலைகளாகவும், அந்நிலத்து மக்களால் ஏற்படுத்தப்பட்ட முள் அரணாகளாகவும் காணப்பட்டன. இந்திய தேசத்திற்கு இமயம் மிகப்பெரிய அரண்களாக விளங்குவது போல் அக்காலத்து குறிஞ்சிநிலக் குடிகள் வாழ்ந்த பகுதிகளில் மலைத்தொடர்களும், சிறு குன்றுகளும் அவர்களுக்கு இயற்கை அரண்களாக விளங்கின.

“குன்ற வேலிச் சிறுகுடி...” (அகம் 232:6)

“பெருங்கல் வேலிச் சிறுகுடி...” (நற் 213:6)

மலைகளே அரண்களாக விளங்கியமையினை இங்குக் காணமுடிகிறது. சண்டைகளும், பூசல்களும் மிகுந்த அக்காலத்தில், மக்கள் இதுபோன்ற பாதுகாப்பு அரண்கள் அமைந்த இடங்களைத் தேர்வுசெய்து அங்கு தங்கள் குடியிருப்புகளை அமைத்திருக்கவும் வாய்ப்புண்டு.

“வேரல் வேலிச் சிறுகுடி” (நற் 232:4)

அடர்ந்த கானகங்களில் வாழ்ந்த குறவர்கள் தம் வீடுகளைச் சுற்றிலும் விலங்குகள், பிற எதிரிகள் நுழையாதிருக்க முட்கள் நிறைந்த மூங்கில் மரங்களை வெட்டியெடுத்து நட்டு வேலியமைத்தனர். மூங்கில் முட்களால் இருப்பிடங்களைச் சுற்றி வேலியமைக்கும் வழக்கம் இன்றும் பரவலாகச் சிற்றூர்களில் நிலவுகின்றது. இவ்வாறாக, குறிஞ்சி நிலவரின் இருப்பிடம் அமைந்திருந்த பாங்கினைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிகின்றோம்.

### 2.3.6 முல்லைநில இருப்பிடங்கள்

விலங்குகளைக் கண்டு அஞ்சிய மனிதன் காலப்போக்கில் தம் உணவுக்கும், வாழ்வியல் தேவைக்குமென சில பயனுள்ள கால்நடைகளைப் பழக்கித் தம்முடன் வைத்துக் கொண்டான். அவைகளைப் பேணிவளர்க்கத் தொடங்கிய பின் அவைகளே வாழ்வின் அடிப்படை ஆதாரங்களாயின. இத்தகு பரிணாம வளர்ச்சிப் போக்கு ஏற்பட்டது முல்லை நிலமேயாகும். இங்கு கால்நடைகளைக் கொண்டே சமூக அளவீடுகள் தீர்மானிக்கப்பட்டன. எனவே இம்மக்கள் தம் வாழ்வினில் கால்நடைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்தனர். இப்பகுதிகளில் வாழும் மக்கள், காட்டு விலங்குகளுக்கு அஞ்சி மரங்களில் பரண்கள் கட்டி வாழத் தொடங்கினர். பிறகு, அடர்ந்த

காட்டுப் பகுதிகளில் கிடைக்கும் மரக் கிளைகள், மூங்கில்களை நட்டு அதன்மேல் வலுவான மரக் கம்புகளையும், காய்ந்த இலைகளையும், சருகுகளையும் பரப்பிக் குடிசைகள் அமைத்து வாழ்ந்து வந்தனர். கால மாற்றத்தில் பின்னர் செங்கற் சுவரெழுப்பிக் கூரை அமைத்து, ஓரளவு உறுதியான வீடுகளை உருவாக்கிக் கொண்டனர். இவ்விருப்பிடங்கள் காவற்காடுகள் மற்றும் மேய்ச்சல் நிலங்கள் சூழ அமைந்திருந்தன. காடுகள் அடர்ந்ததும், மேய்ச்சலுக்கேற்ற அகன்ற வெளிகளைக் கொண்டதுமாகிய இந்நிலத்தில் கால்நடைக் கொள்ளையும் அதனையொட்டி நடைபெற்ற பகைகளும் மலிந்து காணப்பட்டன. அச்சுறுத்தல்கள் மிகுந்த வாழ்வில் தமக்கு இடையூறு ஏற்படாவண்ணம் சுற்றிலும் வேலியிட்ட தம் இருப்பிடங்களைச் சங்ககால முல்லைநில மக்கள் அமைத்துக் கொண்டனர். தாம் வாழும் குடிசைகளுக்கு முன்புள்ள முற்றத்தில், ஆநிரைகளான தாம் வளர்க்கும் ஆடு, மாடுகளுக்கும் கொட்டகை கட்டி அவைகள் தங்க வழிவகையும் செய்தனர். கீழ்க்காணும் பாடல் அதனை உறுதிசெய்கிறது,

“குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பை
செற்றை வாயில் செறிகழிக் கதவின்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்
அதளோன் துஞ்சும் காப்பின் உதள
நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்
கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்
இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்....” (பெரும், பா.வ:148-154)

இன்று குக்கிராமங்கள் (Remote village) என்று சொல்லப்படும் சிற்றூர்களில் காணப்படும் வீடுகளின் அமைப்பினை அப்படியே வார்த்தைகளால் வடித்தாற் போன்று மேற்கண்ட பாடல்வரிகள் அமைந்துள்ளது. கால்நடைகளே தங்களது மிகப்பெரிய சொத்து எனச் சிற்றூர் மக்கள் எண்ணும் அளவிற்கு அவைகள்

அவர்களுக்குப் பயன்தருகின்றன. ஆகவே தாங்கள் வசிக்கும் இருப்பிடங்களில் கால்நடைகளுக்கெனத் தனியிடம் ஒதுக்கியிருப்பர். பொதுவாக, வீட்டின் முன்பு ஆடுகளைக் கட்டியிருப்பர். கூரையின் முன்புறம் உள்ள தாழ்வாரத்தில் ஆடுகளுக்கான தழைகளைக் கயிறுகளில் கட்டித் தொங்கவிட்டிருப்பர். எண்ணிக்கையில் அதிகமாக இருக்கும் பட்சத்தில் தனிக் கொட்டகை அமைத்து அங்கு அவைகளை அடைத்து வைப்பர். இவ்வகையான இருப்பிடங்களை வரகுக் கற்றைகளால் வேய்ந்து அதன் மேல் விலங்குகளின் தோலினைப் போர்த்தியிருந்தனர். இருப்பிடத்தினைச் சுற்றிலும் முள்வேலி அமைத்திருந்தனர். (முள் வேலிக்குப் பதிலாக முள் மரங்களை நட்டதாகவும் தெரிகிறது) இது கால்நடைகளைக் காட்டு விலங்குகளின் தாக்குதலில் இருந்து காப்பாற்றுவதற்காக ஏற்படுத்தப்பட்டவையாகும். வீட்டின் அருகே ஆநிரைக் கழிவுகளைச் (எரு) சேமித்து வைத்திருப்பர். இக்கழிவுகள் பயிர்களுக்கான உரமாகப் பயன்படுத்தப்பட்டன.

குறிஞ்சி நிலத்தைப் போலவே இங்குள்ள குடியிருப்புகளும் குரம்பை என்று அழைக்கப்பட்ட போதும், முல்லை நிலக்குடியிருப்புக்கள் 'குறுங்காற் குரம்பை" என அதன் அமைப்புக் கருதி வேறுபடுத்திச் சுட்டப்பட்டது. வீட்டின் முன் ஆநிரைகளைக் கட்டி வைக்க முளைக்கால்கள் நடப்பட்டிருந்ததாகவும், வளைந்த முகத்தையுடைய செம்மறியாடுகளுடன் வெள்ளாடுகளும் அங்கு நீண்ட கயிறுகளால் கட்டப்பட்டுக் கிடந்தன என்று மேற்கண்ட பாடல்வரிகள் பொருள் உணர்த்துகின்றன. முல்லை நிலத்தாரின் இருப்பிடங்களை நோக்குகையில் தங்களுக்கும், தம் ஆநிரைகளுக்கும் பாதுகாப்பிற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து அமைக்கப்பட்டதனை அறிய முடிகின்றது. இது 'ஆநிரை கவர்தலால்' ஏற்பட்ட விழிப்புணர்வாகவும் கருத வாய்ப்புள்ளது.

#### 2.3.6.1 முல்லைநில உழவர்கள் இருப்பிடம்

தமிழர்கள் தொன்றுதொட்டுப் பாரம்பரியமாகப் பேணிவரும் தொழில் உழவுத் தொழிலாகும். தமிழர் தம் பரிமாண வளர்ச்சிக்கு வித்திட்டதும் இத்தொழிலேயாகும். குறிஞ்சி, முல்லை, மருதம் போன்ற நிலங்களில் பெரும்பாலும் உழவுத்தொழில் பேணப்பட்டது. உழவர்கள் அந்தந்த நிலங்களுக்கேற்ற தகுந்த பயிர்களைத் தேர்வு செய்து விளைவித்து வந்தனர். முல்லை நிலத்தில் ஆநிரை வளர்த்தலுக்கு அடுத்தபடியாகவே உழவுத்தொழில் மேற்கொள்ளப்பட்டது எனலாம். அவ்வாறு உழவுத் தொழிலினை மேற்கொள்வோரது இருப்பிடங்கள் தொழிற்கருவிகளும், புழங்கு பொருட்களும் சூழ அமைந்திருப்பது இயல்பு. பொதுவாகவே தொழிலாளர்களது இருப்பிடங்கள் மற்றவர்களது இருப்பிடங்களை விட வேறுபட்டே காணப்படும். ஏனெனில் ஒவ்வொருவர் மேற்கொள்ளும் தொழிலின் அடிப்படையில், வசதிக்கேற்ப இருப்பிடங்கள் அமையும். முல்லைநில உழவரின் இருப்பிடம் குறித்து அறிய பின்வரும் பாடல் தக்கதொரு சான்றாகும்.

> "................ ............................ ............................ முள் உடுத்து
>
> எழுகாடு ஓங்கிய தொழுவுடை வரைப்பில்
>
> பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்
>
> களிற்றுத் தாள்புரையும் திரிமரப் பந்தர்
>
> குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி
>
> நெடுஞ்சுவர் பறைத்த புகைசூழ் கொட்டில்
>
> பருவ வானத்துப் பாமழை கடுப்பக்
>
> கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்..." (பெரும், பா.வ:184-191)

உழவுத்தொழிலுக்கு இன்று நவீன கருவிகள் ஏராளமாக வந்துவிட்டன. ஆனால் அன்றைய மக்கள் கால்நடைகளையே பெரிதும் நம்பியிருந்தனர். நிலத்தினை உழுவதற்கு, தானியங்களைப் பிரித்தெடுப்பதற்கு, விளைபொருட்களை ஏற்றிச் செல்வதற்கு, உர (எரு) உற்பத்திக்கு, பால் பொருட்கள் தயாரிப்பதற்கு எனக் கால்நடைகள் அனைத்துத் தேவைகளுக்கும் பயன்பட்டன. ஆகவே ஒவ்வொரு ஊர்களிலும் கால்நடைத் தொழுக்கள் சூழ்ந்து காணப்பட்டன. அத்தகு கால்நடைத் தொழுக்கள் அருகே பல அழகிய வீடுகள் காணப்படும். அவ்வீடுகளின், முற்றத்தில் விளைபொருட்களான தானியங்களைச் சேமிக்கும் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட சேமிப்பகங்கள் பெண்யானைக் கூட்டங்கள் நின்றது போலத் தோற்றமளிக்கும் எனப் புலவர்கள் புனைந்துரைக்கின்றனர். முற்றத்தினை ஒட்டிய மரப் பந்தலின் கீழ் யானையின் அடிப்புற கால்களைப் போன்று தோற்றமளிக்கக்கூடியதான வரகு முதலிய தானியங்களைத் திரிக்கின்ற திரிக்கைகள் நடப்பட்டிருக்கும்; சிறிய வண்டிகளும், கலப்பையும் சார்த்தி வைத்தலால் வீட்டினது சுவர் தேய்ந்து காணப்படும்; புகை சூழ்ந்து காணப்படும் கொட்டில்களும்; மழைக்கால மேகம் போன்ற கரிய வரகு வைக்கோலால் வேயப்பட்ட கூரையினை உடைய குடிசைகளைக் கொண்ட உழவர்களது வீடுகள் காணப்பட்டன. இன்றும் சிற்றூர்களில் வசிக்கும் உழவர்களின் வீடுகள் இப்பாடலில் காட்டப்பட்டது போன்ற அமைப்பில் இருப்பதனைப் பார்க்க இயலும்.

### 2.3.6.2 முல்லைநில வேட்டைத்தொழில் செய்வோர் இருப்பிடம்

கால்நடைகளின் மூலமாகவும், பயிரிடல் வாயிலாகவும் மக்களின் உணவுத்தேவை பூர்த்தியாகினும், பண்டைய இனக்குழு வாழ்வில் மேற்கொண்ட வேட்டைத் தொழிலினைத் திணைசார் மக்கள் மறக்கவில்லை. ஓய்வு நேரங்களிலும், பெரும்பாலான முல்லைநில வேட்டுவர்கள் விலங்கு வேட்டையில் ஈடுபட்டனர். அவ்வாறு வேட்டைத் தொழிலில் ஈடுபட்டு

வாழ்ந்தோரது இருப்பிடம் காணப்பட்ட நிலை குறித்து பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது:

"உடும்பு கொலிஇ, வரிநுணல் அகழ்ந்து,
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி,
எல்லு முயல் எறிந்த வேட்டுவன் சுவல
பல்வேறு பண்டத் தொடை மறந்து, இல்லத்து
இருமடைக் கள்ளின் இன்களி செருக்கும்
வன்புலக் காட்டு நாட்டதுவே- ....." (நற் 59:1-6)

சங்க இலக்கியத் தரவுகளை நோக்குங்கால், அக்காலத்தில் காடுகளில் காணப்பட்ட முயல், ஊர்வன வகையைச் சார்ந்த விலங்கான உடும்பு ஆகியவை முக்கிய வேட்டைப் பண்டங்களாகக் கருதப்பட்டன. தவிர, காட்டுத் தவளை, புற்றுக்குள் காணப்படும் ஈசல் போன்றவற்றை வேட்டுவ மக்கள் வேட்டையாடி உண்டு வாழ்ந்தனர். அவர்களது இருப்பிடம் வேட்டைக் களமான கானகத்தில் அமைந்திருப்பதையும், வசிக்கும் வீட்டில் அவர்களால் வேட்டையாடப்பட்ட பல்வேறு பொருட்கள் விரவிக் காணப்பட்டதனையும் இப்பாடலின் வாயிலாக அறியலாம்.

### 2.3.6.3 முல்லைநிலப் போர்வீரர்கள் இருப்பிடம்

சங்ககால ஐந்திணைகளில் வாழ்ந்த மாந்தர் அனைவரும் வீரம் செறிந்த வாழ்வினை மேற்கொண்டனர். இதற்குப் புறப்பாடல்கள் சான்று பகர்கின்றன. சங்க இலக்கியப் பாடல்களை ஆராயுங்கால், சங்ககாலச் சமூகம் குறித்த பதிவுகள் பெரும்பாலும் இலைமறைகாயாகவும், சில செய்திகள் நேரடியாகவும் பொருளுணர்த்துகின்றன என்பது நாம் அறிந்த ஒன்றே. அவ்வகையில் பின்வரும் பாடலொன்று முல்லைநிலத்தில் வாழ்ந்த மறம் கொண்ட வீரனின் இருப்பிடம் குறித்து விவரிக்கின்றது:

"பிறர்வேல் போலாதாகி இவ்வூர்

மறவன் வேலோ பெருந்தகை உடைத்தே

இரும்புறம் நீரும் ஆடி கலந்து இடைக்

குரம்பைக் கூரை கிடக்கினும் கிடக்கும் ..." (புறம் 332:1-4)

போர்த்தொழிலில் ஈடுபடும் வீரனின் இருப்பிடம் இப்பாடலின் வழி அறியமுடிகின்றது. சிற்றூர் ஒன்றில் வாழும் வீரனின் வேல், ஏனைய பிற வீரர்களுடைய வேல் போல் இல்லாமல் உயரிய சிறப்புடையதாகும். அது யாதெனில் அவ்வேலின் கருமை நிறம் பொருந்திய மேற்பகுதி புழுதியால் மூடப் பெற்று, அவன் வசிக்கும் சிறிய குடிலாகிய வீட்டின்கண் உள்ள கூரையில் காணப்படும். முதுமகளிரால் மாலை சூட்டப் பெற்று, யாழின் இசை ஒலிக்க, பாட்டிசைக்கப் பெற்று வீதிகளில் எடுத்து வரப்படுதலால் பகைநாட்டு அரசனும் அஞ்சும் தன்மையினை உடையது அவ்வேல் எனப் பாடல் பொருளுணர்த்துகிறது. இங்கு வீரனின் வேல் போரில்லாக் காலங்களில் கூரையின் மீது வைக்கப்படினும் அதன் மதிப்பு குன்றாது எனச் சிறப்பித்துக் கூறப்பட்டது. இங்கு நாம் புரிந்துணர வேண்டியது அம்மற வீரனின் கூரை வீடு குறித்ததாகும். பகைநாட்டினை எதிர்த்து போரிடும் அரசனுக்கு உறுதுணையாக இருக்கும் வீரனின் இருப்பிடமும் எளிய குடிசையே ('குரம்பைக் கூரை') என்பது புலனாகின்றது.

#### 2.3.6.4 வீரர் தங்கும் படைவீடுகள்

இருப்பிடங்கள் என்பது பொதுவாகத் தேவையின் பொருட்டே உருவாக்கப்படுகின்றன. பொதுவாகத் தற்காலிகமானவை, நிரந்தரமானவை என அவை இரு வகையாகப் பிரிக்கலாம். குறிப்பிட்ட காரணங்களுக்காகச் சிறிது காலம் மட்டும் வசிக்க ஏதுவாக அமைக்கப்படுபவை தற்காலிக இருப்பிடங்களாகும். நாடோடிச் சமூகங்கள் இத்தகைய இருப்பிடங்களையே

பயன்படுத்துகின்றனர். ஓர் இடத்தினைத் தேர்வு செய்து கட்டுமான உத்தியோடு, என்றைக்கும் பயன்படும் வகையில் நேர்த்தியாகக் கட்டப்படுபவை நிரந்தர இருப்பிடங்களாகும். இது போன்றவை கூட்டுச்சமூகமாக வாழ்பவர்களால் அமைக்கப்படுகின்றன. அவ்வகையில் பார்க்கும்போது, பின்வரும் பாடல் முல்லை நிலத்தினில் நடைபெறும் சண்டைகளில் பங்குபெறும் போர்மறவர்கள்; போர்க்களங்களில் ஓய்வெடுப்பதற்காகவும், இரவுநேரங்களில் தங்குவதற்கு ஏதுவாகவும் கூடாரங்கள் அமைக்கப்பட்ட விதத்தினை விவரிக்கின்றது. இங்கு சுட்டப்படுவது தற்காலிக இருப்பிட வகையினைச் சார்ந்ததாகும்.

"கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப நல்போர்
ஓடா வல்வில் தூணி நாற்றி
கூடம் குத்திக் கயிறுவாங்கு இருக்கை
பூந்தலைக் குந்தம் குத்தி கிடுகு நிரைத்து
வாங்குவில் அரணம் அரணம் ஆக" ((முல்லை பா.வ: 37-42)

காடுகளில் பயணம் மேற்கொள்வோர் இரவு நேரங்களில் தங்குவதற்குத் தற்காலிகக் கூடாரங்கள் அமைப்பதனைத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பார்க்கின்றோம். இவ்வகைக் கூடாரங்களை ஆங்காங்கே கிடைக்கக்கூடிய மூன்று குச்சிகளை நட்டு அதன் மீது தார்ப்பாய் எனப்படும் துணிகொண்டு போர்த்தி உருவாக்கிக் கொள்வர். இது தற்காலிகக் குடியிருப்புக்கு எடுத்துக்காட்டாகும். இதே போன்ற அமைப்பினில் சங்ககாலப் போர்க்களங்களில் குடியிருப்புக்கள் ஏற்படுத்தப்பட்டன. அக்காலத்தில் அந்தணர்கள் மூன்று கோல்களை ஒருசேர இணைத்துக் கட்டி (முக்கோல்) தம்முடன் வைத்திருப்பர். அப்படிப்பட்ட முக்கோலினை ஊன்றி அதன்மீது

அவர்களது உடைகளை இட்டு வைத்தாற்போல; மூன்று கம்புகளை நட்டு, கயிற்றால் அவற்றை இருகக்கட்டி, கிடுகுகளால் போர்த்தி அமைக்கப்பட்ட தற்காலிக இருப்பிடங்களின் முன்னே தமது வலிமை பொருந்திய வில்லினை ஊன்றி அதன் மீது அம்பாரத்தூணிகளைத் தொங்க விட்டனர் என வீரர்கள் தங்கும் போர்ப்பாசறை எனும் இருப்பிடம் குறித்து மேற்கண்ட பாடல்வரிகள் வாயிலாக அறியப்படுகிறது. மேற்கண்ட செய்திகள் யாவும் சங்கப் பாடல்களின் வாயிலாக அறியப்படும் முல்லை நிலத்தாரின் இருப்பிட வகைகள் குறித்ததாகும்.

### 2.3.7 பாலைநில இருப்பிடங்கள்

பாலை நிலம் பொதுவாக வறட்சியாகவும், வெப்பம் மிகுதியாகவும் காணப்படும். ஆகவே இந்நில மக்களுக்கு இருப்பிடம் மிகவும் அவசியமாயிற்று. மனித இனம் இருப்பிடங்கள் இன்றி இயல்பு வாழ்க்கை வாழ இயலாது. பொதுவாகப் பாலை நிலச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் இரண்டு ஊர்களுக்கு இடைப்பட்ட, வழித்தடங்களை ஒட்டி மறைவான பகுதிகளில் தமது இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர். இருப்பிடங்களைச் சுற்றிலும் பாதுகாப்பு அரண்களையும் ஏற்படுத்தியிருந்தனர். இவ்வரண்கள் குறும்பு எனப்பட்டது. வழிச் செல்வோருக்கும் பகைவருக்கும் அச்சத்தினைத் தருவதாக இக்குடியிருப்புகள் அமைந்திருந்தன. எயினர்களது குடியிருப்புகள் குரம்பை எனப்பட்டன. கல்லளை எனப்படும் இயற்கையான மலைப் பிளவுகளும் அவ்வப்போது இந்நில மாந்தர்க்கு இருப்பிடமானது. மறைந்திருந்து வழிப்பறி செய்ய இத்தகு இருப்பிடங்கள் ஏதுவாயின. பொதுவாக வறட்சியான பகுதிகளில் ஈச்சமரங்கள் அதிகமாகக் காணப்படும். இவற்றை கூரைவேய இம்மக்கள் பயன்படுத்தியுள்ளனர். ஈச்சமரக் கிளைகளின் அடிப்பகுதியில் உள்ள இலைகள் முட்கள் போன்று கூர்மையாகக் காணப்படும். வேறு உயிரினங்கள் ஏதும் உட்புக முடியாத அளவிற்கு இவ்வகையான கூரைகள் அமைக்கப்பட்டன.

"நீள் அரை இலவத்து அலங்சினை பயந்த

பூளைஅம் பசுங்காய் புடைவிரிந்து அன்ன

வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது

ஆற்றுஅறல் புரையும் வெரிந் உடைகொழுமடல்

வேல் தலையன்ன வைநுதி நெடுநகர்

ஈத்திலை வேய்ந்த எய்புறக் குரம்பை" (பெரும் பா.வ:83-88)

அணில், எலி போன்ற உயினங்கள் வீட்டினுள் புகுந்து உணவுப் பண்டங்களைச் சேதப்படுத்திவிடக் கூடும் என்ற எச்சரிக்கையுடன் இவ்வகைக் கூரைகள் ஏற்படுத்தப்பட்டன. முள்ளம் பன்றியின் முதுகு போன்று காணப்படும் கூர்மையான ஈச்சமர இலைகளால் வேயப்பட்ட மேற்பாகத்தைக் கொண்டு அக்குடிசைகள் காணப்பட்டன. 'எய்புறக் குரம்பை' என்பது பன்றியின் முதுகு (எய்-முள்ளம்பன்றி) போன்ற தோற்றம் கொண்ட குரம்பைகளைக் குறிப்பதாகும். போதைப் புல் எனப்படும் ஒருவகைப் புற்களைக் கொண்டு இருப்பிடம் அமைப்பது அக்காலத்தில் பரவலாகக் காணப்பட்டது. இவ்வகைக் குடில்கள் எளியோராகிய விளிம்புநிலையில் வாழும் மக்களுக்குரியனவாகக் காணப்பட்டன. முன்றில் எனப்படும் முற்றத்துடன் கூடிய வீடுகளே பெரும்பாலும் காணப்பட்டன. முற்றம் நிழலுக்காகவும், குழுமி அமரவும் அமைக்கப்பட்டிருக்கக் கூடும்.

"தீம் தயிர் கடைந்த திரள் கால் மத்தம்

கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்

படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை,

நல்கூர் சீறூர் எல்லித் தங்கி" (அகம் 87:1-4)

சங்காலச் சமூகத்தில் சிற்றூர் மக்கள் பெரும்பாலும் வறுமையின் பிடியில் வாழ்ந்ததாகவே அறிகின்றோம். அவ்வறுமை அவர்கள் வாழ்ந்த வீடுகளின் அமைப்பினில் பிரதிபலிப்பதனை மேற்கண்ட பாடல்வரிகளின் வாயிலாக அறியமுடிகின்றது. நிழல் தரும் பொருட்டு அமைக்கப்பட்ட பந்தலையும், புல்லால் வேயப்பட்ட எளிய குடிலையும் உடைய வறுமைப்பட்ட சிறிய ஊரினை இப்பாடல் விவரிக்கின்றது. பாலைநிலச் சீறூர்களில் வாழ்ந்த இனக்குழுக்களின் புல்வேய்ந்த குடிசைகள் மற்றும் முற்றம் குறித்த செய்திகள் பல பாடல்களில் பதிவாகியுள்ளன. அவை பின்வருமாறு,

"முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை" (அகம் 63:14)

"சிறப்பும் சீறும் இன்றி சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய்குரம்பை
ஓர்ஆ யாத்த ஒருதூண் முன்றில்
ஏதில் வறுமனை...." (அகம் 369:22-25)

"இலைவேய் குரம்பை உழைஅதட் பள்ளி....." (மதுரை பா.வ:310)

"மரையினம் ஆரும் முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோல் ஊரே... " (குறுந் 235:4-5)

"உறுவெயிற்கு உலைஇய உருப்புஅவிர் குரம்பை"
(சிறுபாண் பா.வ:174)

"குவிந்த குரம்பை அம்குடிச் சீறூர்" (அகம் 329:4)

பாலை நிலத்திலமைந்த வீடுகளுக்கு உறுதியான நிலைகளும், கதவுகளும் பொருத்தியிருந்தனர். இம்மக்கள் தம் முயற்சியால் விளைவித்தோ, வேட்டையாடியோ, கவர்ந்தோ சேமித்த பண்டங்களை, உடைமைகளைப்

வீட்டில் வைத்துப் பாதுகாக்கும் பொருட்டு கதவுகளை அமைத்திருப்பர் என உணர முடிகின்றது. பின்வரும் பாடலில் கதவும், நிலையும் பொருத்திய செய்தி பதிவாகியுள்ளது.

> "இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று
> அருங்கடிக் காப்பின் அகல்நகர் ஒருசிறை
> எழுதியன்ன திண்ணிலைக் கதவம்
> கழுதுவழங்கு அரைநாள் காவலர் மடிந்தென
> திறந்து ................ ............ ..............." (அகம் 311:1-5)

பாலைநில மறவர்கள் பெரும்பாலும் வழிப்பறி செய்தலையே தொழிலாகக் கொண்டிருந்தமையால், அவர்கள் வசித்த வீடுகளில் ஆயுதங்கள் பரவிக்காணப்பட்டன. கதவுகள் அமைத்த வீடுகள் பற்றிய குறிப்புகளைப் பார்க்கும் போது, சில வீடுகள் மரங்களால் அமைக்கப்பட்ட வலிமையான நிலையோடு கூடிய கதவுகளைக் கொண்டிருந்தன. இப்பாடலில் திண்ணிலைக் கதவம் என்னும் சொல் அதனைக் காட்டுகிறது. தவிர, மரக்கழிகளைச் ஒருசேர இணைத்துக் கட்டி உருவாக்கப்பட்ட 'கட்டுக்கதவு' என்ற அமைப்பும் காணப்பட்டது. இதனை,

> "............ஒடுங்கால்ப் படலைச் சீறில் முன்றில் ..." (புறம் 325:7)

என்னும் வரியின் மூலமாக அறிய முடிகின்றது. 'ஒடு' என்ற மரத்தின் கோல்களால் நிரல்படக் கட்டி அமைக்கப்பட்ட கட்டுக் கதவினை உடைய சிறிய வீட்டினை இங்கு பார்க்க முடிகிறது. 'படலை' என்பது கதவினைக் குறிக்கும் சொல்லாக இங்கு அறிகின்றோம். இச்சொல் இன்றும் வழக்கில் உள்ளது. சிற்றூர்களில் குச்சி, கோல்களைக் கொண்டு ஆடுகள் அடைக்க உருவாக்கும்

கொட்டகைகளுக்கான கதவினைப் படல் என்ற சொல்லால்தான் இன்றும் அழைக்கின்றனர்.

2.3.7.1 **பாலைநில அரண்கள்**

எயினரது குடியிருப்புகள் காட்டரண்கள் எனும் காவற்காடுகள் சூழ அமைந்திருந்தன. எயினர்கள் முள்வேலி, புற்களால் வேய்ந்து அமைக்கப்பட்ட உயர்ந்த மதில்கள், கற்களைக் கொண்டு அடுக்கித் தம் குடியிருப்புகளைச் சுற்றி அரண்களை எற்படுத்திக் கொண்டனர். அவ்வரண்கள் மிளை, குறும்பு, வேலி என்று அழைக்கப்பட்டன. பின்வரும் பாடல்வரிகள் அரண் குறித்து அறியத்துணை புரிவனவாகும்.

"கொடுவில் எயினர் குறும்பிற்கு ஊக்கும் ..." (அகம் 319:7)

"வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை" (பெரும் பா.வ:126)

"அருங்குழு மிளை, குண்டு கிடங்கின்
உயர்ந்து ஓங்கிய நிரை புதவின்
நெடுமதில் நிரை ஞாயில்
அம்பு உமிழ் அயில், அருப்பம்....." (மதுரை பா.வ:64-67)

"பெருங்குறும்பு உடுத்த வன் புல இருக்கை
புலாஅ அம்பின் போர் அருங் கடி மிளை ..." (புறம் 181:4-5)

"........... அருமிளை இருக்கையதுவே... " (புறம் 325:13)

"ஊர்முது வேலி...........
அருமிளை இருக்கையதுவே..." (புறம் 326:1,7)

போட்டிகள் சூழ்ந்த இவ்வுலகில், ஒவ்வொரு மக்கள் தொகுதியும் தாம் சார்ந்த குழுக்களின் இடங்களையும், இருப்பிடங்களையும் பாதுகாக்க வேண்டிய சூழல் ஏற்பட்டபோது; இதுபோன்ற அரண்களை உருவாக்கியிருக்கக் கூடும். ஆகவேதான் தெய்வப்புலவர் திருவள்ளுவரும் அரண் குறித்த சிறப்பு கருதி ஓர் அதிகாரமே வடித்துள்ளார். நாளடைவில் அரசுகள் தோன்றியதால், மருத

நிலத்தினில் உருப்பெற்று கோலோச்சிய அரசர்கள் தாங்கள் உறையும் கோட்டைகளைச் சுற்றிலும் அகழிகளையும், மதில்களையும் அமைத்தனர். அரசு என்ற அமைப்பு தோற்றம் பெற்றதால் அரண்கள் அமைத்துக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது எனலாம். பொதுவாக பண்டைக்கால அரண்கள் நான்கு வகைகளில் அமையும்; அவை, மதில், அகழி, மலை, காடு என்பனவாகும்.

"மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்

காடும் உடைய தரண்" (குறள் 742)

என வள்ளுவர் அக்காலத்தில் அமைக்கப்பட்ட பாதுகாப்பு அரண்கள் குறித்து உரைப்பது நோக்கத்தக்கதாகும். இவற்றில் மலையும், காடும் இயற்கை அரண்களாகும். அகழியும், மதிலும் செயற்கையாக ஏற்படுத்தப்பட்டவையாகும். வள்ளுவர் கூறும் காட்டரண் பாலைநிலத்தில் காணப்பட்டது போன்ற காவற்காடே ஆகும்.

"……….…… …………… …………. பருந்துபட,

ஒன்னாத் தெவ்வர் நடுங்க ஒச்சி

வைந்நுதி மழுங்கிய புலவுவாய் எஃகம்

வடிமணிப் பலகையொடு நிரைஇ முடிநாண்

சாபம் சார்த்திய கணதுஞ்சு வியல்நகர்

ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்

வரைத்தேன் புரையும் கவைக்கடைப் புதையொடு

கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்

தொடர்நாய் யாத்த துன்அருங் கடிநகர்;

வாழ்முள் வேலிச் சூழ்மிளைப் படப்பை

கொடுநுகம் தழீஇய புதவின் செந்நிலை

நெடுநுதி வயக்கழு நிரத்த வாயில்

கொடுவில் எயினக் குறும்பில் சேப்பின்..." (பெரும் பா.வ:118-133)

பாலை நிலத்தினில் வாழும் எயினர் சிவந்த கண்களையும் அஞ்சத்தக்க தோற்றத்தையும் உடையோராவர். அம்மக்களது இருப்பிடங்களில் அவர்களால் வேட்டையாடப்பட்டுக் கிடக்கும் ஊனினைத் தின்பதற்காகப் பருந்துகள் வந்து வட்டமிடும். தம்முடன் உடன்படாத பகைவர் அஞ்சுமாறு, அவர்களைக் தாக்கியதால் முனை மழுங்கிப் புலால் நாறும் வேல்களும், மணிகள் கோர்த்து வடிக்கப்பட்ட கேடயங்களும் வீட்டில் வரிசையாக வைக்கப்பட்டிருக்கும். எயினரது வீடுகள் காணப்படும் பகுதியில் ஊகம் புல்லால் வேயப்பட்ட உயர்ந்த மதில்களாகிய அரண்கள் அமைத்திருப்பர்; அம்புக்கூடுகள் அங்கு தொங்கிக் கொண்டிருக்கும்; நாண் ஏற்றப்பட்ட வில்களும், வீட்டின் முன் பந்தலில் துடிப்பறைகள் தொங்கும்; இருப்பிடங்களைச் சுற்றிலும் காவல் காடுகள் அமைத்திருப்பர்; ("முனைஉழை இருந்த அம்குடிச் சீறூர்" (அகம் 367:5)) முள் மரங்களை வரிசையாக நட்டு பாதுகாப்பு வேலிகள் அமைத்திருப்பர்; கணைய மரத்திலான கதவினை உடைய ஊர் வாயில் காணப்படும்; இவற்றின் நடுவே நாய்கள் காவல்காக்கும். இவ்வாறாக எயினர் எனும் பாலைநில மறவர்களின் வீடுகள் குறித்து விவரிக்கப்படுகின்றது. இருப்பிடங்களுக்கு நான்கு அடுக்குகள் கொண்ட பாதுகாப்பு அரண்கள் அமைத்த பாங்கினை இங்கு அறியமுடிகிறது. தவிர, ஒவ்வொரு ஊரைச் சுற்றிலும் கற்களாலும் அரண்களை ஏற்படுத்தினர்.

"கடுங்கண் மறவர் கல்லெழு குறும்பின்" (அகம் 87:4)

இதுபோன்ற கல் அரண்கள் பண்டைய இனக்குழு வாழ்வின் எச்சங்களாகும். கற்கால மனிதன் வாழ்ந்த குகைகளைச் சுற்றிலும் கூலாங்கற்களைக் கொண்டு சுற்றுவேலி போன்று அமைத்துள்ளதனை அண்மைக்கால அகழாய்வுகள் மூலம் அறிகின்றோம். இருப்பிடங்களின் பாதுகாப்பினைக் கருத்தில் கொண்டு கற்களால் அரண்களை அமைத்தனர். புற்களால் அமைக்கப்பட்ட மதிலை விட

கற்கள் கொண்டு அமைக்கப்படும் அரண் உறுதியானது என்பதால் இதனை ஏற்படுத்தியிருக்கக் கூடும். தமிழகத்தில் செங்கற்களின் பயன்பாட்டினை அறியும் முன்னர் இயற்கையாகக் கிடைக்கக் கூடிய கருங்கற்கள் இருப்பிடங்கள் அமைப்பதற்குப் பயன்பட்டிருக்க வேண்டும். இன்றும் சிற்றூர்களில் வீடுகளின் சுற்றுச்சுவர் அமைக்க முற்றிலும் கருங்கற்களை மட்டுமே கொண்டு கட்டப்படும் சுவர்கள் காணப்படுகின்றன.

### 2.3.8 மருதநில இருப்பிடங்கள்

நாகரிக வாழ்வின் தொட்டில்கள் என மருதநிலம் கருதப்படுகின்றது. வேந்தர்கள் ஆட்சிசெய்த நிலம் என்பதால் இங்குக் கோட்டைகளும், அரண்களும் காணப்பட்டதனைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகக் காண்கிறோம். பிற்காலக் கட்டிடக் கலைக்கு ஆதாரமாக மருத நிலக் குடியிருப்புகள் விளங்கின என்றால் அது தகும். இங்கு வாழ்ந்த மக்கள் நிலையான குடியிருப்புகளைக் கொண்டிருந்தனர். கோட்டைகளும், குடிசைகளும் அவற்றில் அடக்கம். வயல்நிலங்களைக் கொண்ட சமதளமான இப்பகுதியில் வாழ்ந்த குடிகள் களிமண்ணால் சுவர் எழுப்பி, தென்னை ஓலைகளால் கூரைவேய்ந்து வாழத் தொடங்கினர். பின்னர் செங்கற்களால் குடியிருப்புகள் அமைத்தும், கம்புகளைக் கொண்டும் புல், வைக்கோல் ஆகியவற்றைக் கொண்டு கூரை அமைத்தும் வாழலாயினர். வாழ்க்கை வசதிகளும், விஞ்ஞான அறிவும் பெருகிய போது தூண்கள், முற்றம், தாழ்வாரம் முதலிய உட்பிரிவுகள் கொண்ட உறுதியான இருப்பிடங்களை உருவாக்கிடக் கற்றுக் கொண்டனர். வீடுகள் கட்டும்போது தானியங்களைச் சேமித்து வைப்பதற்கென்றே தனியான பாதுகாப்புக் களன்களையும் சேர்த்தே கட்டினர். உழவர், அந்தணர், தோப்புக்குடிகள் என இந்நிலத்தினில் வாழ்ந்த பலதரப்பட்ட மக்களது இருப்பிடங்கள் குறித்துத் தனித்தனியாக விவரிக்கத்தக்கச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

#### 2.3.8.1 மருதநில உழவர் இருப்பிடம்

மருதநிலம் என்ற உடனே நினைவிற்கு வருவது வயல்களும், உழவர்களுமேயாகும். ஒவ்வொரு நிலத்திலும் விளையக்கூடிய முக்கியப் பயிருக்கும் அந்நிலத்தினில் அமைக்கப்படும் இருப்பிடத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். அது யாதெனில், முல்லைநில உழவரது இருப்பிடம் வரகுக் கற்றைகளால் வேயப்பட்டுக் காணப்பட்டது. காரணம், முல்லை நிலத்தில் வரகு அதிகமாகப் பயிரிடப்பட்டது. ஆனால் மருத நில உழவரது இருப்பிடங்களைக் குறித்த தரவுகளைப் பார்க்கும் போது அவை நெல் வைக்கோல் மற்றும் தென்னங் கீற்றுகளால் வேயப்பட்டுக் காணப்பட்டன. குறிப்பாக, மருதநிலக் குடியிருப்புக்கள் நேர்த்தியாகச் செவ்வனே கட்டப்பட்டிருந்தன. தானியங்களைச் சேமிப்பதற்கென உயரமான களன்கள் (நெற்கூடுகள்) கொண்ட வீடுகளாகக் காட்சியளித்தன.

“தண்பணை தழீஇய தளரா இருக்கை
பகட்டா ஈன்ற கொடுநடைக் குழவிக்
கவைத்தாம்பு தொடுத்த காழூன்று அல்குல்
ஏணி எய்தா நீல்நெடு மார்பின்
முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்
குமரி மூத்த கூடுஓங் நல்இல்;

................. ......................................... ..................... ...........................

அமளித் துஞ்சும் அழகுடை நல்இல்
தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை.....” (பெரும் பா.வ:242-253)

கால்நடைகளான ஆடு, மாடுகள் உழவுத் தொழிலுக்கு அவசியமானவையாகும். அவற்றின் பயனை அறிந்திட்ட மனிதன் அவற்றைப் பழக்கித் தம்முடன்

வைத்துக் கொண்டான். மருதநில உழவர்களின் வாழ்வில் பிரிக்க இயலாதவையாகக் கால்நடைகளின் பயன்பாடுகள் அமைந்தன. உழவர்களது இருப்பிடங்களில் ஆநிரைகளின் கன்றுகளைக் கட்டிவைக்க நெடிய தாம்புகள் பிணைக்கப்பட்ட கயிறுகள் வீடுகளின் முன்னே ஊன்றப்பட்ட கம்புகளில் (முளைக்கால்கள்) காணப்பட்டன. வயல்களில் விளைந்த நெல்மணிகளைச் சேர்த்து வைக்க உயரமான தாழிகள் போன்ற கூடுகளைக் கொண்ட வீடுகள் இங்கு காணப்பட்டன. ஏணிக்கும் எட்டாத தாழிகள் எனப் பாடல் வரிகள் சுட்டுவதால், அத்தாழிகளை உள்ளகத்துக் கொண்ட வீடுகள் எவ்வளவு பெரிது என்பதனை இங்கு உணர முடிகின்றது. பசி, வறுமை என்பதையே அறியாத வலிமையான அசையாக் குடியிருப்புகளை உடையதாக மருதநில ஊர்கள் விளங்கின. இப்பாடலில் மருத நில உழவரது வீட்டின் அமைப்பு குறித்து விவரிக்கப்படுகிறது. பாடலில் 'துளங்கா இருக்கை', 'தளரா இருக்கை', 'நல்இல்' போன்ற சொற்கள் இருப்பிடத்தின் உறுதித்தன்மையினையும், வலிமையினையும், சிறப்பினையும் குறிப்பதாகும்.

### 2.3.8.2 மருத நிலத்து தோப்புக் குடிகளின் இருப்பிடம்

மருத நிலத்தினில் நெல்வயல்களுக்கு அடுத்ததாக தென்னைமரத் தோப்புகள் அதிகமாகக் காணப்பட்டன. அத்தோப்புகளில் சில குடிகள் தமக்கென இருப்பிடங்களை அமைத்துக் கொண்டு வேளாண்மைத் தொழிலினை மேற்கொண்டனர். அவர்களை உரையாசிரியர்கள் தோப்புக்குடிகள் என்கின்றனர். இம்மக்கள் தென்னைமரக் கீற்றுகளால் வேய்ந்து உருவாக்கப்பட்ட இருப்பிடங்களையும், அதன் அருகே மலர்கள் பூத்துக் குலுங்கும் வீட்டுத் தோட்டங்களையும் ஒருங்கே அமைத்திருந்தனர்.

"…………… …………….. …………….. ……… கறை அடிக்

குன்றுஉறழ் யானை மருங்குல் ஏய்க்கும்

வந்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த

மஞ்சள் முன்றில் மணம்நாறு படப்பை

தண்டலை உழவர் தனிமனைச் சேப்பின்" (பெரும் பா.வ:352-356)

உரல் போன்ற கரிய அடியினையும், மலையினை ஒத்த தோற்றத்தினையும் கொண்ட யானையின் கால்களைப் போன்று காணப்படும் தென்னை மரத்தின் வாடிய மடலால் வேயப்பட்டதும், முற்றத்தின் முன் மஞ்சளும், மணம் வீசும் பூந்தோட்டமும் சூழ்ந்ததுமாக மருதநிலத்து தோப்புகளில் வசித்த உழவர்களின் மனைகள் அமைந்திருந்தன. வீடுகளைச் சுற்றிலும் அழகிய மலர்ச்செடிகளையும் நட்டு வளர்த்தனர். இங்கு அறியப்படும் தோப்புக்குடிகளின் இல்லங்கள் தெருக்களற்று தோப்புகளுக்குள் தனித் தனியாக அமைந்திருந்தன. ஒவ்வொரு தோப்புகளிலும் அதற்கு உரியவரது குடும்பம் இருப்பிடங்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். பொதுவாக கூட்டுக்குடும்பமாக இங்கு வாழ்ந்திருக்கக்கூடும். மண்ணைக் குழைத்துச் சுவர்களை எழுப்பி, தென்னை மட்டைகளால் மேற்கூரை வடிவமைத்து, அதன் மீது தென்னஞ்சோகைகளைக் (தெங்கின் வாடுமடல்) கொண்டு வேய்ந்து இருப்பிடங்கள் உருவாக்கப்பட்டன. தற்காலத்தில் குடிசை என்றாலே பொதுவாகத் தென்னை மரக் கீற்றுகளால் வேயும் வழக்கம் சிற்றூர்களில் இன்றும் வழக்கத்தில் உள்ளது.

### 2.3.8.3 மருத நிலத்து அந்தணர் இருப்பிடம்

அன்றைய மருத நிலச் சமூகத்தில் ஆதிக்க இனமாக விளங்கிய அந்தணர்களின் குடியிருப்புகள் மற்றவர்களை விட வேறுபட்டுக் காணப்பட்டன. அதற்குச் சான்றாக பின்வரும் பாடல் அமைகின்றது:

"செழுங்கன்று யாத்த சிறுதாட் பந்தர்

பைஞ்சேறு மெழுகிய படிவ நல்நகர்

மனைஉறை கோழியொடு ஞமலி துன்னாது

வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்

மறைகாப்பாளர் உறைபதிச் சேப்பின் ….” (பெரும் பா.வ:297-301)

செழுமையான கன்றுகளைப் பிணித்துக் கட்டியுள்ள சிறிய கால்களை உடைய பந்தலையும்; ஆவினது சாணத்தால் மெழுகப்பட்ட தரையினையும், இல்லுறை தெய்வங்களையும் உடைய அந்தணரது இருப்பிடங்களில் கோழிகளையும், நாய்களையும் காண இயலாது. “பார்ப்பார்இல் கோழியும் நாயும் புகல் இன்னா”[20] என்று இன்னாநாற்பது விளம்புவது இங்கு நோக்கத்தக்கதாகும் மாறாக, கிளிகளை வளர்ப்பார்கள். வேதங்களையும், அது தொடர்பான மரபுகளையும் பாதுகாக்கும் தொழிலினை மேற்கொள்ளும் இவர்கள் வசிக்கும் வீடுகள் தனிப்பட்டுக் காணப்பட்டன. அக்காலத் தமிழர்கள் வாழ்ந்த வீடுகளின் தளங்களுக்குப் பசுவினது சாணத்தினால் மெழுகும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர். இது சிறந்த ஒரு கிருமிநாசினி என்பதும், இருப்பிடத்தினை குளிர்ச்சியாக வைத்திருக்கும் என்பதும் அறிவியல் உண்மை. இதனை அக்காலத் தமிழர்கள் உணர்ந்தவராய் திகழ்ந்துள்ளனர்.

### 2.3.9 நெய்தல்நில இருப்பிடங்கள்

பண்டைத் தமிழகத்தைச் சுற்றிய மூன்று திசைகளிலும் அரண்களாய் அமைந்தவை அகன்ற, ஆழமான கடற்பரப்பேயாகும். இக்கடற்பரப்பின் ஓரம் வசித்த நெய்தல் நில மக்கள், தம் பகுதியில் கிடைத்த மரஞ்செடி கொடிகளைக் கொண்டு தங்களுக்கான இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர் என்பதைச் சங்கப்பாடல்களின் வாயிலாக அறியலாம். சங்க காலத்தில் கடற்புரத்து நெய்தல் நிலத்து வாழ்ந்த மக்களின் வாழ்வாதாரத் தொழிலாக மீன்பிடித்தொழில் அமைந்தது. பொதுவாகக் கடலினுள் மீன்பிடிக்கச் செல்லும் இம்மக்கள் குழுவாகவே செல்வது வழக்கம். இவர்களது இருப்பிடங்கள் தனித்தன்மை வாய்ந்தவையாகவும், கடற்கரையில் நிலவும் தட்ப வெப்பச்

சூழ்நிலைக்கு ஏற்பவும் அமைக்கப்பட்டு இருந்தன. 'கடல் வாரிக் கொடுக்கவும் செய்யும், வாரிக்கொண்டும் போகும்' எனும் வாய்மொழிக்கேற்ப கடற்கரையில் இருப்பிடங்களை அமைப்பது தொழிலுக்குச் சாதகமானதாக அமைந்தாலும் இயற்கைச் சீற்றங்களுக்கு அகப்படாமல் அமைப்பது அவசியமாகிறது. அவ்வகையில் சங்ககால மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டவர்களது குடில்கள் குறித்து அறிய ஏராளமான சான்றுகள் கிட்டுகின்றன. இந்நிலத்துச் சிற்றூர்களிலும் கூரை வீடுகளே பெரும்பாலும் காணப்பட்டன. பின்வரும் செய்திகளின் வாயிலாக நெய்தல் நிலத்துப் பரதவரின் இருப்பிடம் பற்றியும் அரண் குறித்தும் அறியலாம்.

#### 2.3.9.1 பரதவர் குடியிருப்பு

கடற்கரை ஓரங்களில் கடற்காற்று மிக வேகமாக வீசுவது உண்டு. இதனை உப்புக்காற்று என்பர். கட்டிடங்களை இக்காற்று சேதப்படுத்தி சிராய்ப்பை ஏற்படுத்தும். அமாவாசை, பௌர்ணமி போன்ற நாட்களிலும்; இயற்கைச் சீற்றங்கள் ஏற்படும் தருணங்களிலும் கடற்கரைப் பகுதிகளில் பெறும் சேதம் ஏற்படும். தவிர, மணற்பாங்கான பகுதி என்பதாலும் நிலையான இருப்பிடங்கள் இங்கு கட்டுவது கடினமானதாகும். இங்கு வாழ்ந்த மீனவர்களாகிய பரதவர் இன மக்களது இருப்பிடங்கள் பெரும்பாலும் எளிய குடில்களாகவே இருந்தன. இது குறித்துச் சங்க இலக்கியங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

"நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்

புலால்அம் சேரி புல்வேய் குரம்பை" (அகம் 200:1-2)

நிலவு போன்று வெண்ணிற மணல் பரந்த தெருக்களும்; புல்லால் வேயப்பட்ட புலால் நாறும் சிறிய கூரைகளை இருப்பிடங்களாகப் பரதவர்கள் கொண்டிருந்தனர்.

"குறியிரைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்" (அகம் 210:1)

குறுகிய வாசல்களை உடைய கூரை வீடுகளாக பரதவர்கள் வாழ்ந்த இருப்பிடங்கள் விளங்கின. கடற்கரையினை ஒட்டியே இவர்களது இருப்பிடங்கள் அமைந்திருந்தன.

"கிடுகு நிறைத்து எஃகு ஊன்றி
நடுகல்லின் அரண் போல
நெடுந்தூண்டிலில் காழ் சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்பண்
நிலவு அடைந்த இருள் போல
வலை உணங்கும் மணல் முன்றில்
வீழ்த் தாழை தாள் தாழ்ந்த
வெண் கூதாளத்துத் தண் பூங் கோதையர்
சினைச் சுறவின் கோடு நட்டு
மனைச் சேர்த்திய வல் அணங்கினான்"

(பட்டின பா.வ:78-88)

வீரச்செயல் புரிந்து இறந்த ஒரு வீரனைத் தெய்வமாக வணங்கும் பொருட்டு நாட்டப்பட்ட நடுகல்லைச் சுற்றிலும் வேல்களை நட்டு அதன்மீது கேடயங்களை வேலியாக வைப்பர். அதுபோல நீண்ட தூண்டில்களை நட்டு அமைக்கப்பெற்ற குறுகிய வாசலை உடைய கூரை வீடுகள் காணப்படும். அவ்வீடுகளின் முன்னால் உள்ள மணற்பரப்பில் வலைகள் உலர்த்தப்பட்டிருக்கும். புலால் நாற்றமுடைய அம்மணற்பரப்பில் பூக்களின் மணம் வீசும் கடற்கரைப் பகுதியில் பரதவர்களின் குடியிருப்புகள் அமைந்திருக்கும். நெய்தல் நிலத்துக் காணக்கூடிய வேழமரத்தின் கம்புகளை வெட்டியெடுத்து நிரல்பட நட்டு, அதன் இடையிடையே வஞ்சி, காஞ்சி மரக் கம்புகளைக் கலந்து அதனைத் தாழை நாரினால் இறுகக் கட்டுவர். கூரைக்குத்

தருப்பை எனும் நாணல் வகையினைச் சார்ந்த புல்லைப் பரப்பி வேய்ந்து தம் குரம்பைகளை அமைத்தனர். கூரைமீது மீன்களை வாரியெடுக்கப் பயன்படுத்தும் பறிகளை வைத்திருப்பர். வீட்டிற்கு முன் புன்னைமரக் கிளைகளால் பந்தலமைத்து அதில் சுரை, புடலை, பாகற்காய் போன்ற கொடித் தாவரங்களைப் படர விட்டிருந்தனர். அதனைப் பின்வரும் பாடல்வரிகள் விவரிக்கின்றன.

"வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ

தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த

குறியிறைக் குரம்பை பறியுடை முன்றிற்

கொடுங்காற் புன்னைக்கோடு துமித் தியற்றிய

பைங்காய் தூங்கும் பாய்மணற் பந்தர்

........................ ...................... ......................... ......................

கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்." (பெரும் பா.வ:263-274)

பாலைநிலத்தின்கண் ஈந்தின் ஓலையால் வேயப்பட்ட குடிசை, முல்லை நிலத்தில் வரகு வைக்கோலால் வேயப்பட்ட குடிசை, மருத நிலத்தில் நெல் வைக்கோலால் வேயப்பட்ட குடிசை ஆகியவற்றைக் காட்டிய புலவர் நெய்தல் நிலத்தில் தருப்பை எனும் புல் மிகுதியாகக் காணப்படுவதைக் கோடிட்டு தருப்பைப் புல்லால் வேயப்பட்ட குடிசையினைக் குறிப்பிடுகின்றார். திணைசார் குடிகள் தங்கள் வாழ்ந்த பகுதிகளில் கிடைத்த பொருட்களைக் கொண்டே தங்களுக்கான இருப்பிடங்களை அமைத்துக் கொண்டனர் என்பது இதன்மூலம் புலனாகின்றது.

#### 2.3.9.2 நெய்தல் நில அரண்கள்

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவர்களது குடியிருப்புகளைச் சுற்றிலும் தாழை மரங்களையும், முற்றிய பனை ஓலையினையும், கூர்மையான முட்களையும் இணைத்துக்கட்டி பாதுகாப்பு வேலி அமைத்தனர். இத்தகு அரணுக்கு நடுவே புல்லால் வேயப்பட்ட குடிசைகளை அமைத்து வசித்தனர். எதிரிகளிடமிருந்து தம் உடைமைகளைக் காக்கவும், இருப்பிடங்களின் மீது தம் உரிமையினை நிலைநாட்டவும் இப்படிப்பட்ட அரண்களை ஏற்படுத்தியிருக்க கூடும். பின்வரும் பாடல் வரிகள் பரதவர் அமைத்த அரண் குறித்து விவரிக்கின்றது. முல்லை நிலத்தில் முள்வேலியிடப்பட்ட அரண்களுக்கு நடுவே ஆயர்களது இருப்பிடங்கள் காணப்பட்டதனைப் போன்று; நெய்தல் நிலத்தில் அரண் போன்ற வேலியினை பரதவர் ஏற்படுத்தினர்.

"கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிரைக் குரம்பைக்
கொழு மீன் கொள்பவர் பாக்கம்... " (நற் 207:1-3)

"ஒலி காவோலை முள் மிடை வேலி" (நற் 38:8)

குறிஞ்சி, முல்லை, பாலை ஆகிய நிலங்களில் குடியிருப்புகளைச் சுற்றி அமைக்கப்பட்ட காப்பு அரண்கள் போலவே பரதவரின் அரண்களும் காணப்பட்டன. குறிஞ்சியிலும் முல்லையிலும் முள் வேலி, பாலையில் புல்லால் வேயப்பட்ட உயர்ந்த மதில் வேலி, நெய்தலில் பனை மட்டையாலும், ஓலையாலும், முட்களாலும் ஆன அரண்கள் அமைக்கப்பட்டன. இவை யாவற்றையும் பார்க்கும் போது தமிழர் தம் தற்காப்பு உத்தியினை அறியமுடிகின்றது.

### 2.3.10 சிறுகுடி

சங்க இலக்கியங்களில் இனக்குழுக்களைக் குறித்த செய்திகள் இடம்பெருமிடத்து சிறுகுடி என்னும் சொல் பெரும்பாலான இடங்களில் காணப்படுகின்றது. இச்சொல் பல பொருள் குறிக்குமாறு பயன்படுத்தப்பட்டுள்ளது. அதாவது குடியிருப்பினைக் குறிக்கவும், ஊர்ப்பெயராகவும், குடும்பம் மற்றும் குலம் குறித்தும் இச்சொல் எடுத்தாளப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. இங்கு பின்வரும் பாடலடிகளில் சிறுகுடி என்னும் இச்சொல் குடியிருப்புகளைச் சுட்டுவனவாக உள்ளன:

"கல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே" (அகம் 7:22)

"புலவு நாறு சிறுகுடி மன்றத்து ...." (நற் 338:8)

"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்" (அகம் 140:1)

"கல்லென் சிறுகுடித் தங்கின் மற்று எவனோ?" (அகம் 110:13)

"புலாஅல் மறுகின் சிறுகுடிப் பாக்கத்து..." (அகம் 270:2)

"கானல்அம் சிறுகுடிச் சேந்தனை செலினே" (நற் 254:12)

"அலவன் ஆடிய புலவு மணல் முன்றிற்<br>காமர் சிறுகுடி செல்நெறி வழியின்" (நற் 239:5)

ஐவகை நிலங்களிலும் சிறுகுடி என்ற இச்சொல் இருப்பிடங்களைக் குறிப்பதற்காக இதே போல் எடுத்தாளப்பட்டுள்ளது. 'குடி' எனும் சொல்லிற்கான பொருள்களுள் குடியிருப்பும் ஒன்றாகும். ஆகவே அளவில் சிறியதாய் காணப்படும் குடியிருப்புகளைக் குறிப்பதற்குச் சிறுகுடி என்ற சொல் வழங்கப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகின்றது. இக்குடியிருப்புகளையும் அவற்றின் அமைப்பினையும், அவற்றை உருவாக்கிய மக்களின்

பின்புலத்தினையும் ஆராய்கையில் சங்ககாலச் சமூகம் பெற்றிருந்த மரபுசார் அறிவினையும், பண்பாடுகளையும் உய்த்துணர முடிகின்றது.

### 2.3.11 இருப்பிடங்களும் சூழலியலும்

இன்றைக்கு புதிய வீடுகள் கட்ட திட்டம் வரையும் போதே அவ்வீட்டின் முன் அழகுக்காகவும், காற்றுக்காகவும், நிழல்தரும் பொருட்டும், இன்னும் சிலர் வாஸ்து பார்த்தும்; மரங்களையும், செடிகொடிகளையும் சேர்த்தே கட்டிடவியல் வல்லுனர்கள் வரைவு தயாரிக்கின்றனர். செடிகள், மலர்த் தொட்டிகள் வளர்ப்பது மனதிற்கு இதம் தருவதோடு சூழலியலுக்கும் உகந்தது என்பதாலும்; பயனுள்ள செடி, கொடிகள், மூலிகைகள், மரங்களை நட்டு வளர்க்கும் போது, நம் தேவைகளுக்கு அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதால்தான் வீடுகளில் அவற்றை அமைகின்றனர். இது இன்றைய நடைமுறை. ஆனால் இயற்கையோடு இயைந்த வாழ்வியலை மேற்கொண்ட தொல்தமிழர்கள் தமக்கான இருப்பிடங்களை உருவாக்கியதோடு அல்லாது அதனைச் சுற்றிலும் செடிகளையும் மரங்களையும் நட்டு வளர்த்து வந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் உரைக்கின்றன. அவை முற்றங்களில் பூச்செடிகளாகவும், கொடிகளாகவும், வீட்டைச் சுற்றிய பகுதிகளில் தோட்டமாகவும் தோப்புகளாகவும் அமைந்திருந்தன. இவ்வகையாக வீடுகளில் வளர்க்கப்படும் மரங்களை மனைமரம் என்றனர். தவிர, தங்களது குலக்குறியாகப் பல அரசர்கள் மரங்களை வைத்திருந்ததனையும், அதனைப் போற்றிப் பாதுகாத்ததையும் புறப்பாடல்கள் விவரிக்கின்றன.

“மனை மரம் ஒசிய ஒற்றி…” (அகம் 58:13)

“மனை மரம் விறகு ஆக….” (புறம் 16:5)

வீடுகளில் மரங்கள் வளர்த்தனர் என்பதற்கு மேற்கண்ட வரிகள் சான்றுரைக்கின்றன. பகை நாடுகளைக் கவரும் வெற்றிபெற்ற வேந்தர்கள் தாம் கவர்ந்த பகுதிகளிலுள்ள வீடுகளில் வளர்க்கப்பட்ட மரங்களை வெட்டி

அதனையே விறகாக்கி தீயிட்டு நாசம் செய்த நிகழ்வுகளையும் சங்க இலக்கியப் புறச்செய்திகளில் பார்க்க முடிகிறது. ஊர்களைச் சுற்றிலும் வேலி (அரண்) அமைத்தனர் என்பதை முன்னர் அறிந்தோம். ஒவ்வொரு வீடுகளைச் சுற்றிலும் செடிகொடிகளை ஊன்றி வேலிகள் போன்று அமைத்து அவற்றில் பூங்கொடிகளை வளர்த்துப் படர விட்டு அழகுபடுத்தினர் என்பதனையும் அறியமுடிகின்றது. வீடுகளைச் சுற்றிலும் நொச்சியினை நட்டு வேலிபோல் அமைத்து அதில் முல்லைக் கொடிகளை வளர்த்துள்ளனர்.

"மயில்அடி இலைய மாக்குரல் நொச்சி
மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ..." (நற் 115:5-5)

"மனைஇள நொச்சி மௌவல் வால்முகைத்
துணை நிரைத்தன்ன ..." (அகம் 21:1-2)

"மனைமா நொச்சி ..." (நற் 246:3)

"மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய..." (அகம் 367:4)

வீடுகளைச் சுற்றிலும் வயலைக்கொடி எனும் ஒருவகைக் கொடிவகையினைப் படரவிட்டிருந்தனர் என்பதைப் பின்வரும் பாடலடிகள் விளக்குகின்றன. இக்கொடிகள் அடர்த்தியாக வளரக் கூடியதாகவும்; முட்கள் உடையதாகவும் அழகிய பூக்கள் பூக்கக்கூடியதாகவும் இருந்திருக்கக் கூடும்.

"மனைநகு வயலை மரன்இவர் கொழுங்கொடி..." (அகம் 176:13)

"மனைநடு வயலை வேழம் சுற்றும்
துறைகேழ் ஊரன்........" (ஐங் 11:1-2)

புன்னை மரங்களையும் வீடுகளில் வளர்த்தனர். புன்னைமர நிழலில் சிறுவர்களும், மகளிரும் விளையாடிய செய்திகள் பல இடங்களில்

பதிவாகியுள்ளன. புன்னை மரம் நிழல் தரக் கூடியதாகவும், வெண்மையான பூக்கள் பூக்கக கூடியதாகவும் இருப்பதால் அதனை விரும்பி வளர்த்தனர். இன்றும் சிற்றூர்களில் புன்னை மரம் (புங்க மரம்) நிழலுக்காக வீடுகளில் வளர்க்கப்படுகிறது.

"பொழில்மனைப் புன்னை" (அகம் 260:8)

வீடுகளின் முன் பூந்தோட்டங்கள் அமைத்து அழகுபடுத்திய செய்தியும் அறியப்படுகிறது. குறிஞ்சி நிலக் குறவர்கள் வீட்டு முற்றத்தில் பொன் போன்ற பூக்கள், மணியைப் போன்று அரும்புகளாக மலர்ந்து உள்ளன. அவை கீழே விழுந்து பரவி அகலமான பாறைகளை அழகுபடுத்துகின்றன எனப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

"குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்
மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணி ஏர் அரும்பின் பொன்வீ தாஅய்
வியல்அறை வரிக்கும் முன்றில்" (அகம் 232:6-9)

இது தவிர, வீட்டிற்கு முன்பக்கம் முற்றம் அமைக்கப்பட்டு அதில் பூஞ்செடிகள் வளர்க்கப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. ஒவ்வொரு ஊரிலும் மன்றம் என்ற பொதுவான இடம் அமைந்திருக்கும். அங்கு ஒரு மரம் வளர்க்கப்படும். அம்மரத்தின் நிழலில் ஊரவை நடைபெற்றது. "மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்..." (புறம் 181:1) ஊர்மன்றத்தில் வேலமரம் விளங்கியமையினை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு நாட்டிலும் காவல் மரம் என ஒன்றை வளர்த்து அதற்கு முதன்மை கொடுத்து வந்தனர். அரண்மனையில் வளர்க்கப்படும் காவல் மரம் அரசரது வெற்றியின் அடையாளமாகக் கருதப்பட்டது. மேற்கண்ட கூற்றுக்களைப் பார்க்கையில் அன்றைய காலகட்டத்திலேயே ஒவ்வொரு வீடுகளிலும் மரஞ்செடி, கொடிகளை

வளர்ப்பதில் தமிழர்கள் ஆர்வம் காட்டினர் என்பது வெளிப்படுகின்றது. தற்போது சூழலியல் மாற்றம் காரணமாக வீட்டிற்கு ஒரு மரமாவது வளர்க்க வேண்டும் என ஆய்வாளர்களும், அரசாங்கமும் அறிவுறுத்துகின்றனர். இதனைச் சங்க காலத்திலேயே தமிழர்கள் கடைபிடித்தனர் என்பது வியப்பான ஒன்றேயாகும். இதுபோன்ற செயல்களை நோக்கும் போது சங்கத்தமிழர் தம் இருப்பிடங்களைச் சுற்றிலும் அழகு படுத்திய அழகுணர்ச்சியையும், சூழலியல் அறிவினையும் உணரமுடிகின்றது.

### 2.3.12 **பொதுவான இருப்பிடங்கள்**

சமூக விலங்கு எனப்படும் மனிதன் சமூக இயக்கத்திற்கேற்ப இணைந்து செயல்பட வேண்டியுள்ளது. அவ்வகையில் சங்ககால மக்கள் சமூகமாகக் கூடி வாழ்ந்தனர் எனச் சங்க இலக்கியங்கள் வழி அறியலாம். சமூக நடவடிக்கைகள் மேற்கொள்ளும் இடங்களாகச் சங்ககால இருப்பிடங்களைச் சுற்றி; மன்றம், பொதியில், ஊரவை போன்ற இடங்களையும் அமைத்திருந்தனர்.

#### 2.3.12.1 **பொதியில் - மன்றம்**

பொதியில் என்பது ஊர்மக்களின் பொதுவான இல்லமாகிய ஊர்ச்சாவடியைக் குறிக்கும். பொது + இல் - பொதுவில் என்றாகி பொதியில் எனப்பட்டது. இதனை உரையாசிரியர்கள் அம்பலம், பொதியம் எனக் குறிப்பிடுகின்றனர். பகைநாட்டினை வென்று அங்குள்ள மகளிரைக் கவர்ந்து வந்து இப்பொதியிலில் தங்க வைத்திருந்தனர். அவர்களையே பொதுமகளிர் எனச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. பொதியிலின் அமைவிடம் குறித்து; முன்னூர்ப் பொதியில் என இது ஊர்க்கு நடுவே அனைவரும் கூடுமிடத்தில் இருந்ததென புறப்பாடல் எடுத்துக்காட்டுகின்றது. பொதுவாக, பெரிய மரங்கள் அருகே பொதியில் அமைக்கப்பட்டது. வம்பலர் எனும் வழிச்செல்வோர் ஓய்வெடுக்கும் கூடமாகவும் திகழ்ந்தது இப்பொதியில். சங்க இலக்கியங்களில்

பெரும்பாலான இடங்களில் மன்றம், பொதியில் குறித்த பதிவுகள் காணப்படுகின்றன.

"பறைபட பணிநிலம் ஆர்ப்ப இறை கொள்பு

தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய..." (குறுந் 15:1-2)

பறையும், சங்கும் மங்கள நாளில் முழங்குவனவாகும். அந்நாளில் கூடுதற்கு ஏற்ப நிழலும், பரந்த இடமும் கொண்ட ஆலமர நிழலில் மக்கள் கூடும் பொதியில் காணப்பட்டது எனப் பாடலில் குறிப்பிடப்பட்டது. ஆலமரம் பரந்த கிளைகளைக் கொண்டு நிழல் தருவதாயின் மக்கள் அனைவரும் கூடுவதற்கு ஏற்றதாக அமைவதால் அங்கு பொதியிலை அமைத்திருக்கக் கூடும்.

"கலி கெழு கடவுள் கந்தம் கைவிடப்

பலி கண் மாறிய பாழ்படு பொதியில் ..." (புறம் 52:12-13)

ஊர் பாழ்பட்டதால் ஊர்மன்றத்தில் உறைந்த தெய்வம் அவ்விடம் விட்டு அகழும், இவ்வாறு பாழான அம்பலங்களில் சூதாடு கருவியை வைத்ததனால் அவ்விடம் குழியானது. அக்குழிகளில் காட்டுக் கோழிகள் முட்டையிடும் காடாக பொதியில்கள் கெட்டொழிந்தன. அம்பலங்களில் தெய்வம் உறையும் என மக்கள் நம்பினர்.

"மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்" (முருகு பா.வ:226)

திருமுருகாற்றுப்படையில் முருகன் எங்கெல்லாம் இருப்பான் என விளக்கப்பட்டுள்ளது. முருகன் வாசம் செய்யும் இடங்களை வரிசைப்படுத்தும் போது அவன் மன்றத்திலும், பொதியிலிலும், இன்னும் பிற இடங்களிலும் உறைவானென மேற்கண்ட வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. பொதியில், மன்றம் போன்ற இடங்களில் தெய்வம் உறையும் என்ற கூற்றிற்கு மேற்கண்ட பாடல்வரி வலுசேர்ப்பதாகும்.

“மலர் அணி மெழுக்கம் ஏறிப் பலர் தொழ

வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்...” (பட்டின பா.வ:248-249)

“கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து

நரைமூ தாளர் அதிர்தலை இறக்கி

கவைமனத்து இருத்தும் வல்லு வனப்பு அழிய

வரிநிறச் சிதலை அரித்தலின் புல்லென்று

பெருநலம் சிதைந்த பேஎம்முதிர் பொதியில்...” (அகம் 337:6-10)

ஊர் வளம் குன்றியதால் குடிமக்கள் குடிபெயர்ந்து சென்றுவிட்டமையால் ஊர்மன்றம் பாழ்பட்டுக் கிடந்தது. அம்மன்றத்தில் உள்ள அம்பலத்தில் நரை முடிகொண்ட முதியவர்கள் விளையாடக்கூடிய இடம் கறையான் அரித்துப் பொலிவிழந்து காணப்பட்டது எனப் பாடல் பொருளுணர்த்துகிறது. பொதியிலில் ஆடவர் சூதாடு கருவியினைக் கொண்டு சூதாடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதும் புலனாகிறது. இதுபோல பல தரவுகள் பொதியில் குறித்து சான்றுரைக்கின்றன.அவை பின்வருமாறு,

“புற்றுடைச் சுவர புதல்இவர் பொதியில்...” (அகம் 307:11)

“மனை பாழ்பட்ட மரைசேர் மன்றத்து

பணைத்தாள் யானை பரூஉப்புறம் உரிஞ்சி

செதுகாழ் சாய்ந்த முதுகால் பொதியில்” (அகம் 373:2-4)

“அவையிருந்த பெரும் பொதியில்” (மதுரை பா.வ:161)

மன்றம் என்பதற்கு அகராதிகள் 'மரத்தடிப் பொதுவிடம்' எனப் பொருள் தருகின்றன. இவை பெரிய மரங்களின் அடியில் அமைக்கப்பட்டிருந்தது. மன்றம் இரு வகைகளில் காணப்பட்டது. ஒன்று மரத்தடி நிழலில் அமைக்கப்பட்ட திட்டுக்களாகவும், மற்றொன்று; பந்தர் போன்று

அமைக்கப்பட்டதாகும். மன்றப்பனை, மன்றப்பலவு, மன்றப்புன்னை, மன்றவிளவு, மன்றப்பெண்ணை, மன்றவேம்பு, மன்றமரா போன்ற சொற்கள் மன்றத்தில் காணப்பட்ட மரவகைகளைக் குறிக்கின்றன. சங்க இலக்கியங்களில் அறியப்படும் பொதியிலும், மன்றமும் ஓரே பயன்பாட்டிற்கே அமைக்கப்பட்டிருந்தன. மன்றத்தின் சிறப்பு அது விவாத அரங்காகவும், வழக்குகள் தீர்க்கும் இடமாகவும் இருந்ததேயாகும். மன்றங்கள் பல்வேறு பயன்பாடுகளுக்கு என ஏற்படுத்தப்பட்டது. விழாக்கள் நடைபெறும் இடமாகவும் மன்றம் விளங்கியது. ஊர் முதியவர்கள் விளையாட்டரங்கமாகவும் திகழ்ந்தது. குறிப்பாக, பொழுதுபோக்குக் கலைகளான கூத்து, இசை நிகழ்த்துமிடமாகவும், மடலேறல் நிகழ்வு நடைபெறும் இடமாகவும் இருந்தது. போர்க்காலங்களில் எதிரிகள் இம்மன்றங்களைப் பாழ்படுத்துவதைக் குறிக்கோலாகக் கொண்டிருந்தனர். நீதி வழங்கும் இடமாகவும்; தெய்வம் உறையும் இடமாகவும் கருதப்பட்டது. சுவர்களோடும், தூண்களோடும் கூடிய கூரைகளாவும்; திட்டைகளாகவும் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

"மல்லல் மன்றத்து மதவிடை கெண்டி

பகல்மகிழ் தூங்கும் தூங்கா இருக்கை" (பெரும் பா.வ:143,146)

குறிஞ்சி நிலக் கானவன் பகைவரின் ஆவினங்களைக் கவர்ந்து வந்து, தான் முன்பு பெற்ற கள்ளிற்கான கடனைச் செழுத்துவான். பின்பு ஊர்மன்றத்தில் காளையினை அறுத்துண்பான். தோப்பிக் கள்ளினைப் பருகி அதனால் உண்டான மயக்கம் தீர தாளத்தின் ஓசைக்கேற்ப தம் தோளினை உயர்த்தி ஆடிக்களிப்பான் என்று பாடலில் கூறப்பட்டுள்ளது. மன்றம் அனைவரும் கூடிக் களித்து இன்புறும் இடமாகவும் விளங்கியிருக்கக் கூடும் என்பது புலனாகிறது. கூத்தர்கள் தம் கருவிகளோடு மன்றங்களில் தங்கி கூத்து நிகழத்தினர் எனப் பின்வரும் பாடல் விவரிக்கின்றது:

"இரும்பேர் ஒக்கல் கோடியர் இறந்த

புன்தலை மன்றம் காணின்..." (அகம் 301:23-24)

ஊர் ஊராகச் சென்று கூத்தாடும் கலைஞர்கள் தங்கும் இடமாகவும் மன்றங்கள் பயன்பட்டன. தவிர ஊர்மக்கள் குரவைக் கூத்து போன்ற கூத்துக்களை ஆடி மகிழும் இடமாகவும் விளங்கின. ஊர்ப் பெரியோர்கள் அடங்கிய முறைவழங்கும் அவைகள் சிற்றூர்களிலும் இருந்தன. இத்தகு அவைகளில் முறையிட்டு மக்கள் நீதி பெற்றனர் என்றும் அறியமுடிகிறது. யாவருக்கும் சம நீதி வழக்கும் அவைகள் மன்றங்களில் கூடி விவாதித்து முறையான தீர்ப்பினை வழங்கினர் என்ற செய்தி நோக்கத்தக்கதாகும். நாள்மகிழிருக்கை என்ற அவையும் இத்தகு மன்றங்களில் கூடின. இந்த அவையில் கலைஞர்கள் போற்றப்பட்டனர். அங்கு கள்ளுண்டு அனைவரும் களித்தனர். மன்றங்கள் குறித்து அறிய பின்வரும் பாடல்வரிகள் உதவுகின்றன:

"புலம்பு கூட்டுண்ணும் புல்லென் மன்றத்து ..." (நற் 33:3)

"முரம்பு அடைத்திருந்த மூரி மன்றத்து ..." (அகம் 103:6)

"முனைபுலம் பெயர்ந்த புல்லென் மன்றத்து ..." (அகம் 157:11)

"அருங் கடி அன்னை காவல் நீவி

பெருங்கடை இறந்து மன்றம் போகி ..." (நற் 365:1-2)

"......சிறுகுடி மன்றம் பறந்தது உரை ..." (கலி 102:38)

(பெரும்: 422, பட்டின; 252-255, நற்: 292, 246,255 பதிற்: 12,22,25,29 கலி: 58,102,103,108) இவ்வாறாக மன்றங்கள் அமைந்திருந்த விதம் குறித்த செய்திகள் சங்க இலக்கியங்களில் விரவிக் காணப்படுகின்றன. ஆகவே இருப்பிடங்கள் என்பவை மனிதனின் பாதுகாப்பினை மட்டும் உறுதி செய்வதில்லை. மாறாகச் சமூக மதிப்பீடுகளையும் பொருளாதார அளவீடுகளையும் காட்டுவனவாகும்.

“மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்று வீடு. குளிர், மழை, வெயில் முதலிய இடர்களில் இருந்து தன்னைக் காப்பாறிக் கொள்ளவும், உடைமைகளையும் பொருள்களையும் வைத்துப் பாதுகாக்கவும் உறங்கவும், குடும்ப வாழ்க்கை நடத்தவும் மனிதனுக்கு இருப்பிடம் தேவைப்படுகின்றது. தங்குவதற்கு வீடு என்ற ஒன்று இல்லாமற் போனால் அது மனிதனுடைய உடல்நலத்தினைப் பாதிக்கும். மனிதனுடைய நல்லுணர்வுகள் சிதைந்து மறைந்து, அவன் ஒரு விலங்காக மாறக் கூடும். இதை உணர்ந்தே ஐக்கிய நாடுகள் மன்றத்தின் மக்கள் குடியேற்றங்களின் மையம் (U.N. Centre for Human Settlement) மக்களுக்கு குறிப்பாக ஏழை மக்களுக்குச் சரியான வீட்டு வசதி செய்து தரப்பட வேண்டும் என்று ஒவ்வொரு நாட்டினையும் வலியுறுத்துகின்றது”[21] இத்தகவல் மனிதர்களுக்கு இருப்பிடம் எத்துனை அவசியமானது என்பதை விவரிப்பதாக உள்ளது. இனக்குழு வாழ்வு தொடங்கியே தமிழச் சமூகத்தார் நிலையான குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொண்டு நாகரீகமாக வாழ்ந்தனர் என்பதற்கு திணைசார் மக்கள் அமைத்திருந்த குடியிருப்புகள் தக்க சான்றாகத் திகழ்கின்றன.

### 2.3.13 முடிவுரை

மனிதன் நிலையான வாழ்வு வாழ்ந்திட இருப்பிடங்களே காரணமாயின. அவ்வகையில், இனக்குழு மக்களாக வாழ்ந்த சங்ககாலச் சிற்றூர் மக்கள் தாம் வாழ்ந்த ஐந்திணைகளிலும் தங்களுக்கெனத் தனித்தனி இருப்பிடங்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்துள்ளனர். ஒவ்வொரு திணையிலும் மக்கள் ஏற்படுத்திக் கொண்ட இருப்பிடங்கள் அவரவர்க்கே உரிய மரபுசார் அறிவுடன் உருவாக்கப்பட்டன. சங்ககாலச் சிற்றூர்களில் பெரும்பாலும் எளிய குடிசை வீடுகளே காணப்பட்டன. இக்குடிசைகள் ஆங்காங்கே கிடைக்கக் கூடிய இயற்கையான மூலப் பொருட்களைக் கொண்டே உருவாக்கப்பட்டன. சூழலியல் அமைப்பிற்கேற்ப வீடுகளைச் சுற்றிலும் மரங்கள், தோட்டங்கள்,

மலர்செடிகளை அமைத்து அழகுபடுத்தினர். ஒவ்வொரு ஊரிலும் பொதுவான இருப்பிடங்களும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இருப்பிடங்களைச் சுற்றிலும் ஊர்களைச் சுற்றிலும் பாதுகாப்பு அரண்களை ஏற்படுத்தியிருந்தனர்.

## குறிப்புகள்

1 இந்தியா டுடே (இதழ்), ஆகஸ்ட் - 25, 2005, ப - 15

2 தமிழ் விக்கிபீடியா தளத்திலிருந்து - (www.ta.wikipedia.com)

3 தமிழ் விக்கிபீடியா தளத்திலிருந்து - (www.ta.wikipedia.com)

4 க. அழகர், விருதுநகர் மாவட்ட பளியர்களின் வாழ்வியல், ப - 50

5 இலா. வின்சென்ட், தமிழ் இனமும் நிலமும், ப - 91

6 மேலது, ப - 98

7 க.ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, ப - 166

8 வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-6, ப - 100

9 ப.சரவணன் (உ.ஆ), சிலப்பதிகாரம், ப - 204

10 தமிழ் விக்கிபீடியா தளத்திலிருந்து - (www.ta.wikipedia.com)

11 ஞா.தேவநேயப் பாவாணர், பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப - 56

12 தொ.பரமசிவன், அறியப்படாத தமிழகம், ப - 47

13 பிங்கலநிகண்டு - மூலமும் உரையும், ப - 441

14 மேலது, ப - 446

15 வடமலை நிகண்டு- நூற்-253, ப - 20

16 மேலது - நூற் - 214, ப - 18

17 சீவகசிந்தாமணி - மூலமும் உரையும், பாகம்-1, கழக வெளியீடு, ப - 686

18 இன்னாநாற்பது, பா - 2, ப - 303

19 வாழ்வியல் களஞ்சியம், தொ-5, ப- 570

## இயல் - 3

## சங்ககாலச் சிற்றூர்ச் சமூகமும் அதன் உட்கூறுகளும்

### 3.1 முன்னுரை

நாடோடிகளாக வாழ்ந்த ஆதிமனிதன் ஒரு கட்டத்தில் நிலையாக ஓரிடத்தில் வாழத் தொடங்கினான். விலங்குகள் போல் பொதுப்புணர்ச்சி மேற்கொண்ட அவன் வாழ்க்கை மாற்றம் பெற்று தமக்கெனத் தனித் துணையினைத் தேர்ந்து கொண்டான். அதன் விளைவாகத் தாம் வசிக்க இருப்பிடத்தினை உருவக்கினான். இதன் வாயிலாக, குடும்பம் என்ற சமூக நிறுவனம் படிப்படியாகத் தோற்றம் பெற்றது. உணவுக்கென வேட்டையாடச் செல்கையில் தனியே செல்லாது கூட்டாகச் செல்வது நல்ல பயனளித்தது. அதனால் ஒவ்வொரு குடும்பமும் அருகிலுள்ளோரிடம் சுமூக உறவு கொண்டு வாழவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கொண்டும் கொடுத்தும் வாழ்ந்த அம்மக்கள் சமூகம் என்ற வட்டத்திற்குள் தங்களை இணைத்துக் கொண்டனர். இவ்வாறாக ஒவ்வொரு நிலத்திலும் வாழ்ந்த மக்கள் இனக் குழுக்களாக, கூட்டுச் சமூகமாக இணைந்து வாழ்ந்தனர். அவ்வகையில் சங்ககாலச் சிற்றூர்களில் நிலவிய சமூகக் கட்டமைப்பு, அங்கு வாழ்ந்த பல்வேறு இனக்குழுக்கள், சீறூர் மன்னர்கள் குறித்தும், அக்காலத்தைய சமூகப் பிரிவுகள், பாகுபாடுகள் பற்றியும் ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### 3.2 சமூகம் - சமுதாயம் சொல்லாடல்கள்

இனக்குழு மக்கள் தம் அன்றாட வாழ்வில் வேட்டையாடல், பயிரிடல் எனப் பல்வேறு தொழில்களை மேற்கொண்டனர். அத்தொழில்களின் அடிப்படையில் குலங்கள் அடையாளப்படுத்தப்பட்டன. திணைசார் மக்கள் தங்களுக்குள் ஒருவரைத் தலைவனாக ஏற்றுக்கொண்டனர். அவ்வகையில், ஐவகை நிலங்களிலும் காணப்பட்ட ஒவ்வொரு இனக்குழுவிற்கும் ஒரு தலைவன் முன்னிலைப் படுத்தப்பட்டான். குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்ட சிற்றூர்ப் பகுதிகளில் வாழும் குடிகளின் தலைமைப் பொறுப்பினை ஏற்பவன்

இனக்குழுத் தலைவன் எனப்பட்டான். இத்தகு தலைவர்களைச் சீறூர் மன்னரென இலக்கியங்களில் புலவர்கள் அடையாளப்படுத்தினர். தம் இனத்தாரைக் காக்கவும், வழிநடத்தவும் வேண்டிய பொறுப்பு அவனுக்கு உரியதாகும். சங்ககாலத்தில் சிற்றூர்ப் பகுதிகளில் இத்தகு சீறூர் மன்னர்களே கோலோச்சினர். இவ்வாறாகச் சங்க காலச் சமூகம் உருப்பெற்றது எனலாம். சமூகம் தனிமனிதனோடு கொண்டுள்ள உறவும், தனிமனிதன் சமூகத்தோடு கொண்டுள்ள உறவும் பிரிக்க இயலாத ஒன்றாகும். அவ்வரிசையில் பார்க்கும் போது, சமூகவியல் ஆய்வில் சமூகம் - சமுதாயம் என்ற இரு சொற்களும் தவிர்க்க இயலாதவைகளாக விளங்குகின்றன. இவ்விரு சொற்களையும் விளங்கிக் கொள்ளாமல் சமூகவியல் ஆய்வில் இறங்கும் போது, முழுமையான புரிதலைப் பெற்றிட இயலாது. மனிதர்களின் அன்றாடச் செயல்பாடுகளில் பெரும்பாலானவை பிற மனிதருடன் சேர்ந்தே அமைகின்றன. எனவேதான் சமூகவியலின் முக்கிய ஆய்வுப் பொருண்மையாகவும், ஆய்வுக் களமாகவும் சமூகம் அல்லது மக்கள் குழு அமைகின்றது.

### 3.2.1 சமூகம் (Society)

"சமூகம் என்ற சொல்லை ஃபெர்டினண்ட் டோனிஸ் (Ferdinand Toennies) எனும் சமூகவியல் அறிஞர் முதன் முதலில் அறிமுகப்படுத்தினார்"[1]. சமூகம் என்பது மனிதக் கூட்டங்கள் முழுமையையும் குறிக்கப் பயன்படும் சொல்லாகக் கருதப்படுகின்றது. இனக்குழு வாழ்வினை அடுத்து எழுந்த மாற்றங்கள் சமூகம் என்ற கட்டமைக்கப்பட்ட நிறுவனம் தோன்றக் காரணமாயின. குழுவாக இணைந்து வேட்டையாடிய நிகழ்வும் இதற்கு வித்தாக அமைந்தது எனலாம். "ஒரு நிலப்பகுதியில் நிலையாகக் கூடி வாழும் பெருந்திரளான மக்கள் என்ற பொருளில் சமூகம் எனும் சொல் விளங்குகின்றது. அதாவது தம்மைப் பேணிக்காத்துக் கொள்வதற்கும், அழியாமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக் குழுவே சமூகம் எனப்படுகின்றது"[2]. என்ற கருத்து இங்கு

பொருத்தமானதாக உள்ளது. பலதரப்பட்ட மனிதர்களைத் தன்னகத்தே உள்ளடக்கி ஒரு சமூகம் எழுப்பப்படுகின்றது. சமூகத்தின் அடிப்படை வேராக மனிதர்கள் விளங்குகின்றனர். மனித நடத்தைகளைச் சமூகம் வரையறுத்து ஒழுங்குபடுத்துகின்றது. அதன் அடிப்படையில் மனிதன் இயங்குகின்றான். இதனின்று மாறுபடுகையில் அவனைச் சமூகம் சீர்செய்கின்றது அல்லது ஒதுக்குகின்றது. "சமூகம் என்பது மனிதர் கூட்டத்தைக் குறிக்கும் விரிந்த பொருளுடைய சொல்லாகும். இது பல்வேறுபட்ட மக்களை, அல்லது மக்கள் கூட்டத்தை உள்ளடக்கிய ஒரு பொருளியல் சார்ந்த சமூக உட்கட்டமைப்பு எனலாம்"[3]. இவ்வாறாக சமூகம் என்ற சொல்லுக்கான புரிதல்கள் அமைகின்றன.

### 3.2.2 சமுதாயம் (Community)

சமுதாயம் என்பது மனித இனத்தின் சமூக, பொருளாதார, அரசியல் ஈடுபாடுகளில், தொடர்பு நிலையின் கண் இயங்கி வரும் ஓர் அமைப்பு முறை 'Social Structure' எனக்கூறலாம். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்பிற்குள் இயங்கி வருகிறது. "ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொதுவாழ்க்கை நெறியினைப் பின்பற்றிக் கூட்டாக வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் (Community) எனப்படும். இது மக்கள் ஒன்றுகூடி, ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்"[4]. குறிப்பிட்ட அடையாளத்துடன் ஓர் வரையறைக்குள், குறிப்பிட்ட நிலப்பகுதிக்குள் குழுமியிருந்து வாழும் மக்கள் கூட்டமே சமுதாயம் எனப்படுகிறது. சமுதாயத்தார் தம் குழுக்களுக்குள் தங்களுக்கெனத் தனி நெறிமுறைகளைக் கடைபிடிப்பர். தங்களது தேவைகளை முடிந்தவரை தம்மை ஒத்த தம் சமுதாயத்தினரோடு மட்டுமே நிறைவேற்றிக் கொள்வர். ஒவ்வொரு சமுதாயத்தாரும் வேறுபட்ட வாழ்வியல் முறைகளையும், தனித்தனிப் பழக்கவழக்கங்களையும், கட்டுப்பாடுகளையும் கொண்டிருப்பர்.

### 3.2.3 சமூகமும் சமுதாயமும்

சமுதாயம் என்பது சமூகத்தின் ஒரு உட்பிரிவாகும். சமுதாயம் ஒரு சிறிய மக்கள் தொகுதியாக இருக்கும். சமூகத்திற்குள் பல சமுதாயங்கள் அமைந்திருக்கும். சமுதாயத்திற்குள் பல குடும்பங்கள் அங்கம் வகிக்கின்றன. சான்றாக, சமூகம் என்பதனை ஒரு மரம் என்று கொள்வோமாயின், அதன் கிளைகளாகச் சமுதாயங்கள் அமைகின்றன. குடும்பம், சமுதாயம், சமூகம் இம்மூன்றும் ஒன்றையொன்று நெருங்கிய தொடர்பினைக் கொண்டு இயங்கிவருபவையாகும். சமூகத்தில் தங்களை உறுப்பினர்களாக ஒவ்வொரு சமூகமும் இணைத்துக் கொள்கின்றன. பின்வரும் விளக்கப்படம் வாயிலாக அதனை அறியலாம்.

**சமூகம் ⇒ சமுதாயம் ⇒ குடும்பம்**




சமுதாயம் என்பது தனிநபர் சார்ந்தது அல்ல. மாறாக, தனிநபர் இன்றி சமுதாயமும், சமூகம் என்ற அமைப்பும் இல்லை. தனிநபர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்துள்ள அமைப்பே சமுதாயமாகின்றது. “ஒரு பொதுவான வாழ்க்கையின் அடிப்படை நிலைகளைப் பங்கிட்டு, ஒரு குறிப்பிட்ட இடத்தில் சேர்ந்து வாழ்கின்ற மக்கள் தொகுதியே சமுதாயம் எனப்படுகிறது. இதற்குக் குறிப்பிட்ட நிலம் அல்லது இடம் இன்றியமையாத ஒன்றாகும். ஆனால் சமூகம் எனும் போது நிலம் அல்லது இடம் பரவலாகின்றது. இதனால்தான்

சமுதாயம் சமூகத்தின் ஒரு பிரிவாகவும் அதன் அங்கமாகவும் திகழ்கின்றது. அதாவது சமூகம் அமைந்திருக்கின்ற நிலப்பகுதியின் ஒரு சிறிய இடத்தில் சமுதாயம் அமைந்திருக்கின்றது"[5] என்னும் விளக்கம் இங்கு நோக்கத்தக்கதாகும். மனிதன் சமுதாய நடத்தைகள் வாயிலாகக் கட்டுப்படுத்தப்படுகிறான். தனிமனிதன் தன் துணையுடன் குடும்பம் என்னும் அமைப்பின் வழியே சமுதாயத்தில் தம்மை ஒரு உறுப்பினராக இணைத்துக் கொள்கிறான். இது போன்ற பல குடும்பங்கள் இணைந்து சமுதாயத்தினை எழுப்புகின்றனர். பல சமுதாயங்களின் தொகுப்பே சமூகம் எனப்படுகிறது. "சமூகம், சமுதாயம் எனும் இவ்விரு சொற்களுமே வடமொழிச் சொற்களாகும். இவை மனு, மகாபாரதம், ரிக் வேதம், கௌசிக சூத்திரம் ஆகிய நூல்களில் கையாளப்பட்டுள்ளன"[6] என்ற கருத்தின் அடிப்படையில் நோக்குகையில், இவ்விரு சொற்களுமே பல மொழிகளிலும் பயன்படுத்தப்பட்ட, இருவேறுபட்ட பொருள்களைக் குறிக்கக்கூடிய சொற்கள் என்பதை அறியலாம். சமூகம் - சமுதாயம் என்ற இவ்விரு சொற்களும் பொருண்மை அடிப்படையில் வேறுபட்ட சொற்களே என்றாலும், இச்சொற்கள் ஒரே பொருளைக் குறிப்பவைதான் என்பாரும் உளர்.

### 3.3 தொல்காப்பியர் காலச் சமூகம்

மக்கள் தொகுதிகளை உள்ளடக்கியதே சமூகம் என்பது சமூகவியல் அறிஞர்கள் பலரின் கூற்றாக உள்ளது. அவ்வகையில் ஆணும், பெண்ணும் சமூகத்திற்கான விளைநிலங்களாக உள்ளனர். மக்களின் வாழ்க்கையினை அகம், புறம் எனப் பகுப்பது தமிழ் மரபாகும். இது உலக அரங்கில் அனைவருக்கும் பொருந்துவதாகவே உள்ளது. தொல்காப்பியர் தம் நூலில் அக வாழ்வின் ஒழுக்கங்களையும், புற வாழ்வின் ஒழுக்கங்களையும் பட்டியலிட்டுள்ளார் என்பது அறிந்த ஒன்றேயாகும். மேலும், அவர் தம் நூலில் அக வாழ்க்கையினை; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நிலம்சார்

திணைப் பாகுபாடுகளின் வழியே உணர்த்தியுள்ளார். புற வாழ்க்கையினை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு புறத்திணைகளின் வாயிலாகவும் விவரிக்கின்றார். இத்திணை ஒழுக்கங்களின் வாயிலாக அக்காலத்தைய சமூகத்தினை ஓரளவு வரையறை செய்ய இயலும். பண்டைத் தமிழரின் நாகரிகத்தினையும், பழக்க வழக்கங்களையும் அறிந்து கொள்வதற்குத் தொல்காப்பியத்தில் சான்றுகள் நிறைய உள்ளன. சங்ககாலச் சமூகம் குறித்து ஆராய்கையில், தொல்காப்பியர் காலச் சமூகத்தை உய்த்துணர்வது அவசியமாகிறது. தொன்மையும் செம்மையும் வாய்ந்த இலக்கண நூலான தொல்காப்பியம் தொல்தமிழரின் வாழ்வியலைச் செவ்வனே சித்தரித்துள்ளது. பொதுவாகத் தமிழின் தொன்மையினை உணர்த்திட, விளக்கிட உதவும் சான்றுகளுள் தலையாயது இந்நூலேயாகும். அப்படிப்பட்ட இந்நூலில் இடம்பெற்றுள்ள தமிழ்ச் சமூகம் குறித்த பதிவுகளைப் பார்க்கும் போது அன்றைய சூழலில் நிலவிய சமூகம் குறித்து ஆழமாகச் சிந்திக்கத் தூண்டுகின்றது.

தொல்காப்பியர் காலச் சமூகத்தில் பல அடுக்குகள் கொண்ட சமூகக் கட்டமைப்பு காணப்பட்டதாகத் தெரிகின்றது. வருணாசிரம முறைப்படி உயர் வர்க்கத்தினரை; அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற முதல்தரப் பாகுபாடு தொல்காப்பியத்தில் முன்வைக்கப்படுகிறது. ஓதலும் தூது செல்தலும் உயர்ந்தோர் தொழில் என்கிறார் தொல்காப்பியர். வேளாண் மாந்தர்க்கு உழுதொழிலைத் தவிர பிறதொழில் இல்லை என்கிறார்; அதாவது படிப்பு மற்றும் இதர உரிமைகள் இல்லை என்கிறார். அடிமைகளுக்கும் வினை செய்வோர்க்கும் காதலித்துத் திருமணம் செய்து கொள்ளும் உரிமை இல்லை. அப்படிக் காதலித்தாலும் அது பெருந்திணை, பொருந்தாக் காமம் வரிசையில் அடங்கும் என்கிறார் தொல்காப்பியர். இப்படிப்பட்ட சமூக அநீதிகள் சங்ககாலத்திலும் தொடர்ந்திருத்தல் கூடும். ஆகவே அக்காலத்தினைப் பொற்காலம் என அறைகூவல் விடுப்பது எவ்விதத்தில் தகும் எனச் சிந்திக்க

வேண்டியுள்ளது. எனவே தொல்காப்பியர் காலச் சமூகத்தினை ஓரளவாவது புரிந்து கொண்ட பின்பு சங்ககாலச் சமூகத்தை அணுகுவது பொருத்தமுடையதாகும்.

### 3.3.1 மக்கட் பிரிவுகள்

தொல்காப்பியர் காலத்தில் மக்கட் குழுக்களைத் தனித்தனியே அவரவர் மேற்கொண்ட வினைகளின் அடிப்படையில் தொல்காப்பியர் வகைப்படுத்தியுள்ளார். 'அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்' என்று சமூத்தில் முதன்மையான சமுதாய வகைமையினைச் சுட்டுகின்றார். தவிர,

"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை இல புறத்து என்மனார் புலவர்.
ஏவல் மரபின் ஏனோரும் உரியர்…" (தொல்,பொருள்,அகத்:23,24)

மேற்கண்ட நூற்பாவினால் அறியப்படும் வினைவலர், ஏவலர், அடிதொழில் செய்வோர் என்பது, மற்றொரு சமுதாய வகையாகும். இத்தகையோர் ஆதிக்க வர்க்கத்தினரான வேந்தர்கள், குடியானவர்களிடம் அடிமைத் தொழில் புரிந்தோராவர். "தொல்காப்பியர் காலத்தைய சமூகம் பல்வேறு வர்க்கங்களாகப் பிரிந்திருந்த காலமாகும். ஆண்டான் அடிமை உருவாகியிருந்த உடைமை வர்க்க, ஆதிக்கக் காலம் என்பதை உணரலாம்"[7] என்ற கருத்தின் மூலம் வர்க்கப்பிவுகள் அக்காலத்தில் உருவாக்கப்பட்டிருந்ததை அறிய முடிகிறது.

### 3.3.2 ஈ, தா, கொடு

தொல்காப்பியம் தொழில் அடிப்படையிலேயே சமூகத்தைப் பாகுபாடு செய்கின்றது என்று குறிப்பிடுவோருக்கு மறுப்புரையாக இம்மூன்று சொற்களும் அமைகின்றன. தொல்காப்பியர் வாழ்ந்த காலம் அனைத்துத் தரப்பினரையும் சமமாகப் பாவிக்கும் சமூகம் என்றால் வேறுபாடுகளை உணர்த்தும் இம்மூன்று சொற்களை அவர் குறிப்பிட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது.

"ஈ தா கொடு எனக் கிளக்கும் மூன்றும்

இரவின் கிளவி ஆகிடன் உடைத்தே" (தொல்,சொல்,எச்ச:48)

இம்மூன்று சொற்களும் ஒருவன் மற்றொருவனிடம் இரத்தலைக் குறிக்கும் சொற்களாகும். அக்காலத்தைய சமூகத்தில் இரத்தலுக்கும் கூட தகுதியினை (வேறுபாடு) நிர்ணயித்தனர் என்பது வெளிப்படையாகிறது. அவற்றுள்,

"ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே..." (தொல்,சொல்,எச்ச:49)

என்ற நூற்பாவில் ஈ எனும் சொல் ஒரு தாழ்ந்தவன் உயர்ந்தோனிடம் இரத்தலுக்கென கூறும் சொல்லாகச் சுட்டப்பட்டுள்ளது. இதில் 'இழிந்தோர்' என்ற சொல் சமூகத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளோரைக் குறிப்பதாகும். இவ்வாறு இருக்கும் போது அக்காலச் சமூகம் சமச்சீரான சமூகம் என்ற கூற்று பொய்யாகித்தான் போகிறது. இதேபோல்,

"தா என் கிளவி ஒப்போன் கூற்றே" (தொல்,சொல்,எச்ச:50)

இந்நூற்பாவிற்கான விளக்கமாகத் 'தா' எனும் சொல் தம்மை ஒத்த தகுதியுடைய ஒருவரிடம் இரக்கும் போது கூறும் சொல் என உரையாசிரியர்கள் விளக்குகின்றனர். 'கொடு' என்ற இச்சொல்லே ஒருவித ஆதிக்க உணர்வு மிக்க சொல்லாகத்தான் பயன்படுத்தப்படுகிறது என்பது நாம் அறிந்ததே. இதனை,

"கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே" (தொல்,சொல்,எச்ச:51)

எனத் தொல்காப்பியம் உரைக்கிறது. தொல்காப்பியர் காலத்தில் இச்சொல் உயர்ந்தோன் ஒரு தாழ்ந்தவனிடம் ஒன்றைப் பெறுவதற்காக, அவனிடம் கொடு என ஆதிக்கத்தில் பிடுங்கியது போல் தெரிகிறது.

### 3.3.3 கலைஞர்கள் நிலை

முற்காலத் தமிழர்கள் வாழ்வில் கலைகள் தவிர்க்க இயலாத ஒன்றாகப் போற்றிப் பேணப்பட்டது. இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழ் கூறும் தமிழ் உலகம்; அவற்றில் கலைகளையும் சேர்த்தே கூறியது என்பது இதற்குச் சான்று. பிறப்பு முதல் இறப்பு வரையிலான இன்ப துன்ப நிகழ்வுகளின்

ஒவ்வொரு கட்டத்திலும் பல்வேறு கலைகள் அவர்கள் கூடவே இருந்து மகிழ்வினைத்தந்தன. இனக்குழுச் சமூகத்தில் கலைகள் அனைவராலும் நிகழ்த்தப்பட்டன. பிற்காலங்களில், அவை குறிப்பிட்ட சமுதாயத்தாரால் நிகழ்த்தப் பணிக்கப்பட்டிருத்தல் கூடும். கலைகளில் கூட உயர்வு தாழ்வு புகுத்தப்பட்டது. வேத்தியல், பொதுவியல் எனும் பாகுபாடு அதனையே குறிப்பிடுகின்றது. மேல்வர்க்கத்தினருக்கான கலைகள், அடித்தட்டு மக்களுக்கான கலைகள் எனப் பிரிக்கப்பட்ட நிலை தொல்காப்பியர் காலந்தொட்டு அரங்கேறிவருகின்றன. ஆடல், பாடல், கூத்து எனப் பல கலைகளை வளர்த்த கலைஞர்கள், அன்றைய சமூகத்தில் கையேந்திப் பிழைத்தனர் என்பதே உண்மை.

"பாணன், கூத்தன், விறலி, பரத்தை..." (தொல்,செய்யுள்:188)

கூத்தர், பாணர், பொருநர், விறலியர் போன்ற கலைஞர்கள் மேட்டுக் குடியினரைப் புகழ்வதும், பாடல் புனைந்து அதன் மூலம் பரிசில் பெற்றுப் பிழைப்பு நடத்துவமாகவே வாழ்ந்து வந்தனர். இவர்களைச் சமூகத்தில் அடித்தட்டு வர்க்கத்தினராகவே அக்காலத்தில் கருதினர். இத்தகைய பிரிவினைகள் யாவும் தொழில் அடிப்படையில் ஏற்பட்டவை எனத் தமிழறிஞர்கள் பலர் விளக்கம் தரினும், விளிம்புநிலை மக்கள் குறித்த ஆய்வினை மேற்கொள்வோரது பார்வையில் இவை யாவும் சமூக ஏற்றத் தாழ்வுகளைச் சித்தரிப்பதாகவே வாதிடவேண்டியுள்ளது. மேலும் இக்காலகட்டம் ஆண் மையச் சமூகமாக விளங்கியது என்ற விவாதத்தினைப் பெண்ணியவாதிகள் முன்வைக்கின்றனர். அவ்வகையில் தொல்காப்பியர் காலத்தில் நிலவிய சமூக அமைப்புகள், பாகுபாடுகள் விவாதத்திற்குரிய பொருண்மையாகவே விளங்கி வருகின்றது.

### 3.3.4 சமூகத்தில் ஆண்

தொல்காப்பியர் காலச் சமூகம் ஆண்களை முன்னிலைப் படுத்திய சமூகமாகவே விளங்கியது. ஆண்களுக்கான உரிமையும் சமூகவெளியும்

பரந்தே காணப்பட்டது. அகம், புறம் என்ற இரு நிலைகளிலும் ஆண்களே முதன்மைப்படுத்தப்பட்டனர். பொருளீட்டலும், குடும்பத்தின் தலைவனாகவும், தன் நாட்டிற்காகவும், குடிகளுக்காகவும், போர்களில் வேந்தனுக்கு உறுதுணையாகவும் ஆண் கடமையாற்றினான். இதுபோன்ற செயல்களால் அவனது பெருமைகள் உயர்த்திக் கூறப்பட்டன.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல்,பொருள்,களவு:7)

வலிமையும் பெருமையும் என்றும் ஆண்களுக்கே உரித்தானவை. இது உலகத்திற்கே பொருந்தும் என ஆண்களைக் குறித்து இலக்கணம் வகுக்கப்பட்டது. புறத்திணைகளில் ஆணே முழுமுதற் பொறுப்பையும் ஏற்பவனாகின்றான். இரு நாடுகளுக்கு இடையே, எல்லைப் புறங்களில் சச்சரவுகள் இன்றைக்கு இருப்பதைப் போலவே அன்றைக்கும் இருந்திருக்கிறது. ஆதி பொதுவுடைமைச் சமூக அமைப்பில் கவர்ந்து வரப்பட்ட பசுக்கள் வெற்றி பெற்ற குழுவுக்குச் சொந்தமாயின. கவர்ந்து வந்த பொருட்களை (கால்நடை உட்பட) இனக்குழுத் தலைவனே மற்றவர்களுக்குப் பகிர்ந்தளிப்பான். மானிடவியலார் இதனை மறுபங்கீடு என்னும் சொல்லால் குறிப்பர்.

இனக்குழுச் சமூகத்தில் நிலவிய மறுபங்கீடு செய்தலின் எச்சத்தைத் தொல்காப்பியர் பாதீடு எனும் சொல்லால் குறிக்கிறார். இதனை தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை எனும் தொல்காப்பியச் சொற்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. ஆநிரைகள் வளத்தின் அளவீடாகக் கொள்ளப்பட்டன. ஆதிகாலத்து மக்களைப் போலவே நாகரிகமடைந்த மக்களும் பசுக்களைச் செல்வமாக நினைத்தனர். எல்லை மீறி வந்து மேயும் ஆநிரைகளை, அடுத்த நாட்டு வீரர்கள் கவர்ந்து கொள்வது வெட்சித்திணை. எல்லை கடந்து சென்று அடுத்த நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து வருவதும் உண்டு. இது நடக்கவிருக்கும் பெரும் போருக்கான ஆரம்பம். ஆனிரைகளைக் கவர்ந்து சென்றோரை விரட்டிச் சென்று, அவருடன் போரிட்டு மீட்டு வருவது கரந்தைத் திணையாகும். இந்த இரண்டுமே மலைப்பாங்கான இடங்களில் நடைபெறும் என்பதால் இவை,

குறிஞ்சித் திணைக்குரிய புறம் எனக் கொள்ளப்பட்டன. தன் நாட்டின்மீது ஆசைகொண்டு எல்லையோரப் பகுதிகளை ஆக்கிரமித்துக் கொண்ட பகையரசனை எதிர்கொண்டு சென்று அவனோடு போரிட்டு அவனை அழிப்பது வஞ்சித்திணை எனப்படும். போர் நடைபெறும் இடம் நாட்டின் எல்லைப்புறம் என்பதால், இது முல்லைத் திணைக்குரிய புறம் எனக் கொள்ளப்படும். படையெடுத்துச் செல்லும் மன்னனை எதிர்க்கும் வலிமையின்றித் தன் கோட்டைக்குள் பதுங்கியிருக்கும் மன்னனை வெளிக்கொணர, அக்கோட்டையை முற்றுகையிடுவது உழிஞைத் திணையாகும். கோட்டைக்குள் இருக்கும் மன்னன், அங்கிருந்தவாறே பகை மன்னனோடு போரிடுவது நொச்சித் திணை எனப்படும். உழிஞையும், நொச்சியும் நகர்ப்பகுதியில் நடைபெறுவதால் இவை இரண்டுமே மருதத் திணைக்குப் புறம் எனக் கொள்ளப்படும். தன் வலிமையைக் காட்டப் படையெடுத்து வரும் பகையரசனை எதிர்கொண்டு சென்று, அவனை அழிப்பது தும்பைத் திணை எனப்படும். இது திட்டமிட்ட பெரும்போர். எனவே மிகப் பரந்த வெளியில் இது நடைபெறும் என்பதால், இத்திணை நெய்தல் திணைக்குப் புறம் ஆயிற்று. போரில் வெற்றியை நிலைநாட்டுவது வாகைத்திணை எனப்படும். இது பாலைத் திணைக்குப் புறம் எனக் கொள்ளப்படும்.

போரில் மட்டும் அல்ல, தாம் எடுத்த ஏதேனும் ஒரு கொள்கையில் உறுதியுடன் நின்று அதனைச் செய்து முடிப்பதில் வெற்றி பெறுவது வாகைத் திணையைச் சேரும். அகத்திணைகளான முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பவையும், புறத்திணைகளான வெட்சி, கரந்தை, வஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை என்பவையும் பூக்களின் பெயர்களே. ஆகவே, `போரை மேற்கொள்ளும் தலைவன் தன் தலையினில் வெட்சிப்பூ சூடிக்கொண்டு செல்லுதல் அக்காலத்தைய மரபாயிருந்தது. அதைப் போல, வெற்றிகொண்ட மன்னனும் பூவைச் சூடிக்கொள்ளுதல் மரபு. இம்மரபு அழிந்தாலும், இந்த சொல்லாட்சி இன்னும் தொடர்கிறது. ஏதேனும் ஒரு விளையாட்டில்,

கடுமையான போட்டிக்குப் பின்னர் நம் நாட்டு அணி வெற்றி பெற்றால், ‘இறுதியில் இந்தியா வெற்றிவாகை சூடியது' என்று இன்றும் பத்திரிகைகள் எழுதுகின்றன. இன்றும் தொடரும் சங்ககால மரபுகளில் இதுவும் ஒன்று எனக் கொள்ளலாம். இவற்றைத் தவிர இன்னும் இரண்டு திணைகள் புறத்தில் உள்ளன. அவை பாடாண், காஞ்சி என்பன. ஒரு ஆணின் ஆளுமைத் திறனைப் (வீரம், கொடைச்சிறப்பு போன்றவற்றை) பாடுவது பாடாண்திணை. இது அகத்திணையில் கைக்கிளைக்குப் புறம் என்பர். இவ்வுலகின் நிலையாமைக் கொள்கையை வலியுறுத்திப் பாடுவது காஞ்சித்திணை ஆகும். இது பெருந்திணைக்குப் புறம் என்பர். இளமை, செல்வம், யாக்கை இம்மூன்றும் நிலையானவை அல்ல. ஆகவே இம்மூவகை நிலையாமைகளைப் பற்றிய பாடல்கள் இதில் அடங்கும். மேற்கண்ட தொல்காப்பியப் புறத்திணைகள் யாவற்றிலும் ஆண்களின் செயல்களே சுட்டப்பட்டுள்ளன. பொதுவாகப் பார்க்கும் போது; இலக்கண, இலக்கிய தரவுகளில் ஆண் முதன்மைப்படுத்தப்படுவது தெளிவாகப் புலனாகின்றது.

### 3.3.5 சமூகத்தில் பெண்

சமூக உருவாக்கத்தில் பெண்கள்தான் மையப் புள்ளியாகத் திகழ்கின்றனர். தாய்மை எனும் உயரிய பேற்றினை உடையவராதலின், சனங்களின் மூதாயாக விளங்குபவர்கள் பெண்களேயாவர். இத்தகு சிறப்பினை உடைய பெண்களின் இருப்பு சமூகத்தில் இரண்டாம் நிலையிலேயே அன்று முதல் இன்றுவரை இருந்து வருகின்றது. பழைய கற்காலத்திலும், புதிய கற்காலத்தின் தொடக்கத்திலும் பெண்களின் நிலை இயல்பாகவே இருந்திருத்தல் வேண்டும். ஏனென்றால் நாடோடிகளாக வாழ்ந்த இனக்குழு வாழ்வில் பேதங்கள் ஏற்படவில்லை. மேலும் குழந்தையினைப் பெற்றெடுக்கும் பெண் ஓர் படைப்புக்கடவுள் போன்றே எண்ணப்பட்டிருத்தல் கூடும். தமக்குப் பயன்தருபவைகளான நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகியவற்றைப்

பஞ்சபூதங்கள் என்று வழிபட்ட மனிதன் தம்மைப் போன்ற இன்னொரு படைப்பைத் தருவித்த பெண்ணையும் வணக்கத்திற்கு உரியவளாகக் கருதியிருக்க வேண்டும். சமூக உருவாக்கத்தின் அடிப்படையாக பெண் திகழ்ந்தாள். ஆதலின், இனக்குழுச் சமூகக் கட்டமைப்பு பெண்ணை மையமிட்டதாக அமைந்திருந்தது. இதனை மானிடவியலாளர்கள் தாய்வழிச்சமூக அமைப்பு என்பர். 'தாய்த்திருநாடு', 'தாய்மொழி' போன்ற இன்றைய சொல்லாடல்கள் யாவும் தாய்வழிச் சமூகத்தின் எச்சத்தால் நிலைபெற்றவையாகும். இத்தகு போக்கெல்லாம் இனக்குழுச் சமூகத்தில் காணப்பட்டவையாகும். பிற்காலத்தில் எழுந்த ஆரிய, வைதீக மரபுக் கலாச்சாரங்கள் புகுவதற்கு முன்னிருந்த நிலை இதுவாகும். ஆனால், தொல்காப்பியர் காலச் சமூகத்தில் ஆரியக் கொள்கைகளும், பண்பாட்டுத்தாக்கங்களும் மலிந்திருந்த காரணத்தால், பெண்களுக்கான உரிமைகள் இரண்டாம் நிலையிலேயே வழங்கப்பட்டன. பெண்ணைவிட ஆண்தான் உயர்ந்தவன் என்ற எண்ணம் அக்காலத்தில் நிலவியது. ஆணாதிக்க உணர்வு தலைதூக்கிய பின்தான் 'தந்தைவழிச் சமூகம்' உருப்பெற்றது. ஆண் குடும்பத்தின் தலைவனாகத் தன்னை உயர்த்திக் கொண்டான். அந்நிலை மேலும் வலுப்பெற்று, இன்றும் ஆண்களை முன்னிலைப்படுத்தியே சமூகம் கட்டமைக்கப்படுகிறது. பெண்ணை ஒரு கோழையாகச் சித்தரித்து அடக்கிவைக்கும் சமூகமாகத் தொல்காப்பியர் காலம் விளங்கியது. இதனை,

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்தல்
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப" (தொல்,பொருள்,களவு:8)

என்னும் நூற்பா உணர்த்துகின்றது. அச்சம், மடம், நாணம் என்ற பண்புகள் யாவும் எக்காலத்தும் பெண்களுக்கே உரியவை என்று உரை கூறுகின்றது. அச்சம் எனும் பய உணர்வு விலங்கு, மனிதன் என உயிர்களனைத்திற்கும் பொதுவான ஒரு செயலாகும். அப்படியிருக்கும் போது அது என்றைக்குமே

பெண்களுக்கே உரித்தானவை என்பது ஆதிக்க மனநிலையினையே காட்டுவதாக உள்ளது.

3.3.5.1 **கற்பு**

கற்பு - இச்சொல் தமிழர் பண்பாட்டில் தலையாய ஒன்றாக இன்றளவும் இயங்கி வருகின்றது. உலகத்திலேயே அநேகமாகத் தமிழில்தான் இச்சொல்லும், இவ்வழக்கமும் உருவாகியிருக்க வேண்டும். ஏனென்றால் மூவாயிரம் ஆண்டுகட்கு மேலான பழமை உடைய பண்டைத் தமிழ் இலக்கண, இலக்கியங்களில் தவிர்க்க இயலாத பண்பாட்டுச் சொல்லாக எடுத்தாளப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில் இச்சொல்லுக்கு இரு பொருள் பயன்பாட்டினைக் காண்கிறோம். ஒன்று, கற்பு என்பது கரணம் எனும் திருமணத்தைக் குறிப்பதாகும். பிரிதொன்று ஒழுக்கத்தினைக் குறிப்பதாகும்.

"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்
செயிர் தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல்,பொருள்,களவு:22)

கற்பின் மேன்மையினை உணர்த்துவதாக மேற்கண்ட நூற்பா அமைகின்றது. உயிரினும் சிறந்தது நாணம்; அந்த நாணத்தை விட உயர்ந்தது கற்பு என அக்காலச் சமூகம் எண்ணியதை இங்கு உணர முடிகின்றது. பொதுவாகப் பார்க்கும் போது இச்சொல் பெண்களுக்கான ஒன்றாகவே கருதப்பட்டது. கற்பொழுக்கம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதாகும். கற்பு என்பதற்குச் சுருக்கமான விளக்கமாக, 'ஒருவனுக்கு ஒருத்தி' என்று வாழ்வது எனக் கூறுவது வழக்கம். இருப்பினும் அக்காலச் சமூகத்தினை நோக்குகையில் இந்நிலை கடைபிடிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆண்களுக்குப் பலதார மணம் கொள்ளும் உரிமை வழக்கத்தில் இருந்ததாகத் தெரிகின்றது. ஆண் பல பெண்களுடன் காதல் கொண்டு கூடலாம் அது தவறில்லை என்பது அக்கால வழக்கம். ஆனால் பெண் என்பவள் இறுதிவரை ஒருவனை மட்டுமே நினைத்து வாழ வேண்டும் என்ற பேதம் அக்காலச் சமூகத்தில் காணப்பட்டது.

#### 3.3.5.2 காமக்கிழத்தியரும் பரத்தையரும்

தமிழ் இலக்கியங்களில் பரத்தை, காமக்கிழத்தி, கொண்டி மகளிர், பொதுமகள், பொருட்பெண்டிர், வரைவின் மகளிர், விலைமகள், கணிகை, தேவ தாசி, தேவரடியாள் என்ற பெயர்களில் பெண்களில் சிலர் சுட்டப்படுகின்றனர். இச்சொற்களைப் பொதுத் தன்மையாகப் பார்க்கையில் விலைமகளிர் என்ற பொருள் தருவதாக இருப்பினும், ஒவ்வொரு பெயரும் தனித்தன்மை வாய்ந்தவையாகும். தொல்காப்பியர் காலச் சமூகத்தில் பெண்களில் ஒருசாரரைப் பரத்தையர் என்றும் காமக்கிழத்தியர் என்றும் அடையாளப்படுத்தி, ஆண்கள் தங்களின் இச்சைக்குப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது. பரத்தையர் பிரிவு எனும் வழக்கமும், காமக்கிழத்தியர் பற்றிய செய்திகளும் இதனை மெய்ப்பிக்கின்றன. காதல் கொண்டு தலைவியைத் திருமணம் செய்து கொண்ட தலைவன் பின்பு காமம் காரணமாக நாடிச் செல்லும் பெண் காமக்கிழத்தியர் எனப்படுவர். 'கிழமை' என்பது உரிமை என்று பொருள்படும். கிழத்தி என்பது உரிமையுடையவள் எனப் பொருள்படும்.

"காமக் கிழத்தி மனையோள் என்றிவர்
ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்..." (தொல்,பொருள்,கற்பு:28)

மேற்கண்ட நூற்பாவில் காமக்கிழத்தி குறித்த செய்தி பதிவாகியுள்ளது. மேலும் காமக்கிழத்தி என்பவள் ஆசைநாயகியாவாள். அவள் மனைவிக்கு நிகரானாவளாகக் கருதப்பட்டவளாகவும், இரண்டாவது மனைவி போன்றவளாகவும் ஊகிக்க முடிகின்றது. காமக்கிழத்தியரில் பல வகைகள் இருந்ததாகத் தெரிகிறது. "காமக்கிழத்தியரின் வகைகளாகச் சிலவற்றை இளம்பூரணர் தம் உரையில் குறிப்பிடுகின்றார்; ஒத்தகிழத்தியர்: மனையாளை ஒத்த (குலமுடைய) இரண்டாவது உரிமைப்பெண். காமக்கிழத்தியர்: தம்மினும் தாழ்ந்த குலத்தில் மணந்துகொண்ட உரிமைப்பெண். வரையப்பட்டோர்: ஆடல் பாடல்களில் வல்லவராய்ப் பலருக்குக் காலம் கணித்துத் தந்து மகிழ்விக்கும் கணிகையர் குலத்திலிருந்து தலைவன் தனக்கென வரையறுத்துக்

கொள்ளப்பட்ட உரிமைப்பெண் (கோவலனுக்கு மாதவி போன்றவள்)”[8] எனும் கருத்து அதனை உறுதிப்படுத்துவதாக உள்ளது. தவிர, வரைவின் மகளிர் குறித்து திருவள்ளுவர் ஓர் அதிகாரமே புனைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். பொதுமகளிரைத் திருவள்ளுவர் 'வரைவின் மகளிர்' எனக் குறிப்பிடுகின்றார். வரைவு என்னும் சொல் ஒருவனுக்கு உரிய ஒருத்தி என்று வரையறை செய்துகொள்ளும் (வரைந்துகொள்ளும்) திருமணத்தை உணர்த்தும். திருமணம் செய்துகொள்ளாமல் கட்டுப்பாடின்றிக் காசுக்காகத் தன் உடலின்பத்தை விற்கும் மகளிர் வரைவின் மகளிர். இவர்களைக் குறிக்குமிடத்து; இருமனப் பெண்டிர், பண்பில் மகளிர், பிறர் நெஞ்சில் பேணிப் புணர்பவர், புன்நலம் தோயார், பொதுப்பெண்டிர், பொதுநலத்தார், அன்பின் விழையார், பொருள் விழையும் ஆய்தொடியாள், பொருட் பொருளார், மாய மகளிர், வரைவிலா மாணிழையார் என்றெல்லாம் திருக்குறள் குறிப்பிடும் தொடர்கள் இவர்களது பண்பைப் புலப்படுத்துகின்றன. பரத்தையர் என்னும் பிரிவு குறித்தும் தொல்காப்பியர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

“மாயப் பரத்தை உள்ளிய வழியும்...” (தொல்,பொருள்,கற்பு:6)

பரத்தை என்பவள் விலைமாது போன்றவள். பரத்தையரில் சேரிப் பரத்தை, காதற் பரத்தை, இல் பரத்தை என்ற பாகுபாடும் அக்காலத்தில் காணப்பட்டது. மேற்கண்ட மூவரும் ஆண்களை மகிழ்விப்பதற்கு என்றே அக்காலச் சமூகத்தில் இருந்ததாகத் தெரிகின்றது. பரத்தையர் என்போர் ஒருவரையும் மணம் செய்து கொள்ளாமல் மன்னர், செல்வந்தர் போன்றோர்க்கும் காமுகர்க்கும் இன்பம் நல்கும் உரிமையுடைய பெண்களாக வாழ்ந்து வந்துள்ளனர். தம்மை நாடி இன்பம் துய்ப்போர் தரும் பொருளில் வாழ்க்கை நடத்தினர். அதனால் பொருட்பெண்டிர் எனவும் அழைக்கப்பட்டனர். காமக்கிழத்தி என்பவள் தலைவனது செல்வநிலையை அறிந்து தலைவன் மீதும், தலைவனின் குடும்பத்தின் மீதும் அக்கறை உடையவளாகத் திகழ்பவள். இவர்களை இல்லக்கிழத்தி என்றும் கூறுவர். இதனை,

"காமக் கிழத்தி தன் மகத் தழீஇ
ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்"

(தொல்,பொருள்,கற்பு:6)

என்னும் நூற்பா இக்கூற்றை விளக்குவதாக உள்ளது. அக்காலச் சமூகம்; மேலோன் - கீழோன், ஆண் - பெண் என்ற ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டதன் தொடக்க காலமாக விளங்கியது என்பதனைத் தொகாப்பியர் தம் நூலில் பதிவு செய்துள்ளதன் வாயிலாக அறிய முடிகின்றது. பொதுவாக ஆண்களின் வாரிசுரிமையைப் பாதுகாக்கவே சமூகம், பெண்ணுக்குக் கற்புக்கோட்பாட்டை வலியுறுத்தியதாகத் தெரிகின்றது. குடும்ப அமைப்பில் ஆண்கள் தம் பாலியல் வேட்கைப் போதாமையினை நிறைவு செய்ய உருவாக்கிக்கொண்டதே பரத்தமை என்னும் அமைப்பாகும். பரத்தையர்கள் ஆண்களின் போதைப் பொருளாகக் கருதப்பட்டனரேயன்றி அனைத்து உரிமைகளையும் பெற்றவர்களாகச் சமுதாயத்தால் கருதப்படவில்லை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களில் மருத நிலமே தனிச் சொத்தையும், பரத்தையர்களையும் உருவாக்கியக் களமாக அமைகின்றது. மலையிலும், காட்டிலும் திரிந்த மனிதனுக்குள் ஆண், பெண் ஆகிய பாலின பேதம் பெரிதாய் இருந்திருக்கவோ, அது சார்ந்த ஏற்றத்தாழ்வுகள் ஏற்படவோ வாய்ப்பில்லை. எனவேதான் சங்க இலக்கியங்களைப் பொருத்தமட்டில் மருத நிலம் சார்ந்த பாடல்களில் பரத்தையர் குறித்த பாடல்கள் அதிகமாகக் காணப்படுகிறன.

சங்க இலக்கியத்திற்குப் பின் நீதியிலக்கியக் காலம் வரையிலுமே பரத்தையர் என்ற பிரிவினர் மிகவும் இழிவுபடுத்திப் பார்க்கப்பட்டுள்ளனர். ஆணின் பாலியல் பசிக்கு இரையாகும் பரத்தை, ஆணாதிக்கச் சமூகத்தால் சுரண்டப்பட்டு, ஒதுக்கப்பட்டே தனது வாழ்க்கையை நடத்துகின்றாள். விளிம்புநிலையில் வாழும் பரத்தையைச் சுரண்டும் ஆண் சமூகமே மீண்டும் அவள் மீது குற்றச்சாட்டுகளையும் சுமத்துகிறது. இதற்குத் திருக்குறளே

சான்றாக உள்ளது. ஆயிரம் அறக்கருத்துக்களை உரைக்கும் திருவள்ளுவர் கூடப் பரத்தையரை இழிவாகத்தானே சித்தரித்துள்ளார். ஆனால் பரத்தையரிடம் வந்துபோகும் ஆண்களைக் குறித்து எத்தகைய இழிவான குறிப்பும் காணப்படவில்லை என்பது சிந்தனைக்குரியதாகும். சிலப்பதிகாரத்தில் கோவலன் இறந்த பின்னர் மாதவியை ஊரார் நாட்டியமாட அழைப்பதும், அவள் வரவில்லையெனில் அவளது மகள் மணிமேகலையை அனுப்புமாறு கூறுவதும், மணிமேகலையை உதயகுமாரன் அடைய நினைத்து அவளைப் பின்தொடர்வதும் (மணிமேகலைக் காப்பியக் கதை) அவர்கள் பரத்தையர் குலத்தில் பிறந்தவர்கள் என்று சமுதாயம் இழிவாக நினைத்ததேயாகும்.

செவ்விலக்கிய காலத்தில் பரத்தையர்கள் போகப் பொருளாகக் கருதியே ஆணாதிக்க சமுதாயத்தால் நடத்தப்பட்டனர். அவர்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்பட்டன. பரத்தையர் ஆண் சமுதாயத்தினரை மகிழ்விக்கும் கடப்பாடு உடையவர்கள் என்ற போக்கு அக்காலத்தைய சமூகத்தில் காணப்பட்டது. ஏனைய பொதுமகளிர் போலப் பரத்தையர்கள் வாழ ஆசைப்பட்டாலும் இச்சமுதாயம் அதனை அனுமதிக்கவில்லை என்றே தெரிகின்றது. பரத்தையர்களை மட்டும் வசைபாடிய இலக்கியங்கள் அதற்குக் காரணமாக விளங்கிய ஆண்களை எந்தவிதத்திலும் குறைகூறவில்லை. இதுபோன்ற நிகழ்வுகள் சமூகத்தில் பாலின சமத்துவமின்மை நிலவியதை எடுத்துக்காட்டுவதாகவே உள்ளது.

### 3.4 சங்ககாலச் சமூகம்

திணை அடிப்படையில் பார்க்கும் போது தமிழ்ச் சமூகம் முதலில் குறிஞ்சி நிலத்தில் தோன்றிப் பிறகு முல்லை, மருதம், நெய்தல் என வாழ்ந்து வந்தமை புலப்படுகின்றது. தொல்காப்பியர் போன்ற தொல் இலக்கண ஆசிரியர்கள் பலரும் தமிழர் வாழ்வுதனை விளக்குகையில், அவற்றை முறையே திணை அடிப்படையில் விவரித்துச் சென்றுள்ளனர். ஆகவே தான்,

தமிழ்ச் சமூக ஆய்வுகளை முன்னெடுப்போர் திணைகளை அடிப்படையாகக் கொண்டு ஆய்வதென்பது தொன்றுதொட்டு வழங்கிவரும் முறையாகும். அவ்வகையில் சங்ககாலச் சமூகங்களில் காணப்பட்ட குழுக்கள், அரசமைப்பு, பிரிவினைகள் குறித்துத் திணைசார்ந்து ஆராய்வது சாலச் சிறந்ததாகின்றது. சங்ககாலச் சமூகம் ஏறக்குறைய கி.மு.300 முதல் கி.பி.200 வரையிலான காலகட்டங்களில் படிநிலை வளர்ச்சி அடைந்து பலதரப்பட்ட சமூக அமைப்புகளும், அடுக்குகளும் கொண்டு விளங்கியது. "பேரரசு வளர்ந்த பெருவேந்தர் மையச்சமூகம், குறுநில மன்னர்கள் அரவணைப்பால் கட்டிக் காக்கப்பட்ட இனக்குழுச் சமூகம், நிலக்கிழார்களின் அதிகார எல்லைக்கு உட்பட்ட வேளாண் சமூகம், சீறூர்த் தலைவர்களைச் சார்ந்த சிறு சமூகம், பழைய இனக்குழு வாழ்வின் எச்சங்களுடன் சமூக இயங்கியலுக்குப் பெரிதும் ஆட்படாமல் வெளியே இயங்கிய தொல்திணை மாந்தர் சமூகம் (குறிஞ்சி,முல்லை,மருதம்,நெய்தல்,பாலை நிலம் சார்ந்த தொல்குடியினர்) எனப் பல நிலச் சமூக அமைப்புகளைக் கொண்டிருந்தது சங்ககாலச் சமூகம். தனியான ஆட்சி அமைப்புகளோடு இச்சமூகங்கள் இயங்கினாலும், பிற சமூக ஆட்சியின் தாக்கங்களுக்கும் ஆளாயின"[9] இவ்வாறான படிநிலைச் சமூக அமைப்பினைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்.



இவ்வரிசையில் சங்க காலச் சிற்றூர்களில் ஆரம்ப காலங்களில் பெருவேந்தர் சமூகத் தலையீடுகள் அவ்வளவாக இருக்கவில்லை என்றே தெரிகின்றது. மாறாக ஏனைய நான்கு சமூக அடுக்குகளை நிர்வகிக்கும் அதிகார மையமாகத் திகழ்ந்தனர். சங்க இலக்கியங்களைப் பொருத்தமட்டில்; திணைச் சமூகம், குறுநில மன்னர், கிழார், சீறூர் மன்னர், வள்ளல்கள், அடங்கிய வட்டாரத்திற்குள் சிற்றூர்ச் சமூக மக்கள் குறித்த பதிவுகளைக் காணமுடிகிறது. சங்ககாலச் சமூகத்தினுள் பலதரப்பட்ட சமுதாயங்கள் காணப்படுகின்றன. அவை; குலம், தொழில் அடிப்படையில் அமைவதனை உணரமுடிகிறது. இனக்குழுச் சமூகம் என்பது நிலவியல் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டது என்பதைத் திணைப் பகுபாடுகள் உணர்த்துகின்றன. ஒவ்வொரு திணைக் குடியும் ஒரு தலைவனைக் கொண்டிருந்தது. திணைச் சமூகம் தங்களுக்கான வழிகாட்டுதல் தலைவனாக முன்னிருத்தியவர்களையே சீறூர்மன்னர் என இலக்கியங்கள் சுட்டுகின்றன. பின்வரும் அமைப்பு அதனை விளக்குவதாக அமைகின்றது.



### 3.4.1 இனக்குழுக்களும் சீறூர் மன்னர்களும்

குறிப்பிட்ட இடங்களில் தொழில் முறை வழக்காற்றின் அடிப்படையிலும், தனித்து அறியும்படியான வாழ்வியலுக்கும் உரிய ஒரு சமூகத்தை ஒரு குழு (Group) என்று மானுடவியலார் சுட்டுவர். இக்குழுவே பல்கிப் பெருகும் நிலையில் வேறு சில இடங்களில் அவர்களின் வாழ்வியல் அடையாளம் மாறாமல் அமைகின்ற பொழுது அம்மக்களின் மொத்தத் தொகுதியும் ஓர் இனக்குழு **(Race Group)** என்று வரையறை செய்யப்படுகின்றது. இவ்வரையறை உலகத்தின் எந்த மூலையிலும் வாழ்கின்ற, குறிப்பிட்ட பண்பாட்டு அடையாளத்தோடு வாழும் எந்தச் சமூகக் குழுக்களுக்கும் பொருந்துவதாகும். அவ்வகையில் நம் தமிழ்ச் சூழலில் நிலவிய சங்ககாலச் சமூகத்திற்கும் இது பொருந்துவதாகும். சங்க காலத்திற்கு முன்பே தமிழகத்தில் பல்வேறு இனக்குழுக்கள் வாழ்ந்ததற்கான எச்சங்களைத் தொல்காப்பியத்தின் வாயிலாகவும், சங்க இலக்கியங்களின் வழியும், அகழ்வாய்வுச் சான்றுகளாலும் அறியமுடிகின்றது.

சங்க காலத்திற்குச் சற்று முன்பே உடைமைச் சமுதாயமும் அதன்வழித் தோற்றம் பெற்ற பேரரசு ஆட்சி முறையும் உருவாகத் தொடங்கிவிட்டன. அதே சமயம் இனக்குழு வாழ்வில் ஒருங்கிணைந்த உற்பத்தி முறையும் பகிர்ந்துண்ணும் கூட்டுக் குடும்பப் பண்பும் மேலோங்கி இருந்தன. தன்மானம் போற்றும் இனக்குழுக்களின் வீர மரபு பேணப்பட்டது. இத்தகு தனித்தன்மைக்கு இடையூறு ஏற்படும் வகையில் கூட்டு அரசு முறையின் மைய அதிகாரம் கொண்ட வேந்தர் மரபுகள் அமைந்தன. சீறூர்களில் தனித்தன்மையுடன் வாழ்ந்து வந்த பல இனக்குழுத் தலைவர்களை வென்ற வேந்தர்களின் செல்வாக்கினால் இனக்குழு வாழ்வு சிதைக்கப்பட்டன. இருப்பினும் பல்வேறு அச்சுறுத்தல்களை எதிர்கொண்டு நிலைத்து நின்ற பல சீறூர்த் தலைவர்களின் வாழ்வுதனைச் சங்க இலக்கியங்கள் விவரிக்கின்றன.

### 3.4.2 ஐந்திணைச் சமூகமும் இனக்குழு வாழ்வும்

சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் ஒட்டுமொத்த மக்களையும் திணைச் சமூகம் என்ற பரந்த எல்லைக்குள் அடங்குகின்றனர். சமுதாயவியல் பார்வையில் ஒவ்வொரு திணையில் வாழும் மக்களும் சிறுசிறு குழுச் சமுதாயம் என்ற உட்கூறுகளாகப் பிரிந்து வாழ்ந்துள்ளதை அறியமுடிகின்றது. அவ்வகையில், சங்ககாலம் என்பது பண்டைய இனக்குழு வாழ்வு மறையத் தொடங்கிய காலகட்டமாக அறியப்படுகின்றது. உணவு சேகரிப்பு வாழ்க்கையினின்று உணவு உற்பத்திக்குத் தங்களை மாற்றிக் கொண்ட மாந்தர்களாகச் சங்ககால மக்கள் விளங்கினர். இருப்பினும், ஐந்திணைகளில் வாழ்ந்த சங்கத் தமிழர்களின் வாழ்வுதனில், பண்டைய இனக்குழு வாழ்வின் கூறுகள் முழுவதும் அகன்றுவிடவில்லை என்பதனை அவர்களது வாழ்வியல் நிகழ்வுகள் நினைவூட்டுகின்றன. “ஆதிச் சமூக அமைப்பாக (Social Insititution) உலகெங்கும் இனக்குழுக்கள் நிலவின. தமிழகத்தில் இனக்குழுக்கள் திணைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டன”[10] குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் நிலப் பிரிவுகளில் வெவ்வேறாக அடையாளப்படுத்தப்பட்ட சமுதாயக் குழுக்கள் (Race’s) வாழ்ந்தன. பண்டைய தமிழகத்தில் வாழ்ந்த ஒவ்வொரு திணைச் சமுதாயத்தினையும் ஒவ்வொரு குலம் என்று மானிடவியலார் வகைப்படுத்துகின்றனர். திணைச் சமூக வாழ்வினை ’வேட்டைச் சமூகம், மேய்ச்சல் சமூகம், வேளாண் சமூகம்’ எனப் பொதுவாக வகைப்படுத்தலாம்.

### 3.5 சங்ககால அரசியல்

“கிராமம் என்பதே இந்தியாவில் எப்போதும் போல, ஆட்சி நிர்வாகத்தின் அடிப்படைப் பகுதி. பொதுவாகக் கிராமம் தனது விவகாரங்களைத் தாமே கவனித்துக் கொண்டது”[11] என்னும் கூற்று சங்ககாலச் சிற்றூர் அரசியல் குறித்து அறிந்திடத் தக்கதொரு சான்றாகும். சங்க காலச் சமூகத்தில் பண்டைய

நாடோடி இனக்குழு வாழ்வினில் காணப்பட்ட சமூக எச்சங்கள் நிலைபெற்றுப் பின்னாளில் அது மாற்றம் பெற்றுப் பரிணமித்தது எனலாம். அதாவது, சமூக அரசியலைப் பொருத்த மட்டில், சிற்றூர்களில் இனக்குழுக்களின் தலைவனாக விளங்கிய சீறூர் மன்னர்கள் தத்தம் குடிகளை வழிநடத்தினர். சிற்றூர்களில் தலைவனாக விளங்கிய சீறூர் மன்னர் என்போன், அவன் சார்ந்த குடிமக்களால்; தகுதி, வீரம், மரபுசார் அறிவு ஆகியவற்றின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். "இனக்குழுச் சமூகத்தில் பல குடிகள் இணைந்து சிற்றூர் என்ற நிலை உருவானபோது ஒவ்வொரு குடியிலிருந்தும் உருவாகியிருந்த மூத்தோர்களாகிய திணைகளின் கூட்டுச் செயல்பாட்டின் மூலம் அக்காலத்தைய சிற்றூர் நிர்வகிக்கப்பட்டது. சிற்றூரின் இக்கூட்டு நிர்வாக அமைப்பில் இருந்த திணைகளே சங்ககாலத்தில் அரசு உருவாக்கத்தில் அங்கமாகத் திகழ்ந்தன"[12] என்னும் இக்கருத்தினடிப்படையில் பார்க்கும்போது பெருவேந்தர்கால அரசமைப்பிற்கு முந்தைய இனக்குழுச் சிற்றூர் நிர்வாக அமைப்பே அடிப்படை என்பது தெளிவாகின்றது. தமிழ்ச் சமூகம், அடிப்படையில் குல மரபின் வழிவந்த சமூகமாக இருந்தது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். சங்ககாலத் திணைச் சமூக மக்கள் வாழ்ந்த சிற்றூர்களில் சீறூர் மன்னர்கள், குறுநில மன்னர்கள் (வேளிர்கள், வள்ளல்கள்) ஆட்சியே அமைந்தது.

இனக்குழுச் சமூகத்திலிருந்து அரசு என்ற அமைப்பு உருவான காலகட்டத்தைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. "இனக்குழு சமுதாயமாக விரிவடையும் போது போர்கள் தவிர்க்க முடியாதன ஆகின்றன. போருக்கு அடிப்படையான வலிமைக் கோட்பாடே இனக்குழுத் தலைவன், அரசன் ஆவதற்கு அடிப்படையாகிறது"[13] என்ற கருத்து சீறூர் மன்னர் மரபினின்றே குறுநில மன்னரும், வேந்தரும் தோன்றினர் எனக் கருத வேண்டியுள்ளது. தமிழக வரலாற்றில் சங்ககாலம் இனக்குழு

வாழ்க்கையிலிருந்து நிலமானிய முறையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. இதனால் இக்காலத்தை மாறுதல் நிகழும் காலம் (Transition Period) என்பர். உணவு தேடி வாழும் இனக்குழு வாழ்க்கை, கால்நடை வளர்ப்பினை மையமாகக் கொண்ட மேய்ச்சல் நில வாழ்க்கை, உணவு உற்பத்தி செய்யும் ஒரு விதமான நிலவுடைமைச் சமுதாய வாழ்க்கை என மூன்று வகையான சமூக அமைப்புகள் வெவ்வேறு நிலப்பகுதிகளில் ஒரே நேரத்தில் நிலவின. இதனடிப்படையில் வெவ்வேறு வகையான பொருளாதார நடவடிக்கைகளும் சமூக அமைப்புகளும் கொண்ட ஓர் சீரற்ற வளர்ச்சி (Uneven Development) சங்ககாலத்தில் நிலவியது. அவ்வகையில் அக்காலம் மன்னரது தலைமையின் கீழ் செயல்பட்டது. அதன் உட்பிரிவாக ஆட்சி புரிவோர் சீறூர்மன்னர் (இனக்குழுத்தலைவர்), குறுநிலமன்னர்கள், வேந்தர் என அழைக்கப்பட்டனர். குறிஞ்சி முல்லை நெய்தல் பாலை ஆகிய நான்கு நிலப் பகுதிகளிலும் மக்கட் பிரிவினர் தங்களுக்கென சுயேச்சையான ஆளுவோரைக் கொண்டிருந்தனர். இவர்களையே சீறூர்மன்னர், குறுநில மன்னர் என்று சங்க இலக்கியங்கள் இயம்புகின்றன.

சீறூர் மன்னர்களுக்கும் அவர்களால் ஆளப்படும் மக்களுக்குமிடையே ஆழமான வேறுபாடுகள் நிலவவில்லை. “நானிலமக்கள் தங்கள் ஊர்தோறும் தங்களுக்கேற்ற தலைவனொருவனது காவலின் கீழ் அடங்கி வாழ்ந்தார்கள். குறிஞ்சி நிலத் தலைவனை வெற்பன் என்றும், முல்லைநிலத் தலைவனைக் குறும்பொறை நாடன் என்றும், மருதநிலத் தலைவனை ஊரன் என்றும், நெய்தல்நிலத் தலைவனைத் துறைவன் என்றும் வழங்குதல் மரபு. இத்தலைவர்களால் ஆளப்படும் சிற்றூராட்சியே முதன் முதலில் தோன்றியது. ஒவ்வொரு சிற்றூர் மக்களும், தங்களால் நன்கு மதிக்கப்படும் அறிவும் ஆற்றலும் உடைய தலைமகன் ஒருவனது சொல்லுக்கு அடங்கி, அவனது காவலில் அச்சமின்றி வாழ விரும்பினார்கள். இவ்விருப்பம் நாளடைவில்

வளர்ச்சியடையத் தொடங்கியது"[14] என்னும் இக்கூற்றின் அடிப்படையில் பார்க்கும் போது சங்ககாலச் சமூக அரசியலின் முன்னோடியாக விளங்கியது சிற்றூர் நிர்வாகமே என்பதை அறியமுடிகிறது. குடிகளாகக் கூடிவாழ்ந்த திணைச்சமூக மக்கள் குழுக்களாக வாழ்ந்ததால் ஊர்கள் தோற்றம் பெற்றன. சங்ககாலத்தில் சிற்றூர்களே ஆரம்பத்தில் தோன்றின, அவற்றைச் சிற்றூர் மன்னர்கள் வழிநடத்தினர். பிற்காலத்தில் சிற்றூர்கள் அழிந்து பேரரசுகள் நிலைபெறத் தொடங்கியதும் சிற்றூர்கள் பேரூர்களாக வளர்ந்தன.

### 3.5.1 சீறூர் மன்னர்கள்

சீறூர் மன்னர்கள் என்பவர்கள் சங்ககால தமிழகத்தில் வேந்தர், வேளிர், குறுநில மன்னர்கள் வரிசையில் இனக்குழு வாழ்வின் எச்சங்களுடன் கூடிய சமூகத்திற்குத் தலைவர்களாக இருந்த தொன்மையான முதுகுடியைச் சேர்ந்தவர்களாவர். இனக்குழுத் தலைவர்கள் (சீறூர் மன்னர்கள்) தமது முழுநேரத்திலும் தலைமைப் பொறுப்பில் செயல்படுவதில்லை என்றே தெரிகிறது. "குலக்குழு அமைப்பில் முறையான தலைவர்களும் முழுநேரத் தலைவர்களும் இல்லாமையால், அக்குழு பட்டறிவு மிக்க முதியவர் ஒருவரே தலைமை முறை தேவைப்படும் போது செயல்படுவார். அவர் அக்குழுவின் மரபுகளையும், அவர்களின் நிலப்பரப்பு உரிமைகளையும், வள ஆதாரங்கள் எங்கெங்குள்ளன என்பதையும் நன்கு அறிந்திருப்பார். வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் ஆகிய பணிகளில் வழிகாட்டும் திறமையும், சமூகச் சடங்குகளைச் செய்வதில் தேர்ச்சியையும் பெற்றவராக இருப்பார்"[15] சிற்றூர்த் தலைவர்கள் மறப்பண்பிலே பெருநில வேந்தரினும் மேம்பட்டிருந்தனர். அவர்கள் அடித்தட்டுக் குடிகளைப் போலவே எளிய வாழ்க்கையினை மேற்கொண்டனர். குடிகளின் சச்சரவுகளுக்குத் தீர்வு காண்பவர்களாகவும்; அண்டைக் குடிகளிடம் ஆகோள் புரிந்து வீரத்தை உணர்த்தியவர்களாகவும், விருந்தோம்பல், கொடைச்சிறப்பினில் சிறந்தவர்களாகவும் விளங்கினர். பொருளாதார நிலையில் பின்தங்கிய நிலையிலும் காணப்பட்டனர்.

பெரும்பாலும் குறிஞ்சி, முல்லை எனும் வன்புல நிலப்பகுதிகளை இவர்கள் ஆண்டுவந்தனர். மென்புலமாகிய மருத நிலங்களில் இவர்கள் முதுகுடி மன்னர் எனப்பட்டனர். பொதுவாக மன்னர் என்றதும் நம் மனக்கண் வந்துநிற்கும் தோற்றத்துடன் வன்புலச் சீறூர் மன்னர் என்போரை ஒப்பிடுவது பொருந்தாது. இவர்கள் இனக்குழு மக்களுக்கான தலைவர்களாகச் செயல்பட்டார்கள். எனவேதான் புலவர்களின் போற்றுதலுக்கு உரியவராயினர். சங்க இலக்கியங்களில் குறிப்பாக, புறப்பாடல்கள் சீறூர் மன்னர்கள், குறுநில மன்னர்கள் குறித்துச் சான்றுரைக்கின்றன.

### 3.5.1.1 சீறூர்மன்னர் இயல்புகள்

பண்டைய சங்ககாலச் சமூகம், தொடக்கத்தில் தமக்கு முந்தைய காலகட்டமான இனக்குழு வாழ்வின் தாக்கங்களுடன் காணப்பட்டது. சங்ககால மக்கள் சமூகம் எனும் அமைப்பில் வாழத் தொடங்கியதற்கு அக்காலச் சிற்றூர் வாழ்க்கையே அடிப்படையாக விளங்கியது. மக்களை வழிநடத்த ஓர் தலைவன் முன்னிலைப் படுத்தப்பட்டான். அதுவே அரசியல் முறைக்கான ஆரம்ப நிலையாகும். சீறூர் மன்னர் தம் குடிமக்கள் நலன் பேணக்கூடிய சுயாட்சி (Self Management) முறையில் வாழ்ந்தனர் இனக்குழுத் தலைவனாக அறியப்படும் சிற்றூர் மன்னர்கள் சங்கப் புலவர்களால் வேந்தரினும் சிறப்பித்துப் போற்றப்படும் நல்லியல்புகளைக் கொண்டிருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம்.

சங்ககாலச் சிற்றூர்களில் இனக்குழு வாழ்வின் அடையாளமாக விளங்கிய தலைவர்களே சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்ட சீறூர் மன்னராவர். அவ்வகையில் சங்க இலக்கியங்களை நோக்கும்போது அக்காலத்தில் காணப்பட்ட பல சீறூர் மன்னர்கள் குறித்தும், அவர்களது சமூகம் குறித்தும் அறிய முடிகிறது. புன்செய் நிலப்பகுதியினைச் சார்ந்தவர்களான இவர்கள் ஆண்ட நிலப் பகுதி ["புன்புலம் தழீஇய அம்குடிச்சீறூர்" (புறம் 324:8) "புன்புலச் சீறூர் நெல்விளையாதே" (புறம் 328:2)]

புன்புலம் என்னும் வானம் பார்த்த பூமியாகும். அதாவது குறிஞ்சி, முல்லை, பாலை போன்ற நிலப்பகுதிகள் என அறியமுடிகின்றது. பெரும்பாலும் மழைநீரை நம்பியே சிற்றூர் மக்கள் வாழ்ந்தனர். சிறுசிறு நீரூற்றுகள், சுனைகள், காட்டாறுகள், குட்டைகள் தவிர்த்து நீராதாரம் இங்கு வேறில்லை. ஆகவே விவசாயம் குறைவாகவே செய்யப்பட்டது. இத்தகு நிலையினால் மக்களின் வாழ்க்கைத் தரமும், பொருளாதாரமும் பின்தங்கியே இருந்தது. சிற்றூர் மன்னர் தம் தலைமை தேவைப்படும் சமயங்கள் தவிர்த்து இதர நாட்களில் தம் குடிகளோடு குடியாகவே வாழ்ந்தனர். ஒன்றாகவே வேட்டையாடினர், உணவைப் பங்கிட்டு உட்கொண்டனர், கூட்டாகச் சென்று ஆகோள் புரிந்தனர். அதனால் மன்னனும் மக்களும் ஒன்றாகவே கருதப்பட்டனர். இவர்கள் வீரம்சார்ந்த பெயர்களாலும், மன்னர் என்ற பெயராலும் குறிப்பிடப்படுகின்றனர். கொடுப்பதற்குப் பொருள் ஏதுமில்லாத நிலையில் வரகைக் கடன்பெற்றும் வாளையும், சீறி யாழையும் பணயமாக வைத்து விருந்து பேணும் பண்பினர். இருப்பது குறைவானாலும் பகிர்ந்துண்ணும் இயல்பினர்.

விதைக்காக வைத்திருந்த தினையைக் கூட இடித்துச் சமைத்து இரப்போர்க்கு உணவு பரிமாறுபவளாகச் சீறூர் மன்னனின் தலைவி இருந்தாள் அவ்வகையில் சீறூர் மன்னரின் கொடைச்சிறப்பும்; தம் குலப் பெண்களைத் தர மறுத்து வேந்தர்களை எதிர்க்கும் மகள் மறுத்தலும்; புன்புலத்தில் வாழ்ந்த அவர்கள் பெயரளவில் மன்னர் என்று அழைக்கப்பட்டாலும் சாமானிய மக்களில் ஒருவனாக வறுமையில் வாழ்ந்ததையும்; தாமும் தம் குடியும் வறுமையில் வாடும் நிலையறிந்து அதனைப் போக்க வேந்தர்களிடம் போர்த்தொழிலும், தூதுரைக்கும் தொழிலும் மேற்கொண்டும் கிடைத்த பொருட்களையும், இதர வேட்டைப் பண்டங்களையும் தாம் ஒருவனே பயன்படுத்தாது பாதீடு செய்து குடியினரின் தேவையைப் பூர்த்தி செய்தும்

வாழ்ந்தான், என்பது போன்ற பல சிறப்பியல்புகளைக் கொண்டவனாகச் சிற்றூர் மன்னன் சுட்டப்படுகின்றான்.

### 3.5.1.2 வறுமையும் கொடைச்சிறப்பும்

இல்லையென்று வருவோர்க்கு இன்முகத்துடன் அவர் துயர்துடைத்த உயரிய பண்பினோர் சங்ககாலத் தமிழர்களாவர். தம் கண்ணெதிரே வறுமையில் வாடும் ஒருவனைக் காணின், அவனைத் தேற்றி அவன் தேவைகளை அவன் மொழியாமலே குறிப்பறிந்து செயல்பட்ட மாண்புகள் கொண்டோர் வாழ்ந்ததும் இச்சங்க காலமேயாகும். அக்காலத்தவர் தமக்கெனப் புசிப்பதற்கு இல்லாவிடினும், கிடைத்ததைக் கொண்டு தம்மை நாடிவந்தார்க்கு உணவளித்த உள்ளம் கொண்டோராவர். இவ்வழக்கம் சிற்றூர்களில் தான் பரவலாகக் காணப்படும். இத்தகைய பண்புகள் அன்றைய சிற்றூர் மன்னரிடம் நிலை கொண்டது இயல்பானதே எனலாம். ஆனால், ஒரு பெரிய உணவகத்தார் ஓர் ஏழைக்கு ஒருவேளை உணவளிப்பது பெரிய செயலல்ல. மாறாக அடுத்த வேளைக்கு உணவில்லா ஒருவன் தம்மிடம் இருந்த உணவினைப் பசித்திருக்கும் ஒருவனுக்குத் தருவதுதான் போற்றத்தக்க செயலாகும். அதைத்தான் சீறூர் மன்னர்கள் செய்தனர்.

வறுமையின் பிடியில் சிக்குண்ட அவர்கள் தம் பொருட்களைக்கூட அடமானம் வைத்து கொடையளித்தனர் என்றால், அதுதான் உயர்ந்த கொடையாகும். அதனைச் சங்கப் புலவர்கள் நுணுக்கமாகப் பதிவுசெய்துள்ளதனைக் காணமுடிகிறது.

> "எருதுகால் உறாஅது இளைஞர் கொன்ற
> சில்விளை வரகின் புல்லென் குப்பை
> தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
> பசித்த பாணர் உண்டு கடை தப்பலின்
> ஒக்கல் ஒற்கம் சொலிய தன் ஊர்ச்
> சிறுபுல்லாளர் முகத்து அவை கூறி

வரகு கடன் இரக்கும் நெடுந்தகை

அரசுவரின் தாங்கும் வல்லாளன்னே...” (புறம் 327:1-8)

இப்பாடலில் சீறூர் மன்னனின் பொருளாதார நிலையும், அவனது கொடைச்சிறப்பும் குறிப்பிடப்பட்டுள்ளது. வன்புலத்தில் விளைவித்த வரகினை அடித்துத் தூற்றி எடுத்துத் தம்மைச் சுற்றி வளைத்துக் கொண்டு கொடுத்த கடனைக் கேட்டோர்க்குத் தருவித்தது போக எஞ்சியதை நலிவுற்ற பாணர்களுக்கு வழங்கினான். தம் குடியினருக்கென யாதும் இன்மையால், தான் முன்பு பெற்ற கடனை முறையாகச் செலுத்திய தன்மையினை எடுத்துக் கூறி வரகினைக் கடன் பெற்று தம் சுற்றத்தார்க்கு வழங்கியவன். சிற்றூர்ச் சமூகத்தில் கடன் பெற வேண்டிய அளவிற்கு வறுமை இருந்த போதும் பிறர்க்குக் கொடுப்பதற்குத் தயங்கவில்லை என்பதை உணர முடிகிறது. இருப்பினும் அரசர் எவரேனும் தம்மோடு பகைத்துப் போர் தொடுப்பின் அதனை எதிர்கொண்டு வெற்றிபெறும் வலிமை வாய்ந்தவன் எனப் பாடல் குறிப்பிடுகின்றது.

கடன் பெற்றேனும் தம் குடியினைக் காக்கும் தலைவனின் குடிப் பற்றும், தம்மிடம் இருப்பதைத் தமக்கும், தம் சுற்றத்தார்க்கும் சேர்த்து வைக்காமல்; முதலில் வறியோர்க்கு ஈயும் தகைமை பெற்றோர் சீறூர் மன்னர் என்பதை இப்பாடல் இயம்புகின்றது. சீறூர்மன்னர் வறுமை குறித்து சான்றுரைப்பதாகப் பின்வரும் பாடல் அமைகிறது.

“கள்ளின் வாழ்த்தி கள்ளின் வாழ்த்தி
காட்டொடு மிடைந்த சீயா முன்றில்
நாட்செருக்கு அனந்தர்த் துஞ்சுவோனே
அவன் எம் இறைவன் யாம் அவன் பாணர்
நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
இரும் புடைப் பழவாள் வைத்தனன் இன்று இக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணையம் இது கொண்டு...” (புறம் 316:1-7)

சிற்றூர்த் தலைவன், இரவு முழுவதும் கள்ளுண்டதால் உண்டான மயக்கம் மறுநாள் காலைவரை நீங்கவில்லை. முதல் நாள் தம் பழைய வாளைப் பணயம் வைத்துப் பொருள்பெற்று தம் விருந்தினரை உண்பித்தான். இன்று தம்மை நாடி வந்தோரை மகிழ்விக்க சிறிய யாழினைப் பணயம் வைத்துப் பொருள் பெற்றான் என்றதால் அவனது வறுமையும்; அந்நிலையிலும் அவன் கொடைத்தன்மை குறையாத திறத்தினையும் அறிய முடிகிறது. இதேபோல், வறுமை குறித்து மேலும் விவரிப்பதாகக் கீழ்வரும் சங்கப் பாடல் அமைகின்றது.

> "................................ ................................ ..............................
>
> முன்றில் கிடந்த பெருங் களியாற்கு
>
> அதள் உண்டாயினும் பாய் உண்டாயினும்
>
> யாது உண்டாயினும் கொடுமின் வல்லே;
>
> வேட்கை மீளப ........................................................................
>
> ...........................................கும் எமக்கும் பிறர்க்கும்
>
> யார்க்கும் ஈய்ந்து, துயில் ஏற்பினனே" (புறம் 317:1-7)

தமிழர் வெற்றிக் களிப்பினை கள்ளுண்டு கொண்டாடுவது அக்கால வழக்கம். அதுபோல் சீறூர்த் தலைவன் போரில் பெற்ற வெற்றியினால் கள்ளுண்டான் அதனால் ஏற்பட்ட மயக்கத்தால் தம் வீட்டு முற்றத்தில் உறங்கினான். அவன் கொடைத்தன்மை உடையவன்; அவன் செய்த நன்மையினை உணர்ந்தாவது உறங்க அவனுக்குப் பாயோ, தோலோ, விரிப்போ யாதேனும் கொடுங்கள் எனப் புலவர் குறிப்பிடுகிறார். படுக்க விரிப்பு கூட இல்லா வறுமையில் சீறூர்த் தலைவர்கள் வாழ்ந்தனர் என்பதை இங்கு அறியமுடிகிறது. பெரிய வேந்தர்கள் தம்மைப் போன்ற மற்றொருவனை வீழ்த்தி அவனிடமிருந்து கவர்ந்து வந்த பொன்னையும் பொருளையும் சேர்த்து வைத்தனர். அதனின்று தம்மை புகழ்ந்தேத்தும் புலவர்க்கும், பிறருக்கும் அளித்தார்கள். ஆனால் இனக்குழுச் சிற்றூர் மன்னன் தம் வீரத்தால் பெற்ற கூலி, வலிமையால் வேட்டையாடிப்

பெற்ற பண்டம், புன்புலத்தில் விளைவித்த தானியங்கள், தம் பொருட்களைத் தாமே பிறரிடம் பணயம் வைத்துப் பெற்ற பொருட்கள் என அனைத்தையும் வறியோர்க்கும், குடிமக்களுக்கும் வழங்கினான் என்றால் இதுதான் போற்ற வேண்டிய கொடையாகும். இக்கருத்தினை முன்வைக்கச் சான்றாக அமையும் பாடல்கள் பின்வருமாறு,

"புன்புலச் சீறூர் நெல்விளையாதே
வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன" (புறம் 328:2-4)

"...................... சீறூர் மதவலி
......................................... ............................................
இல்லது படைக்கவும் வல்லவன் உள்ளது
தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போல சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்..." (புறம் 331:2,6-10)

தன்னிடம் அள்ளி வழங்கத் தக்க நிறைய செல்வம் இல்லாதவன் தான் சீறூர் மன்னன்; அதற்காக அவன் கொடைத்தன்மை சற்றும் குறைந்தபாடில்லை எனும் செய்தியினைத் தாங்கிய இப்பாடல் வறுமையும் கொடைச் சிறப்பும் என்ற இப்பகுதியின் சாரம்சமாக அமைகிறது.

"நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே
இல் என மறுக்கும் சிறுமையும் இலனே... " (புறம் 180:1-2)

"அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்
மகிழ்நொடை பெறாஅராகி நனைகவுள்
கான யானை வெண்கோடு சுட்டி
மன்றுஓடு புதல்வன் புன்தலை நீவும்
அருமுனைப் பாக்கத்து ..." (அகம் 245:9-13)

அதிகமோ குறைவோ கிடைத்ததைப் பகிர்ந்துண்ட சமூகத்தின் ஒரு பகுதியில் வறுமை, பசி, பட்டினி போன்ற சமூக அவலங்கள் நிலவியதும் சங்க இலக்கியங்களில் ஆழமாகப் பதிவாகியுள்ளது. அவ்வகையில் "இரவலர் வருவர்" (புறம்:3) "வருந்திய குடி" (புறம்:35) "இல்லோர் கையற" (புறம்:55) போன்ற சொற்கள் யாவும் வெறும் கற்பனையில் கூறியதாகத் தோன்றவில்லை. அக்காலத்தில், வன்புலச் சிற்றூர் மக்களிடத்திலும் ஏனைய வறியோரிடமும் குடிகொண்டிருந்த வறுமை எனும் கொடூரத்தினைக் காட்சிப்படுத்துவதாக உள்ளன.

"கையது, கடன்நிறை யாழே; மெய்யது,
புரவலர் இன்மையின் பசியே; அரையது,
வேற்று இழை நுழைந்த வேர் நனை சிதாஅர்
ஓம்பி உடுத்த உயவற்பாண!" (புறம் 69:1-4)

"பசந்த மேனியோடு படர் அற வருந்தி,
மருங்கில் கொண்ட பல்குருமாக்கள்
பிசைந்து தின, வாடிய முலைகள், பெரிது அழிந்து,
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த
முற்றா இளந்தளிர் கொய்து கொண்டு, உப்பு இன்று,
நீர் உலையாக ஏற்றி, மோர் இன்று,
அவிழ்ப்பதம் மறந்து, பாசடகு மிசைந்து,
மாசொடு குறைந்த உடுக்கையள்" (புறம் 159:6-13)

"பசி தினத் திரங்கிய கசிவுடை யாக்கை

.................................................................................................

பால் இல் வறு முலை சுவைத்தனன் பெறாஅன்,
கூழும் சோறும் கடைஇ, ஊழின்
உள் இல் வறுங்கலம் திறந்து, அழக்கண்டு" (புறம் 160:4,15-17)

சிறுபாண்:130-140, பெரும்:19-122, பொருந:61-63, 79-81, அகம்:1-5,42,109,123:4-7,361 புறம்:121,159,160,164,179:1-3,316,318,319,320,327, நற்:110,230311, பதிற்:23,68 போன்ற பல பாடல்வரிகள் அக்காலத்தைய மக்களிடம் காணப்பட்ட வறுமையின் இரணங்களை எடுத்தியம்புவனவாக உள்ளன. இத்தகைய சமூகத்தில்தான் சிற்றூர்த் தலைவன் வசித்தான். சீறூர்மன்னர் நல்ல ஆடை கூட இல்லாது, கந்தலாடையுடன் காணப்பட்டதை இங்கு பார்க்கிறோம். அவன் பண்புகளில் புலவர்களைக் கவர்ந்தவை, இத்தகைய வறிய சூழலிலும் அவன் செய்த ஈகைச் சிறப்புதான் எனக் கொள்ளலாம்.

### 3.5.1.3 வேந்துவிடு தொழில்

சீறூர்மன்னர் ஆட்சி நிலவிய பகுதிகள் பெரும்பாலும் புன்செய் நிலங்களாக இருந்தமையால் அங்கு கிடைத்த பொருட்களை மட்டுமே வைத்துக் கொண்டு நிறைவான வாழ்க்கை வாழ இயலாத சூழல் நிலவிற்று. காரணம், மருத நிலம் தவிர்த்து ஏனைய நிலங்களில், பெரும்பாலும் மழைநீரை நம்பியே விவசாயம் அமைந்தது. எனவே சிற்றூர் மக்கள் பெரும்பாலும் வறுமையில் வாழ்ந்ததாக அறிகின்றோம். இச்சூழலில் சிற்றூர்களுக்குத் தலைவனாக அறியப்படும் சீறூர்மன்னன் பெருவேந்தர்கள் மேற்கொள்ளும் போர்களில் கலந்து கொண்டு அதனாற் கிடைக்கும் பொருட்களைத் தம் குடிகளுடன் பகிந்து கொண்டான் என்பதை அவர்கள் குறித்த சங்கப் பாக்கள் விவரிக்கின்றன. வேந்துவிடு தொழில் பற்றிய குறிப்பு தொல்காப்பியத்திலும் கூறப்பட்டுள்ளது (மரபியல்-83). “அரச ஊழியம் செய்வான் ஒருவன், வேந்தன் ஏவிய தொழிலை மறுப்பு ஏதும் இன்றிச் செய்தலும், அவன் விடுக்க ஊர்க்கு ஏகுதலும் செய்யும் கடப்பாடுடையன்”[16] வேந்தனுடைய நெருக்கடியின் பொருட்டு, அவனது ஆணைக்குக் கட்டுப்பட்டும் இத்தகைய (வேந்துவிடுதொழில்) செயலை மேற்கொண்டாரும் உளர். அன்றி தாமாகவும் வலிந்து பொருள் பெறும் பொருட்டு கலந்து கொண்டவரும் உளர்.

"வேந்துவிடு விழுத் தொழில் எய்தி ஏந்துகோட்டு

அண்ணல் யானை அரசு விடுத்து இனியே

எண்ணிய நாளகம் வருதல்..." (ஐங் 466:1-3)

மேற்கூறிய கருத்துக்கள் அடங்கிய செய்தியாக இப்பாடலை அணுக வேண்டியுள்ளது. வேந்துவிடு தொழில் என்பது அரச கட்டளை போலவும் பேணப்பட்டது. அதனைத்தான் 'அரசு விடுத்து' எனும் பதம் பாடலில் சுட்டப்பட்டுள்ளதைப் பார்க்கையில் வேந்தன் இடும் கட்டளையினை நிறைவேற்றும் பணியையே 'வேந்துவிடு தொழில்' என்று புலவர்கள் குறிப்பிடுவதாகத் தெரிகின்றது. இதே கருத்தினை அடியொற்றி முல்லை நிலத் தலைவன் வேந்துவிடு தொழிலில் ஈடுபட்ட செய்தியினைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

"கானங் கோழிக் கவர்குரல் சேவல்

ஒண்பொறி எருத்தில் தண்சிதர் உறைப்பப்

புதல்நீர் வாரும் பூநாறு புறவில்

சீறூ ரோளே மடந்தை வேறு ஊர்

வேந்துவிடு தொழிலொடு செலினும்" (குறுந்:242)

வேந்தன் இட்ட செயலைச் செய்ய மறுத்து, எதிர்த்தவரும் இருந்தனர். அதனைப் பின்வரும் பாடல் விவரிக்கின்றது. தவிர, போர்த் தொழிலுக்காக மட்டுமே வேந்துவிடு தொழில் நடைபெறவில்லை. வேந்தனின் செய்தியினை அறிவிக்கும் தூதுவனாகவும் இத்தொழிலில் ஈடுபட்டோர் பணிக்கப்பட்டனர்.

"தேர்செலவு அழுங்க திருவிற் கோலி

ஆர் கலி எழிலி சோர் தொடங்கின்றே

வேந்துவிடு விழுத்தொழில் ஒழிய

யான் தொடங்கினனால் நிற் புறந்தரவே" (ஐங்:428)

எவ்வாராக இருப்பினும் சீறூர் மன்னர் தமது இனத்தாரின் வறுமை கருதியே வேந்துவிடு தொழிலில் ஈடுபட்டனர் என்று எண்ண வேண்டியுள்ளது. புறம்: 319,

320, 326, அகம்: 364 போன்ற பாடல்களும் இக்கருத்தினைத் தாங்கியவையாக உள்ளன. இனக்குழுச் சிற்றூர் மன்னர் சிலர் தன்மானம் கருதி, வேந்தர்கள் தம்மிடம் பணித்த இத்தொழிலினை மேற்கொள்ளவில்லை. அதனால் வேந்தர்களின் சினத்திற்கு ஆளாகி, போர் மூண்டு சிற்றூர்கள் பல அழிக்கப்பட்டன. சான்றாக, இந்தத் தொழிலில் ஈடுபடாத பாரி எனும் குறுநில மன்னன் மூவேந்தர்களால் அழிக்கப்பட்ட நிகழ்வு சீறூர் மன்னர் அழிவிற்கான அடையாளமாகத்தான் தெரிகிறது. இதனைப் புறவாழ்வியலை விவரிக்கும் பாடல்கள் பதிவு செய்கின்றன. "இனக்குழுச் சமுதாயத்தில் இருந்த குழுவினர் பறையன், துடியன், பாணன், கடம்பன் எனக் கலை மரபினராகவே இருந்துள்ளனர். (புறம்:335) இவர்கள் இனக்குழுத் தலைவனின் ஆதரவிலேயே வாழ்ந்துள்ளனர். புன்செய் வேளாண்மையை அடிப்படைப் பொருளாதாரமாகக் கொண்டிருந்த இந்த இனக்குழுச் சமுதாயம் பற்றாக்குறை உடைய சமுதாயமாக இருந்துள்ளது. பற்றாக்குறைக் காலங்களில் இனக்குழுத் தலைவர்களான சீறூர்மன்னர்கள் அதைப் போக்குவதற்கான தொழிலாக வேந்துவிடு தொழிலை மேற்கொண்டுள்ளனர்"[17] என்ற கருத்து வேந்துவிடு தொழிலுக்கான காரணத்தை விளக்குவதாக அமைகின்றது. புறநானூற்றில் வேந்துவிடு தொழில் இடம்பெற்ற பெரும்பாலான பாடல்கள் சீறூர் மன்னர் சமுதாயம் சார்ந்த பாடல்களாகவே உள்ளன. வேந்தர் பொருட்டு போர்மேற்சென்ற சீறூர்மன்னரின் வீரமும் கொடையும் பற்றிய பாடல்களாகவே இவை உள்ளன.

#### 3.5.1.4 பாதீடு

ஆதிப் பொதுவுடைமைச் சமூகத்தில் பங்கிட்டு உண்ணும் வழக்கமே இருந்திருக்க வேண்டும். இனக்குழுச் சமுதாயத்தின் அடையாளப் பண்புகளில் பொதுவில் வைத்து உண்ணுதல் என்பது மரபான ஒன்றாகும். இதன் தொடர்ச்சி இன்றும் கிராமப்புறங்களில் காணக்கூடியதாக உள்ளது. சான்றாக, பழங்குடியின மக்கள் வேட்டைக்குக் குழுவாகச் செல்லும் போது, வேட்டையில் கிடைக்கும்

இறைச்சியினை ஒவ்வொரு குடும்பத்திற்கும் கூறு வைத்து (பங்கிட்டு) சமமாக வழங்குவதை இன்றளவும் கொண்டுள்ளனர். இது பண்டைய சீறூர் மன்னர் சமூகத்தினை நினைவுபடுத்துவதாக உள்ளது. அக்கால இனக்குழுச் சமூகத்தில் தலைவனது முக்கியச் செயல்பாடாக ஆகோள் புரியும் வழக்கம் இருந்தது. சீறூர் மன்னன் தம் கிளைகளுடன் பக்கத்துச் சிற்றூர்க்குச் சென்று அங்கிருக்கும் ஆநிரைகளைக் கவர்ந்து வருவது வாடிக்கை. அன்றைய காலகட்டத்தில், இனக் குழுக்கள் தம் பொருளியல் பின்புலத்தினை அளவிடும் கருவியாகப் பொன்னையும், இதரப் பொருளையும் கருதவில்லை. மாறாகக் கால்நடைகளே பொருளாதாரக் குறியீடாகக் கொள்ளப்பட்டது. அதற்கு மேய்ச்சல் நிலமான வன்புலம் ஒரு காரணமாக இருந்திருக்கலாம்.

குறிஞ்சி, முல்லை மற்றும் பாலை ஆகிய நிலங்களில் சிலவகைத் தானியங்கள் தவிர பெரிய அளவில் வேறெதுவும் விளைவதில்லை. ஆதலால் இந்நில மாந்தர்களின் செல்வங்களாக விளங்கியவை கால்நடைகளேயாகும். அத்தகு கால்நடைகளைக் கவர்ந்து வருதல் வீரச்செயல் எனச் சிற்றூர்களில் வசித்த இனக்குழு ஆடவர் கருதினர். அதற்காகத் தம் குழுவினருடன் அண்டைச் சீறூருக்குச் சென்று கவர்ந்த ஆவினங்களைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர். இதனைப் பாதீடு என இலக்கியங்கள் இயம்புகின்றன.

“மென் தினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன் புலம் தழீஇய புறவு அணி வைப்பும்...” (பதிற்:30)

மெல்லிய தினையினைக் குற்றி எடுக்கப்பட்ட மாவினைத் தம் இனத்தாருக்குப் பகுத்துக் கொடுத்த குறிஞ்சி நிலத்தலைவியின் செயல் திணைசார் குடிகளின் பங்கிட்டு வாழும் சமூக உணர்வினை அறியத் தக்கதொரு சான்றாக இப்பாடல் விளங்குகின்றது.

“ஒள்வாள் மலைந்தார்க்கு ஒற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்

கூறிட்டார் கொண்ட நிரை”[18]

கிடைத்தப் பொருட்களை அதாவது கவர்ந்து வரப்பட்ட ஆவினமானாலும் சரி வேட்டைப் பண்டமானாலும் சரி அவற்றை ஊர்மன்றத்தில் வைத்து சமமாகப் பங்கிட்டுக் கூட்டு வாழ்க்கை மேற்கொண்ட வாழ்வுதனைச் சிற்றூர் சமூகம் கொண்டிருந்தது. பொதுவாகச் சேர்த்து வைக்கும் வழக்கம் அவர்களிடையே காணப்படவில்லை. அன்றைய தேவைக்கு மட்டும் என எண்ணி வாழும் வாழ்வே இனக்குழு மக்களிடையே காணப்பட்டது.

“கானவன் எய்த முளவு மான் கொழுங்குறை
தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி கிழங்கொடு
காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்
ஓங்குமலை நாடன்…” (நற்:85)

காட்டில் கானவன் (குடித்தலைவன்) வேட்டையாடிக் கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுத்த தசைப் பகுதியினைக் காட்டுக் கிழங்கோடு சேர்த்து, அழகிய கூந்தலையுடைய கொடிச்சி தம் குறிஞ்சிக் குடியினர் பலருக்கும் பகுத்துக் கொடுத்ததாக இப்பாடல் பொருளுணர்த்துகின்றது. குடித்தலைவன் தம் குடிகளுக்குத் தாமே முயன்று தேடிக் கொணர்ந்த பண்டங்களை, குடித்தலைவனின் மனைவி அனைவருக்கும் பங்கிட்டுக் கொடுத்தல் இனக்குழுவினரிடையே அக்காலத்தில் காணப்பட்ட வழக்கமாகும்.

“சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ஊறல்
முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை
முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்
உடும்புஇழுது அறுத்த ஒடுங்காழ்ப் படலைச்
சீறில் முன்றில் கூறு செய்திடுமார்…” (புறம் 325:4-8)

சேறு நிறைந்த குழியில் தோண்டியதால் கிடைத்த கழங்கிய நீரினை முறையாகப் பகுத்து உண்ணும் வளமற்ற வாழ்க்கையினை உடைய குடியைச் சார்ந்த ஆண்மக்கள் வேட்டையாடிக் கொணர்ந்த உடும்பினை அறுத்து

யாவருக்கும் பகுத்துத் தருவதற்காகத் தம் சிறிய வீட்டின் முன் சுடுவதால் உண்டான வாசம் அச்சிற்றூரின் தெருக்கள் எங்கும் வீசிற்று எனப் பொருள்படும் இப்பாடல் அக்காலத்தில் பங்கிட்டு உண்ணும் இனக்குழு வாழ்வின் மேன்மையைப் பறைசாற்றுவதாக உள்ளது. "தரநிலைச் சமுதாய அமைப்பில் அனைவரும் சம தகுதியைப் பெற இயலாத நிலையில் தலைவனே (Chief) உயர்ந்த தகுதியைப் பெற்றிருப்பான். அவனே மக்கள் அனைவரையும் வழிநடத்தும் பொறுப்பைப் பெற்றவனாவான்; அதனோடு பெரும்பாலான சமுதாயங்களில் உணவுப் பொருட்களைப் பகிர்ந்து கொடுக்கும் உரிமையைக் கொண்டிருப்பான். விளை பொருட்கள், வேட்டையில் கிடைப்பவை, இன்னும் பிற வழிகளில் கிடைப்பவை ஆகியவற்றை அவன் மக்களுக்குப் பகிர்ந்தளிப்பான். உணவுப் பொருட்களைத் தலைவன் மறுபங்கீடு (Redistribution) செய்யும் முறையானது சொத்துடைமை அனைவருக்கும் பொதுவானது என்ற கருத்தைச் சுட்டிக் காட்டுகின்றது"[19] எனும் இக்கருத்தினைப் பார்க்கும் போது சங்ககாலச் சீறூர் மன்னர் வழிநடத்திய சமூகக் குழுக்கள் தரநிலைச் சமூகமாக இருந்ததை அறிய முடிகின்றது.

"கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்கண் அவ்வலைப் பயம் பாராட்டி
கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்..." (அகம் 70:1-4)

மீன்வேட்டையிற் சிறந்த நெய்தல் நிலத்துச் சிற்றூரில் வாழும் பரதவ மக்கள் வலைவீசிக் கிடைத்த மீன்களைத் தம் சிறிய குடியில் உள்ள அனைவருக்கும் பகுத்துக் கொடுக்கும் நெய்தல் நிலத் தலைவன் குறித்துப் பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது. இச்செய்தியின் மூலம் திணைச் சமூக மக்கள் தாம் வாழ்ந்த பகுதிகளில் கிடைத்த பொருட்களைத் தம் குடியினரோடு முறையாகப் பங்கிட்டு வாழ்க்கை நடத்தினர் என உணர முடிகிறது. தாம் வேறு தம் குடியினர் வேறு என இனக்குழுவினை வழிநடத்திய தலைவன்

எண்ணியதில்லை என்பதை மேற்கண்ட சங்க இலக்கியப் பாடல்கள் உறுதிபடுத்துகின்றன. இதே கருத்தினைக் குறிப்பவையாக; அகம்: 10,12,89,97,237,280,311,393,167,284, மற்றும் புறம்: 46,168,319,320,326,330,331,332,333,334 போன்ற பாடல்களும்; சிற்றூர் தலைவர் ஆநிரை கவர்ந்து அவற்றைப் பாதீடு செய்த நிகழ்வுதனை புறம்: 257,258 நற்: 336,388 பதிற்: 38, 59 கலி: 103-54 போன்ற பாடல்களிலும் காணமுடிகின்றது.

### 3.5.1.5 மகள் மறுத்தல்

சங்ககால இனக்குழு மக்கள் கொண்டிருந்த உயர்ந்த பண்புகளில் ஒன்றே மகள் மறுத்தல். தம்மிடம் பெண்கேட்டு (மகட்கொடை) ஆதிக்கம் செய்யும் பண்பற்ற வேந்தரின் அச்செயலை எதிர்த்து மறுதளித்தனர். அவ்வகையில், சங்க இலக்கியங்களில் இடம்பெறும் மகள் மறுத்தல், மகட்பாற் காஞ்சி போன்ற துறையமைந்த பாடல்கள் வேந்தன் ஒருவன் மாற்றரசனிடம் (மருதநிலச் சீறூர் மன்னனிடம் / குடிவழிக் குறுநில மன்னரிடம்) பெண்கேட்டுச் செல்லுதல், அதற்குப் பெண்வீட்டார் பெண்தர மறுத்தல், அதனால் வரும் போரினால் உண்டான அழிவையும், சமுதாயத்தில் ஏற்பட்ட தீங்குகளையும் சுட்டுகின்றன. இதுபோன்ற நிகழ்வுகளால் ஆங்காங்கு நிலைபெற்றிருந்த சிறுசிறு இனக்குழுத் தலைமைக்கும், அவர்களது தனித்த அடையாளத்திற்கும் அச்சுறுத்தலாக வேந்தர்கள் மேலோங்கினர். இவ்வேந்தர்கள் தமிழர்கள் தானா? என்ற கருதுகோளினைச் சில ஆய்வாளர்கள் முன்வைக்கின்றனர். அதற்கான காரணங்களுள் ஒன்று; வேந்தர்களில் பாண்டியன் தன் மெய்க்காப்பாளர்களாக மிலேச்சர்களை (அயல்நாட்டினர்) நியமிக்க வேண்டிய காரணம் என்ன? மெய்க்காப்பாளர்கள் என்போர் மிகவும் நம்பிக்கைக் குறியவர்களாக இருப்பர், தமக்கு மிகவும் வேண்டியவர்களாகவும், தன் மீது அக்கறை உடையவர்களாகவும் இருப்பர். அப்படியிருக்க பாண்டிய வேந்தன் ஒரு தமிழரை நியமித்திருக்கலாமே என்னும் கருத்துக்களை பேரா. பிச்சை போன்றோர் முன்வைக்கின்றனர். மற்றொன்று; தமிழ்க்குடிகளான இனக்குழு

மன்னர், குறுநில மன்னர்கள் வேந்தர்கள் பெண் கேட்டு வருகையில் ஏன் தர மறுக்கின்றனர். அவர்கள் தமிழர்கள் எனில் பெண் தர முன்வந்திருக்கலாம் அல்லவா. வேந்தர்களுக்கு தமிழ்க்குடிகள் மீது அக்கறை இருப்பின் ஏன் அவர்கள் சார்ந்த சிற்றூர்களைச் சூறையாடுகின்றனர். இதுபோன்ற கருத்துக்கள் இங்கு சிந்திக்க வேண்டியவைகளாகின்றன.

சீறூர் மன்னர்கள் வேந்தனின் இச்செயலை, ஏற்க முடியாது தடுமாறி நின்ற இனக்குழுவின் உணர்வு நிலையே மகள் மறுத்து மொழிதலாக அமைகின்றது. இத்தகு முரண்பட்ட சமூக, அரசியல் சூழலில் சிக்கல்கள் தோன்றுவது இயல்பானதே. அவ்வகையில் எழுந்த சிக்கல்களுள் ஒன்றே 'மகட்பாற் காஞ்சி, மகள் மறுத்தல்' ஆகிய துறைகளாகும். சிறுநில மன்னர்களான இவர்கள் பெருநில வேந்தர்கள் பெண் கேட்டு வந்தாலும் தன் முதுகுடி வழக்கம் கருதிப் பெண் கொடுப்பதற்கு அஞ்சி, பெண் தர மறுத்துப் போர் புரியும் முடிவுக்குத் துணிந்தனர். மருதநிலச் சிற்றூர்களில் கோலோச்சிய முதுகுடிச் சிற்றூர் மன்னர் அழிவிற்கு மகள்மறுத்தல் ஓர் முக்கியக் காரணமானது. இவர்களின் மகள் மறுக்கும் மாண்பைப் பற்றித் தொல்காப்பியம், பின்வருமாறு சுட்டுகின்றது.

"நிகர்த்து மேல்வந்த வேந்தனோடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பால்" (தொல்,புறத்:24)

என்ற தொல்காப்பியக் கூற்று மேற்குறிப்பிட்ட கருத்தை உறுதிப்படுத்துகிறது எனலாம். மகள் மறுத்தல் எனும் செயல் இனக்குழுக்களின் மானம் போற்றும் மறப்பண்பினைக் குறிப்பதாயினும், அதன் பின் விளைவு பல சிற்றூர்களின் அழிவிற்குக் காரணமானது. மகள் மறுக்கும் பெண் வீட்டாரை எதிர்த்துப் படையுடன் போர் தொடுக்கும் வேந்தனுக்கு ஈடு கொடுக்க இயலாமல் பலச் முதுகுடிச் சீறூர் மன்னர்கள் தோல்வியுற்று வீரமரணம் அடைகின்றனர். அவர்களது சிற்றூர்கள்; தீயிட்டும், யானைக் கூட்டங்களால் நாசம் செய்யப்பட்டும் சீரழிக்கப்பட்ட நிகழ்வுகளைப் புறப் பாடல்கள் விவரிக்கின்றன.

அதோடு கழுதை ஏர்பூட்டி உழுவதும், தோல்வியுற்ற மன்னனின் ஊரிலுள்ள பெண்களின் தலைமயிரால் கயிறு திரித்து அவ்வூரின் யானைகளைக் கட்டி இழுத்து வருவதுமான செயல்கள், வேந்தர்கள் சிற்றூர் மன்னர்கள் மீது கொண்டிருந்த சினத்தின் வெளிப்பாடாகத் தெரிகிறது. மகள் மறுத்தல் எனும் இந்நிகழ்வே பல சீறூர்க் குடிகளைக் காவு கொண்டதற்கு முதற்காரணமாகும்.

"களிறு பொரக் கலங்கிய தண்கயம்போல,
பெருங்கவின் இழப்பது கொல்லோ" (புறம் 341:17-18)

"மரம்படு சிறுதீப் போல
அணங்கு ஆயினள் தான்பிறந்த ஊர்க்கே" (புறம் 349:6-7)

என்ற அடிகள் பெண் தர மறுத்தலால் ஏற்பட்ட சண்டையில் ஊரே அழிந்ததை விளக்குகின்றன. பெண் தான் பிறந்த ஊருக்குத் தீப்போல் ஆனாள் என்றும், பெண்ணின் பொருட்டு அக்கால மன்னர்கள் பகை கொண்டெழுந்ததையும், அப்பகையால் நாடே அழியும் சமுதாயத் தீங்கினையும் விவரிக்கின்றன.

"யார்மகள்? என்போய்; கூறக் கேள், இனி
குன்றுகண்டு அன்ன நிலைப்பல் போர்பு
நாள்கடா அழித்த நனந்தலைக் குப்பை
வல்வில் இளையர்க்கு அல்குபதம் மாற்றாத்
தொல்குடி மன்னன் மகளே; முன்நாள்
கூறி வந்த மாமுது வேந்தர்க்கு" (புறம் 353:7-12)

வேந்தர்கள் பலர் இனக்குழுத் தலைமைக்குள் வலிந்து மணமுடிக்க முயன்ற முயற்சிக்குக் காரணம் பேரரசின் எல்லையை விரிவுபடுத்தவும் அதன்வழித் தங்கள் வல்லாண்மையை மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்தவும் நினைத்த அரசியல் உத்தி என்றும் கூறலாம்.

"................................. இவள் தன்னைமாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரல் அல்லோர்க்குத் தரலே இல் என

கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்
குழாஅம் கொண்ட குருதிஅம் புலவோடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவேல்
இன்ன மறவர்த்து ஆயினும் அன்னோ
என் ஆவதுகொல் தானே
பன்னல் வேலி இப்பணை நல்லூரே" (புறம் 345:12-20)

பல வேந்தர்கள் இப்பெண்ணை விரும்பி வந்தனர். ஆயினும் இவள் தமையன்மார்கள் அவ்வேந்தர்கள் தரும் பொருளை விரும்பாதவர்கள். போரை விரும்பி ஏற்பவர்களாவர். பண்புடையோர்க்கு அன்றி வேறு எவருக்கும் அவர்களது பெண்ணைத் தராத மறப்பண்புடையோர். ஆயினும் இப்பெண்ணால் இவ்வூர் என்ன நிலைக்கு ஆளாகுமோ என மேற்கண்ட பாடல் குறிப்பிடப்படுகிறது. இந்நிகழ்வு வேந்தரை எதிர்க்கும் மறக்குடியினரின் வீரத்தைச் சான்றுரைக்கிறது.

"வென்று எறி முரசின் வேந்தர் என்றும்
வண்கை எயினன் வாகை அன்ன
இவள்நலம் தாராது அமைகுவர் அல்லர்
என் ஆவதுகொல் தானே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
தேம்கொள் மருதின் பூஞ்சினை முனையின்
காமரு காஞ்சித் துஞ்சும்
ஏமம் சால் சிறப்பின் இப்பணை நல் ஊரே" (புறம் 351:5-12)

வேந்தர்களை எதிர்க்கும் நிகழ்வுகளால் உண்டாகும் சண்டையினால், ஏற்கனவே வளம் குன்றியதான சில ஊர்கள் மேலும் பாழ்பட்டன. அதனால் புலவர்கள் அவ்வூரினைக் குறித்த அச்சத்தினால் இவ்வூர் என்னாகுமோ என்றுரைப்பதாகப் பல பாடல்கள் காணப்படுகின்றன. மகள் மறுத்தல்

தொடர்புடைய பாடல்களில் பெண் திருமணமே கருப்பொருளாக அமைவதால், அதற்குக் காரணமான பெண்ணின் பேரழகு பாடல்களில் பெரிதும் புனையப்பட்டுள்ளது. வேந்தனாக இருந்தும் போர் தொடுத்து தன்னுயிர் கொடுத்து அடையத் துடிக்கும் ஒரு பெண்ணைப் பேரழகியாகக் காட்டுதல் தானே பொருத்தமாக இருக்கும். அந்த வகையில் இத் துறையின் பாடல்களில் பெண்ணழகைப் புனையத் தவறவில்லை.

"பாரி பறம்பின் பனிச்சுனை போல
காண்டற்கு அரியன் ஆகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கி தண்ணென
அகில் ஆர் நறும்புகை ஐதுசென்று அடங்கிய
கபில நெடுநகர் கமழும் நாற்றமொடு
மனைச் செறிந்தனளே வாணுதல் இனியே

.................... ...................... ..............................

யார் ஆகுவர்கொல் தாமே நேரிழை
உருத்த பல்சுணங்கு அணிந்த
மருப்பு இள வனமுலை ஞெமுக்குவோரே?" (புறம் 337:6-22)

இங்கு பாரியினது பறம்பு மலையினில் உள்ள பெண்ணின் அழகு சுட்டப்பட்டு, இத்தகு அழகுடைய இவளை கொள்வார் யாரோ என விவரிக்கப்படுகிறது. இதன் வாயிலாக பேரழகு பொருந்திய இவளால் இவ்வூருக்கு நேரப்போகும் விளைவு குறித்து ஆரூடம் கூறுவது போல் இங்கு சுட்டப்படுகிறது.

"நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே; தந்தையும்
நெடிய அல்லது பணிந்து மொழியலனே
...மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினள்தான் பிறந்த ஊர்க்கே" (புறம் 349:1-7)

என வரும் இப்பாடலில் பெண்ணின் வளர்ப்பும், வனப்பும், கண்டோர் வியக்கும் வண்ணம் அமைந்து, 'இத்தகு பெருமைக்குரிய பேரழகியைப் பெறப் போகிறவர் யாரோ?' என்று கேட்கும் விதமாக இனக்குழுவின் குறைவுபடாப் பெருமிதம் காட்டப்பட்டுள்ளது. மேலும், இந்தப் பெண்ணின் பேரழகே, வளமான இவ்வூருக்குப் பகையானது என்று எதிர் மறையில் பெண்ணின் பெருமை பேசுவதும் குறிப்பிடப்படுகிறது. இன்றும் சிற்றூர்களில் பாடப்படும் நாட்டுப்புறப் பாடல்களில் பெண்குழந்தையின் அழகினைப் புனைந்து பாடுவதும் இத்தகு அழகு யாருக்குச் சொந்தமாகப் போகிறதோ? எனப் பாடும் மரபு காணப்படுகிறது. ஓர் அரசன் ஒரு குறிப்பிட்ட பெண்ணை அடைந்தே தீருவேன், இல்லையென்றால் போரிட்டு வீரமரணம் அடைவேன் என்று நெடுமொழி கூறுகின்றான். அதன்படிப் பெண் கேட்டுச் சென்று ஏமாற்றம் அடைகிறான். அதன் பிறகு நிகழும் மோசமான நிகழ்வுகள் அவ்வூர் அழிவிற்குக் காரணமானது. இதனை,

"... அவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ
ஆர் அமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்
நீள் இலை எஃகம் மறுத்த உடம்பொடு
வாரா உலகம் புகுதல் ஒன்று எனப்
படை தொட்டனனே குரிசில்" (புறம் 341:11-16)

இவ்வாறு சூழுரைப்பதற்குக் காரணம் உண்மையில் அப்பெண் மீதான காதலா? இல்லை, ஆதிக்க உணர்வா? ஆட்சிப் பரப்பினை விரிவுபடுத்தும் தந்திரமா? எனப் பல கோணங்களில் சிந்திக்க இங்கு இடமுள்ளது. மேற்கண்ட பாடல் வரிகள், பழைய திரைப்படத்தின் புகழ்பெற்ற வசனமான 'மணந்தால் மகாதேவி, இல்லையேல் மரணதேவி' என்பதை நினைவூட்டுகிறது. இதுகூட அக்காலச் சமூக எச்சத்தின் தொடர்ச்சியால் ஏற்பட்டதே எனலாம். மேலும், நாற்படைகளோடு பெண்ணின் ஊரை முற்றுகையிட்டு வேந்தர்

காத்திருப்பதாகப் பல பாடல்கள் அமைந்துள்ளன. இந்நிலையில் பெண்ணின் தந்தை கூறுவதாக,

"...................................................................... கருஞ்சினை
வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர் அணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினும் தன்தக
வணங்கார்க்கு ஈகுவன் அல்லன்" (புறம் 338:5-9)

தன் குடித் தகுதிக்குப் பணியாதவன் வலிமையில் பெரியவனான வேந்தனே என்றாலும், அவனுக்குப் பெண்ணைக் கொடுக்க மாட்டேன் என்று பெண்ணின் தகப்பன் கூறுவதாகப் பாடல் பொருளுணர்த்துகிறது. இங்கு பெருநில வேந்தரை எதிர்க்கும் இனக்குழுத் தலைவனின் திறமும், உயர்ந்த பண்பினை எதிர்பார்க்கும் மேன்மையும் புலப்படுத்தப்படுகிறது. மேலும் வேந்தனின் அரசதிகாரம் ஓங்கிப் புலப்படுவதும் அதற்கு எவ்வகையிலும் இனக் குழுத் தலைவனின் தன்மானச் சீற்றம் குறையாமல் வெளிப்படுவதும் மேற்கண்ட பாடலின் வாயிலாக அறியமுடிகிறது.

"வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே;
கடவன கழிப்பு இவள் தந்தையுஞ் செய்யான்" (புறம் 336:1-2)
"நலம்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்,
புரையர் அல்லோர் வரையலள் இவள் எனத்
தந்தையும் கொடாஅன் ஆயின்..." (புறம் 343:11-12)
"திரு நயத்தக்க பண்பின் இவள் நலனே
பொருநர்க்கு அல்லது பிறர்க்கு ஆகாதே..." (புறம் 342:5-6)

என்று பல பாடல்களில் பொருள் விரும்பாப் பெரும்பண்பும், தகுதி நோக்கும் தகைமையும் வேந்தனின் வெஞ்சினத்தையும் பொருட்படுத்தாப் பேராண்மையும் இனக்குழுத் தலைமைக்கேயுரிய தனித்த அடையாளமாக அமைகின்றன. குடியின் தன்மானத்தைக் காக்கத் தந்தைக்குத் துணைநின்று பெண்ணின்

உடன்பிறந்த ஆண்கள் வீறுகொண்டு நிற்பதும், வேந்தரை எதிர்த்துப் போரிடத் துணிவதும் நோக்கத்தக்கதாகும்.

"…. தன்னையர்

பொருசமம் கடந்த உருகெழு நெடுவேற்

குருதி பற்றிய வெருவரு தலையர்…" (புறம் 337:16-18)

மகள்மறுத்தல் என்னும் நிகழ்வுகள் இனக்குழுச் சமூகம் பெருவேந்தர்களால் சூறையாடப்பட்டு உருத்தெரியாமல் அழிவுற்றதற்கான காரணங்களுள் ஒன்றாகவே இவற்றைக் கருத வேண்டியுள்ளது. "இனக்குழுக்களைப் பேரரசுகள் அழிக்கத் தொடங்கியமை, அவை அழிந்த பின் பேரரசுகள் தம்மை இனக்குழுவினரைப் போற்றுபவராக நிலைநிறுத்திக் கொண்டமை, அதாவது இனக்குழு இடத்தில் தம்மை நிறுத்திக் கொண்டமை ஆகிய இரு நிலைகளையும் சார்ந்து சங்க இலக்கியப் பதிவுகள் நிகழ்ந்துள்ளன. இந்தப் போராட்டச் சூழலில் புலவர்கள் வாழ்வியல் கேள்விக்குறியாகும் நிலைமை ஏற்பட்டது. இனக்குழுச் சீறூர் மன்னர்களைச் சார்ந்து நிற்க முடியாமல் பாணர்களும், புலவர்களும் அவதிப்படுவதையும் காணமுடிகிறது. அதே நேரம் பெரு வேந்தர்களின் அதிகாரத்துடன் ஒத்துப் போகவும் முடியாமல் எதிர்க்கவும் முடியாமல் புலவர்கள் துன்புறுவதையும் காணமுடிகிறது. வேந்தர்கள் தமிழகத்திற்கு அயலில் இருந்து வந்தவர்கள் அல்ல. எனினும், இனக்குழு மக்களுக்கும் வேந்தர்களுக்கும் இடையே ஒரு போராட்டம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருந்துள்ளது"[20] இக்கூற்றின் மூலமாக அக்கால வேந்தர்கள் திணைச்சமூக இனக்குழுவினரை வாய்ப்புகள் கிடைக்கும் போதெல்லாம் பயன்படுத்திக் கொண்டதோடு அல்லாமல் அவர்களது நிலப்பரப்பினை அபகரித்தனர்.

அன்பினாலும் காதலினாலும் ஒரு பெண்ணை விரும்பி முறையாகக் கேட்டுவரும் மரபினோர்க்கும்; வம்பினால், அதிகாரத்தால், செல்வப் பெருக்கால் ஒரு பெண்ணை அடைய நினைக்கும் வேந்தர் மரபினோர்க்கும் மிகுந்த

வேறுபாடு உண்டு. இந்த வேறுபாடே மகள் மறுத்து மொழிதலுக்குப் பெருஞ்சிக்கலாக அறியப்படுகிறது. "மருத நிலப் பெருக்கம் என்பது முக்கியப் பொருளாதார மையமாகக் கருதப்பட்ட சூழலில் மருத நில ஊர்களுக்குத் தலைவர்களாய் வாழ்ந்த முதுகுடி மன்னரிடம் மகட்கொடை வேண்டிய வேந்தர்களின் நோக்கம் மருத விளை வயல்களைக் கைப்பற்றுதலே ஆகும்"[21] இத்தகைய சமூக அரசியல் சிக்கலால் இனக்குழுக்களின் அடையாளம் சுருங்கி நாளடைவில் முடிவுற்றது. வேந்தர்களது எழுச்சியும், அவர்களது ஆட்சியும் எங்கும் வேரூன்றி வளர்ந்தது. இதனால் மருதநிலத்தில் வாழ்ந்த சீறூர் மன்னர் அழிவுற்றனர். வேந்தராட்சி மேலும் விரிவடைந்தது. சீறூர்மன்னர்களைக் குறித்துப் பாடப்பட்டுள்ள புறப்பாடல்களில் நேரடியாக பெயர் சுட்டப்பட்ட சிலரைத் தவிர, ஏனையோரைப் பாடல் வரிகளில் இடம் பெறும் சீறூர் எனும் ஊர்ப்பெயரினை வைத்தும்; சீறூர் மன்னர், சீறூர் நெடுந்தகை, சிறுகுடிக் கிழான், சீறூர் வண்மையோன், சீறூர் மதவலி என்ற அடைமொழிகளை வைத்தும் அக்காலச் சிற்றூர்களில் வசித்த திணைக் குடிகளின் தலைவர்களை அடையாளம் காணமுடிகின்றது. அவ்வகையில், சங்க இலக்கியங்கள், மற்றும் புலவர் கா.கோவிந்தன் அவர்களின் ஆய்வு நூலான 'சங்ககால அரசர் வரிசை' எனும் நூலினை வாசிக்கும்போது காணலாகும் சீறூர் மன்னர்கள் சிலர் பின்வருமாறு;

- அம்பர் கிழான் அருவந்தை
- அருமன்
- அள்ளன்
- ஈந்தூர் கிழான் தோயன்மாறன்
- ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்
- கொடுமுடி மன்னன்
- சிறுகுடி பண்ணன்

- தழும்பன்
- நாலை கிழவன் நாகன்
- பிட்டங்கொற்றன்
- போஒர் கிழவோன் பழையன்
- முசுண்டை
- வயவன்
- வல்லங்கிழவோன் நல்லடி
- வல்லார் கிழான் பண்ணன்
- வாணன்
- விரான்

### 3.6 குறுநில மன்னரும் கிழாரும்

குறிஞ்சி, முல்லை மற்றும் பாலை எனும் வன்புலச் சிற்றூர்களில் இனக்குழுச் சமூக எச்சத்தின் தொடர்ச்சியாகக் கருதப்பட்ட சிற்றூர்த் தலைவர்களின் தலைமையில் சமூகம் இயங்கியது. அதுபோல ஏனைய மென்புலச் சிற்றூர்களில் நிலவுடைமை உணர்வுடன் கூடிய கிழார்கள் ஆதிக்கம் செலுத்தினர் என அறிகின்றோம். மேட்டுக்குடிச் சமூகம் என்ற அடையாளத்துடன், உழைப்புச் சுரண்டலான உழுவித்துண்போர் வரிசையில் கிழார் விளங்கினர். அதே சமயம் சீறூர்மன்னர் அழிவுற்றதால் அவர்களைப் பின்பற்றி மேலெழுந்த குடிவழித் தலைமையில் குறுநில மன்னர் வன்புலத்தில் நிலைபெற்றனர். வள்ளல் தன்மையிலும், வீரத்திலும் சீறூர் மன்னரையும்; தோற்றத்திலும், பொருளியல் செல்வாக்கிலும் ஓரளவு வேந்தரைப் போன்றும் குறுநில மன்னர் விளங்கினர். இவ்விருவரும் வேந்தர்களுக்கு அடுத்தபடியாக சிற்றூர்களை ஆளும் உரிமை பெற்றவர்களாவர். (ஒரு சிற்றூரோ, பல சிற்றூர்கள் சேர்ந்தோ இவர்கள் ஆளுகைக்குள் அடங்கும்) ஆகவே இவர்களைப் பற்றிய அறிமுகம் தெளிவது அவசியமாகிறது.

### 3.6.1 குறுநில மன்னர்கள்

சங்க காலச் சிற்றூர்ச் சமூகம் குறித்து அறியமுற்படுகையில், அக்கால அரசுகள், இயல்புகள் எனப் பகுக்கும் போது முதலாவதாகச் சீறூர் மன்னர்களைக் குறித்தும் அதன் தொடர்ச்சியாக குறுநில மன்னர்கள் பற்றிய அறிமுகம் தேவையாகிறது. சீறூர்மன்னர் என்போர் இனக்குழுத் தலைவனாக அறியப்படுகின்றனர். இவர்களது ஆட்சிப் பரப்பு ஒரு சிற்றூர் எனும் அளவினதாக இருந்திருக்க வேண்டும். இது போன்ற சிற்றூர்கள் சில சேர்ந்த பகுதிகளைக் குடிவழியால் (பரம்பரையாக) ஆள்பவர்களைக் குறுநில மன்னர் என்ற வகையில் சேர்க்கலாம். ஆவியர், மழவர், வேளிர் போன்ற பல்வேறு தொல்குடிவழி வந்தவர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் குறிப்பாக மலையும் மலைசார்ந்த பகுதிகளை ஆட்சி செய்தனர். இனக்குழுச் சமூகத்தின் தொடர்ச்சியாக உருவான சீறூர் மன்னர்களின் அடியொற்றி வந்தவர்களே இக்குறுநில மன்னர்களாவர். சிற்றூர் மன்னரைப் போன்றே வீரத்திலும், கொடைச் சிறப்பிலும் மேலோங்கிய இக்குறுநில மன்னர்கள் இனக்குழுச் சமூகத்தின் தொடர்ச்சியாக, சீறூர் மன்னனின் வீழ்ச்சிக்குப் பின் மேலெழுந்தவர்கள் என்று கூறலாம். இவர்கள் இனக்குழுச் சீறூர் மன்னன் போலல்லாமல், படை வலிமையும், அரண்களும், சிறு எயில்களும் கொண்டிருந்தனர்.

சீறூர் மன்னர்கள் போலவே, புலவர்களிடம் நெருங்கிய நட்பினைக் கொண்டிருந்தனர். இவர்களின் எழுச்சியும், புகழும் வேந்தர்களுக்கு கலக்கத்தை ஏற்படுத்தவே, வேந்தர்களின் நாடு கொள்ளும் ஆசையில் குறுநில மன்னர்கள் பலர் பலியாயினர். பெரும்பாலும் குறுநில மன்னர்களின் பெயர்கள் குறித்து சங்க இலக்கியங்களில் நேரடியான பதிவுகள் கிடைக்கின்றன. ஆற்றுப்படை இலக்கியங்கள் இவர்களின் கொடைத்திறம் குறித்துச் சான்றுரைக்கின்றது. புலவர் கா.கோவிந்தன் அவர்களின் 'சங்ககால அரசர் வரிசை', 'சங்ககால வள்ளல்கள்' போன்ற நூல்கள் குறுநில மன்னர் குறித்து அறிய

ஏதுவானவையாகும். மேற்குறிப்பிட்ட நூல்களை நோக்கும் போது அறியலாகும் குறுநில மன்னர் வரிசை பின்வருமாறு,

- ஓரி
- கட்டி
- அதிகன்
- அறுகை
- கடலன்
- மூவன்
- குமணன்
- கழுவுள்
- பிண்டன்
- அழிசி
- அன்னி
- அகுதை
- அவியன்
- விச்சிக்கோ
- ஏறைக்கோன்
- பிட்டங்கொற்றன்
- கண்ணனெழினி
- ஆதனுங்கன்
- விச்சிக்கோ நன்னன்
- கரும்பனூர் கிழான்
- வேங்கைமார்பன்
- நாஞ்சில் நாட்டு வல்வேல் கந்தன்
- மோகூர் மன்னன் பழையன்
- கண்டீரக்கோப்பெருநள்ளி

- கடியநெடுவேட்டுவன்
- தாமான் தோன்றிக்கோன்
- அதியமான் நெடுமான் அஞ்சி
- அதியமான் பொகுட்டெழினி
- மலையமான் திருமுடிக்காரி
- மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்
- மல்லிக்கிழான் காரியாதி
- கொண்கானம் கிழான் நன்னன் உதியன்
- பொறையாற்றுக் கிழான் நற்றேர்ப்பெரியன்
- பரதவர் கோமான் மத்தி
- ஓய்மானாட்டு நல்லியக்கோடன்
- ஓய்மான் வில்லியாதன்
- தொண்டைமான் இளந்திரையன்
- கள்வர் கோமான் புல்லி

### 3.6.2 கிழார்கள்

சங்க காலத்தில் வழங்கிய கிழார் என்னும் சிறப்புப் பெயர் உழுவித்து உண்ணும் வேளாண் மக்களைக் குறிக்கும் பட்டப் பெயர் என்பது அறிஞர்கள் கருத்து. பிற்காலக் கல்வெட்டுகள், சுவடிகள் வாயிலாக அறியப்படும் கிழார் எனும் பெயர் கொண்டவை பல சமூகத்தினரைக் குறிப்பதாகும். ஆனால், சங்க காலத்தில் இச்சொல் மருதநில நிலவுடைமையாளர்களான உழுவித்துண்ணும் வேளாண் மக்களையே பெரும்பாலும் குறிப்பதாகக் கொள்வது பொருத்தமானதாகும். வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் என்பார் தம் தமிழ் இலக்கிய அகராதி என்னும் நூலில் பின்வருமாறு வரிசைப்படுத்துகின்றார்.

கிழமை - உரிமை

கிழவன் - தலைவன், உரியவன்

கிழான் - வேளாளன், உரியவன்

கிழார் - வேளாளர் பட்டப்பெயர்

மேற்கண்ட சொல் விளக்கங்களின் வரிசையினை நோக்கும்போது கிழார் என்னும் சொல் உருவான விதம் புலப்படுவதாக உள்ளது. "அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர் ஆகிய இக்குடிகளிற் பிறந்து, உழவுத்தொழில் மேற்கொண்டு சிறந்தார் அனைவரையும் 'கிழார்' என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தனர் என்று கொள்வது பொருந்தும் என்க, இதனால் கிழார் எனும் இப்பெயர் குடிபற்றி வந்த பெயரன்று; தொழில் பற்றி வந்த பெயராம் என்பது உறுதி செய்யப்படும்"[22] இக்காலத்தில் பண்ணையார், குடியானவர் எனப்படும் நில உடைமையாளர்களைத் தான் அக்காலத்தில் கிழார் எனக் குறிப்பிட்டனர். இவர்கள் நிலங்களின் மீது ஆதிக்கம் செலுத்தியவர்களாவர். தம் நிலங்களில் அடித்தட்டு உழவர்களை வேலைக்கு அமர்த்தி அவர்களின் உழைப்பில் வாழ்பவர்களாவர். இவர்கள் வசம் இருந்த நிலங்கள் யாவும் ஆதி குடிகளான உழைக்கும் மக்களுடையதாகவே இருந்திருக்க வேண்டும். அதனை உரிமை கொண்டாடி ஆக்கிரமித்தும், அடித்துப் பிடுங்கியும் தம் வசப்படுத்திக் கொண்டனர். இத்தகைய கிழார்களே, பிற்காலத்தில் 'ஜமீன்களாகவும், 'பாளையக்காரர்களாகவும்' உருப்பெற்று வளர்ந்தனர். சங்ககாலப் புலவர்கள் வரிசையில் பலரது பெயர்களின் பின்னொட்டாக கிழார் எனும் பெயர் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அவ்வகையில் அறியப்படும் புலவர்கள் மொத்தம் நாற்பத்தொருவராவர் அவர்கள் பெயர் பின்வருமாறு,

1. அரிசில் கிழார்
2. ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக்கண்ணத்தனார்
3. ஆலந்தூர் கிழார்
4. ஆவூர்க்கிழார்
5. ஆவூர் மூலங்கிழார்
6. ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்

7. ஆவூர் மூலங்கிழார் மகனார்பெருந்தலைச் சாத்தனார்
8. இடைக்குன்றூர் கிழார்
9. உகாய்க்குடி கிழார்
10. உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்
11. ஐயூர் மூலங்கிழார்
12. கயத்தூர் கிழார்
13. கருவூர்க்கிழார்
14. காட்டூர்கிழார் மகனார் கண்ணனார்
15. காரிக்கிழார்
16. கிள்ளி மங்கலங்கிழார்
17. கிள்ளி மங்கலங்கிழார் மகனார் சோகோவனார்
18. குறுங்கோழியூர் கிழார்
19. குன்றூர்கிழார் மகனார் கண்ணத்தனார்
20. கூடலூர்கிழார்
21. கொடியூர்கிழார் மகனார் நெய்தல் தத்தனார்
22. கோவூர்க்கிழார்
23. கோழியூர்கிழார் மகனார் செழியனார்
24. செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார்
25. துறையூர் ஓடைக்கிழார்
26. நல்லாவூர் கிழார்
27. நெய்தல் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்
28. நொச்சி நியமங்கிழார்
29. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழார்
30. பெருங்குன்றூர் கிழார்
31. பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார்
32. மதுரை மருதங்கிழார் மகனார் சோகுத்தனார்

33. மதுரை மருதங்கிழார் மகனார் இளம்போத்தனார்

34. மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்

35. மருங்கூர் கிழார்

36. மாங்குடி கிழார்

37. மாடலூர் கிழார்

38. மாற்றூர் கிழார் மகனார் கொற்றங்கொற்றனார்

39. மிளைகிழான் நல்வேட்டனார்

40. வடமோதங் கிழார்

41. வெள்ளீர்கிழார் மகனார் வெண்பூதியார்

**3.7 சமூகப் பாகுபாடுகள்**

பழங்காலத் தமிழ்ச் சமூகத்தில் பல்வேறு மக்கட் பிரிவுகள் வாழ்ந்ததைப் பற்றிய தெளிவான விவரங்கள் சங்க இலக்கியங்களின் வாயிலாகக் கிடைக்கின்றன. உயர்குடியினர் எனப்பட்டோர் குழு ஒருபுறம், இனக்குழு வாழ்வின் எச்சங்களுடன் வாழ்ந்த திணைசார் மக்கள் ஒரு புறம், அவற்றிலும் இழிகுடியினர் என ஒதுக்கப்பட்ட சமூகத்தார் ஒரு புறமென பல்வேறு அடுக்குகள் அக்காலத்தில் நிலவின. இவைகளைப் பார்க்கும் போது சங்ககாலச் சமூகம் பிரிவினைகளில் திளைத்திருந்ததை அறியமுடிகிறது. அதனடிப்படையில் சமூகத்தில் வாழும் மக்கட்கூட்டத்தினைப் பின்வருமாறு வகை செய்யலாம்;



இவ்வாறாக உயர்வர்க்கம் எனத் தங்களை அடையாளப்படுத்திய சமூகம் அக்காலத்தில் காணப்பட்டது. அந்தணர் என்னும் வந்தேரிகள் அரசனுக்குச் சமமானவர்களாகத் தங்களை அடையாளப்படுத்திக் கொண்டனர். இவர்கள் வேள்விகள் செய்பவர்களாகவும், கடவுளர்களோடு நேரடித் தொடர்பு கொள்பவர்களாகவும் தங்களைக் காட்டிக் கொண்டனர். அரசனுக்கு ஆலோசனை கூறவும் செய்தனர். வணிகர் என்போர் வாணிபம் செய்தலை நிர்வகித்தனர். வேளாளர் என்போர் உழுவித்துண்ணும் கிழார் வகைக்குள் அடங்கும் நிலவுடைமையாளர்களாவர். இந்நால்வரும் அக்காலச் சமூகத்தில் ஆதிக்கச் சக்திகளாக விளங்கினர் என்பதனை இலக்கண, இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. இது தவிர மற்றொரு சமூக அடுக்கும் அன்றைய சமூகத்தில் காணப்பட்டது. அதுவே அடித்தட்டுச் சமூகமாகும். அதனைப் பின்வருமாறு வகை செய்யலாம்.




இனக்குழு மக்களின் சீறூர்ச் சமூகம் வீழ்ந்த பின்பு அச்சமூகம் கொண்டிருந்த ஏற்றத்தாழ்வற்ற கூட்டுச் சமூக இனக்குழு வாழ்வும், சமூக ஒழுங்கும் மறைந்தது. அதன் பின்பு எழுந்த உடைமைச் சமூகத்தின் ஆதிக்கத்தால்

சிற்றூர்களில் பிரிவினைகள் விதைக்கப்பட்டன. அதன் வளர்ச்சி குலங்கள், குடிகள், வர்க்கங்கள் எனும் அமைப்பைக் கொணர்ந்தது. பல்வேறு தொழில் செய்தவர்கள் அந்தந்தத் தொழிலின் பெயரால் அழைக்கப்பட்டனர். அதாவது தச்சன், கொல்லன், பறையன், புலையன், பாணன், துடியன் போன்றோர். இனக் குழுக்களைப் போலவே தொழிற்குழுக்களும் தனித்தனியே வாழ்ந்தன. அவையே காலப்போக்கில் சாதிகளாக மாறின. "சங்க இலக்கியச் சமுதாயம் நிலவுடைமையின் கூறுகள் மேலோங்கிய காலமாக உள்ளது. இனக்குழு x நிலவுடைமை, இன்மை x உடமை, இனக்குழுத் தலைவர் (சீறூர்மன்னர்) x வேந்தர், புன்செய் x நன்செய், பாணர் x புலவர், பொதுத் துய்ப்பு x தனியுடைமை, உழுதுண்போர் x உழுவித்துண்போர், எனும் பல்வேறு இருமை முரண்கள் இடம்பெற்றுள்ள சமுதாயமாகச் சங்கச் சமுதாயம் இருந்துள்ளது"[23] எனும் கருத்து அக்காலச் சமூகத்தின் ஏற்றத்தாழ்வுகள், பாகுபாடுகள் பற்றி விவரிப்பதாக உள்ளது. சமூக ஏற்றத்தாழ்வுகள் என்பது இந்தியச் சமூக அமைப்பில் பல்லாயிரம் ஆண்டுகளாக நிலவி வருகின்றது. இது தோன்றிய காலம் எப்போது என்று வரையறுப்பது ஆய்வாளர்களின் விவாதப் பொருளாகவே இருந்து வருகின்றது. தமிழ்ச் சமூகத்தைப் பொருத்தமட்டில் தொழில் பிரிவினையே சமூக ஏற்றத்தாழ்வுக்கு வழிவகுத்தது என்றும், தொல்காப்பியர் கால நால்வர்ணப் பகுப்பே பின்னாளில் அதற்குக் காரணமானது என்றும் பல கருத்துக்கள் சமூகவியல் மற்றும் மானுடவியல் ஆய்வாளர்களால் முன் வைக்கப்படுகின்றன.

### 3.7.1 குடி - குலம்

குலம் எனும் சொல்லுக்கு, 'குடி, இனம், கூட்டம்' என்ற பொருள்களையும்; குடி என்ற சொல்லுக்கு, குடியிருப்போன், ஆட்சிக்குட்பட்டோர், குடும்பம், குடிமக்கள், குலம்' என்ற பொருள் விளக்கங்களையும் கழக அகராதி தருகின்றது.

"ஊர்ப்பொதுப் பெயரும் புருவமு மன்றிக்

குலமுங்கோத் திரமுங் குடியென்றாகும்"[24]

குடி என்ற சொல்லுக்குப் பொருளாக; ஊர்ப்பொது, குலம், கோத்திரம் என்னும் விளக்கங்கள் பிங்கலநிகண்டினில் குறிக்கப்பட்டுள்ளன. அதேபோல்,

"இரேவதி நாளும் வருணமும் விலங்கின்

கூட்டமுங் கோயிலுங் குலமென்றாகும்"[25]

சாதி, விலங்குகள் கூட்டம் இவைகளெல்லாம் குலம் என்னும் சொல்லுக்கான பொருளாகக் குறிப்பிடப்பட்டுகின்றன. இவைபோன்ற விளக்கங்களை வைத்து நோக்கும் போது குடி, குலம் எனும் சொற்கள் மக்கள் கூட்டத்தினையும், மானிடப் பிரிவுகளையும் குறிக்கும் சொற்கள் என்பது தெளிவாகின்றது. "சங்க இலக்கியங்களில் குடி என்பது பொதுவாக இரத்த உறவு கொண்ட தயாதிகளைக் கொண்ட குடும்பங்களின் தொகுதியைக் குறிப்பதாயிருந்தது. குடிக்கு இணைச் சொற்களாக இல், இடம், திணை, குலம் போன்றவை காணப்படுகின்றன. குடி என்ற சொல் வடமொழியில் கோத்ரம் என்ற சொல்லுடன் குறிப்பிடப்பட்டு, கோத்ரம் தோன்றிய வரலாறும், குடி தோன்றிய வரலாறும் ஒரு தன்மைத்தானவை என்று கருதப்படுகின்றது"[26] என்னும் இக்கருத்தின் மூலம் குலம், குடி என்ற சொற்கள் மக்கள் கூட்டத்தைக் குறிப்பன என்பது தெளிவாகின்றது. "பொதுவாகக் 'குடி' என்பது இரத்த உறவுள்ள கூட்டத்தினரைக் குறிப்பதாகும்"[27] இனக்குழுக்கள் வெவ்வேறு இடங்களில் குடியமர்ந்த போதே இவ்வழக்கு உருவாகியிருக்கக் கூடும். குடி எனும் சொல்லாட்சி குறித்துச் சங்க இலக்கியங்களும் இவ்வாறே பொருளுணர்த்துகின்றன.

"நடுகல் பிறங்கிய உவல்இடு பறந்தலை

புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்

குடியும் மன்னும் தானே" (புறம் 314:3-5)

என்னும் சங்க இலக்கியப் பாடல், நடுகற்கள் மிகுந்தும், சருகுகள் வீழ்ந்து காணப்படுவதும், நெல்லி மரங்கள் சூழ்ந்து காணப்படும் பாழ்பட்ட அந்நிலப் பகுதியினை உடைய சிற்றூரில் வாழும் குடிமக்களுள் ஒருவனாக சீறூர்த்தலைவன் உள்ளான் எனக் குறிப்பதாக அமைந்த இப்பாடலில் 'சீறூர்க் குடியும்' என்ற சொல்லுக்குச் சிற்றூர் மக்கள் என்ற பொருளினை உரையாசிரியர்கள் குறிக்கின்றனர். எனவே குடி என்பது அக்காலத்தில் மக்கட் கூட்டத்தைக் குறித்தது எனலாம். 'குடி' எனும் சொல் சங்க இலக்கியங்களில் குழு, ஊர், குடும்பம், வீடு என்ற பொருள்களைக் குறிப்பதைக் காணமுடிகிறது. சங்க இலக்கியங்களான பதினெட்டு நூல்களிலும் சேர்த்து 258 இடங்களில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது. "குடி என்பது சமுதாயத்தின் அடிப்படைக் கூறு. குடி என்பது 'தொல்குடி' (Lineage) என அழைக்கப்படுவதாகும். அது தானே தன்னை ஆட்சி செய்துகொள்ளும் தன்மையுடையது"[28] என்னும் விளக்கம் இங்கு பொருத்தமுடையதாகிறது. திருவள்ளுவர் தம் திருக்குறளில் குடிமை, குடிசெயல்வகை எனும் அதிகாரங்களில் குடி எனும் சொல்லாட்சிக்குக் குலம் என்றும் மக்கள் குலம் (குடிமக்கள்) என்றும் பொருள் தரும் வண்ணம் எடுத்தாண்டுள்ளார் என்பது நோக்கத்தக்கது. CITIZEN என்னும் ஆங்கிலச் சொல்லுக்கான பொருளாகக் குடிமகன், குடிமக்கள் என்ற பொருளை அகராதிகள் சுட்டுகின்றன.

> "கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
> முற்றோன்றி மூத்த குடி"[29]

என்று தமிழினத்தின் தொன்மையினைக் குறிப்பிட முனைந்த பண்டைய இலக்கணத்தார் குடி என்ற சொல்லினை மக்கள் தொகுதியினைக் குறிக்க பயன்படுத்தியுள்ளமை புலப்படுகின்றது. "இரத்த உறவுடைய குடும்பங்கள் அடுத்தடுத்து இருந்தன. இவை அனைத்தும் குடிகள் என அழைக்கப்பட்டன. குடிகள் அனைத்திற்கும் தனிப்பண்புகள் இருந்தன. அவற்றைக் குடிமை

அல்லது குடிப்பிறப்பு என்று குறித்தனர்"[30] என்னும் இக்கருத்தினடிப்படையில் பார்க்கும்போது குடி என்ற சொல் ஓர் ஒற்றுமையின் அடிப்படையில் சேர்ந்து வாழும் மக்கள் குழுவினைக் குறிப்பதென்பது தெளிவாகிறது. ஆதிச்சமூகத்தில் குழு வாழ்க்கை மேற்கொண்டோர் ஒரு தலைவனைத் தம் குழுவுக்கான அடையாளமாக முன்னிலைப்படுத்தினர். அவ்வாறு விளங்கிய தலைவன் ஏதேனும் ஒரு வகையில் மற்றவர்களை விட மேலானவனாக விளங்கினான். பின்னாளில் அவனை அடியொற்றி வந்த சந்ததியினர் தங்களை இன்ன குடியைச் சார்ந்தவன், இக்குலத்தோர் என அடையாளப் படுத்திக் கொண்டனர். அவ்வித அடையாளங்கள் பொதுவாக, அவர்கள் சார்ந்த தலைவன் பெயரிலோ, அவர்கள் வழிபட்ட குலக்குறியாலோ, தெய்வத்தின் பெயரிலோ அமைந்திருந்ததை அறியலாம். (எ.கா: ஆயர் குடி, வேட்டுவர் குடி, ஆவியர் குலம்...)

### 3.7.2 குலக்குழுக்களும் பிரிவினைகளும்

இந்தியத் துணைக்கண்டத்தில் சாதி தொழிலின் அடிப்படையில் தோன்றி பின்னர் பிறப்படிப்படையில் மாற்றம் பெற்றது. தமிழரிடையே சாதி என்பது, வழிவழியாய் தொழில் அடிப்படையில் (பரம்பரைத் தொழில்) இருந்த குழுக்களும் கூட்டங்களும் நாளடைவில், பிறப்பின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட சமூக அமைப்பாக மாறியது. சாதிகளின் படிமுறை ஏற்றத்தாழ்வுகள் தமிழரிடம் தொன்றுதொட்டு இருந்ததல்ல. தொடக்கத்தில் மனித இனங்கள் சிறுசிறு குழுக்களாகச் சேர்ந்து வாழ்ந்தனர். இயற்கைச் சக்திகள், அவற்றின் சீற்றங்கள், காட்டு விலங்குகள் மீது ஏற்பட்ட அச்சத்தின் காரணமாகவும் குழுவாழ்க்கை அமைந்திருக்கலாம். குலக்குழு (band society) என்பது மிகவும் எளிமையான மனித சமூக வடிவமாகும்.

ஓர் இனக்குழு என்பது பொதுவாக, கூட்டுக் குடும்பம் போன்ற தன்மையுடைய உறவுமுறை கொண்ட பல உறுப்பினர்களை உள்ளடக்கியிருக்கும். "இன்றைக்கு 12,000 ஆண்டுகளுக்கு முன்னர் மனிதர்கள்

சிறுசிறு குலக்குழுக்களாக (Bands) அமைந்து வாழ்ந்தனர். இக்குலக்குழுக்கள் மண உறவாலும் உறவுமுறையாலும் பிணைக்கப்பட்ட சில குடும்பங்களைக் கொண்டனவாக இருந்தன. ஒவ்வொரு குலக்குழுவும் தன்னளவில் தற்சார்புடையதாகவும் தனித்துச் செயற்படக்கூடியதாவும் (Autonomous) விளங்கியது"[31] குலக் குழுக்கள் ஒழுங்குமுறையால் பிணைக்கப்பட்ட தனித் தலைமைத்துவம் கொண்டவை. குலக்குழுவின் முதிர்ந்த உறுப்பினர்களின் வழிகாட்டல்களும், ஆலோசனைகளும் அக்குழுவினை வழிநடத்தின. ஆதிகாலக் குலக்குழுச் சமூகங்கள் வழக்கமாக உணவு சேகரித்தலுக்காகவும், வேட்டை மேற்கொள்ளவும் ஒன்றுகூடினர். இக்கூட்டு வாழ்க்கைப் பல வழிகளில் பாதுகாப்பானதாக அமைந்ததால் அது தொடர்ந்தது. நாளடைவில் கூட்டுச் சமூகமாகவும் மாறியது. சங்ககாலத் தமிழகத்தில் ஐந்திணைகளில் வாழ்ந்த மாந்தருள் பல்வேறு இனக்குழுக்கள் காணப்பட்டன. "பரதவர், கோசர், கடம்பர், ஆவியர், ஓவியர், வேளிர், ஆயர், ஆண்டார், கள்வர், மறவர், புலையர், கடம்பர், மலையர், கடவர், வில்லோர், கொங்கர், குறவர் போன்றோர் குறிப்பிடத்தக்க இனக்குழுக்களாவர். இவ்வினக்குழுக்களமைந்த இடங்களே பின்னர் குடிகளாக வளர்ச்சி பெற்றன"[32] எனும் கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும். கூட்டுச்சமுகத்தின் படிநிலையாக்கமே இனக்குழுக்கள் தோன்றக் காரணமாயின. அத்தகைய இனக்குழுக்கள் தம்மை வெவ்வேறு 'குடிகள்' என அடையாளப்படுத்திக் கொண்டன.

இன்றைய தமிழகத்தில் காணப்படுகின்ற எண்ணற்ற சாதிகள் போல், அன்று குலங்கள் என்ற அடையாளத்துடன் மக்கள் இனங்கள் வாழ்ந்துவந்தனர். "தமிழகத்தில் சங்க காலத்திலேயே பல குலங்கள் தொழிலுக்கு ஏற்பத் தோன்றியிருந்தன. அளவர், இடையர், இயவர், உமணர், உழவர், எயினர், கடம்பர், கம்மியர், களமர், கிளைஞர், குயவர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், துடியர், பரதவர், பறையர், பாணர், புலையர், பொருநர், மழவர், வடுகர், வண்ணார், வணிகர், வேடர் எனப் பல குலங்கள்

தோன்றியிருந்தன"[33] இச்செய்தியின் வாயிலாக அக்காலகட்டத்தில் காணப்பட்ட குலங்கள் குறித்து நன்குணர முடிகிறது. அவ்வகையில் பார்க்கும் போது, ஐந்திணைச் சமூகத்தாரைக் குடிகள் எனும் சொல்லாடலில் அழைப்பது சாலச் சிறந்ததாகின்றது. இக்குலங்களைத் திணை வாரியாகவும் அன்று வகைப்படுத்தியுள்ளதனை இலக்கண நூல்களும், சங்க இலக்கியங்களும் சான்றுபகர்கின்றன. இலக்கண நூல்கள் வகுத்துக் கூறுகின்ற கருப்பொருள் பகுப்பின் வாயிலாக பண்டைத் தமிழகத்தினில் வாழ்ந்த திணைசார் குழுக்களைக் குறித்து அறிந்துகொள்ள இயலும். ஐவகை நிலங்களில் திணைக்கு ஒன்றாக ஐந்து குடிகள் மட்டுமே ஆதியில் இருந்திருக்கக் கூடும். பிற்காலங்களில் அவை கிளைத்து எண்ணிக்கையில் அதிகரித்து வளர்ந்தன எனலாம். மனித சமூகப் பரிணாம வளர்ச்சியே ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு இட்டுச் செல்கின்றது. இதர உரியினங்களோடு மனிதன் வேறுபடும் காரணிகளில் ஒன்றே சமூகமயப் படிநிலை வளர்ச்சியாகும். இனக்குழு வாழ்வில் வேற்றுமையும் பிரிவினையும் தோன்றவில்லை. பொதுவாகப் பார்க்கும் போது, அன்று முதல் இன்று வரை இலக்கியங்கள் புனையத் தேவையான பாடுபொருள்கள் சமூகத்திலிருந்துதான் கிடைக்கின்றன.

இலக்கியம் உருவாவதற்கான களம் சமூகமே. அக்காலப் புலவர்கள் தாம் வாழ்ந்த சமூகத்தில், தம்மைப் பாதித்த நிகழ்வுகளையும், தாம் கண்டவற்றையும், கேட்டவற்றையுமே பாடல்களாக இயற்றினர். அவ்வகையில் சங்ககாலச் சமூக நிகழ்வுகளைத் தாம் இயற்றிய செய்யுள்களில் நேரடியாகவும் மறைமுகமாகவும் குறிப்பிட்டனர். அரசர்களைப் புகழ்ந்த போதும் அவர்களது ஆட்சியில் இருந்த சமூகம் குறித்து புகழ்ந்தும், இடித்துரைத்தும் கூறத் தவறவில்லை. அதனடிப்படையில் பார்க்கும் போது அக்காலச் சமூகம் ஏற்றத்தாழ்வுகள் மிகுந்த வர்க்க சமூகமாக இருந்ததை நம்மால் உணர முடிகிறது.

சிற்றூர்ச் சமூகம் பல நல்ல சமூகக் கூறுகளை உள்ளடக்கியது என்று கூறும் அதே வேளையில் சமூகப் பாகுபாடுகள் நிறைந்த சமூகமும் இங்குதான் உற்பத்தியாயின என்பது இன்றைய சிற்றூர்களைப் பார்க்கும் போது அறிய முடிகிறது. இப்பாகுபாடுகள் தாமாக உருவானவை அல்ல. வந்தேரிக் கூட்டங்கள் தம் சூழ்ச்சியால் புகுத்தப்பட்டவையே. இருபினும் சாதிகள் பற்றிய எண்ணங்கள் ஆழமாக வேரூன்றியது இங்கேதான் என எண்ணும் அளவிற்கு அது விரவிக் காணப்படுவது சிற்றூர்களில்தான். இது சங்கால ஏற்றத்தாழ்வுகளின் தொடர்ச்சியே எனக் கருத வேண்டியுள்ளது. இன்று நிலவும் சாதிய சமூகம் சங்காலத்தில் உருப்பெற்றது என்பதை நிறுவத் தேவையான தரவுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. "குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலங்களில் வாழ்ந்த குறவர், இடையர், உழவர், பரதவர், எயினர் ஆகியோர் தொழிலில் சிறந்து விளங்கினர். அவர்கள் செய்த தச்சுத் தொழில், நெசவுத் தொழில், துணி துவைத்தல், குயவுத் தொழில், அணிகலன்கள் செய்யும் தொழில் ஆகிய தொழில்கள் சங்கச் சமூகப் பாகுபாட்டில் காணப்படுகின்றன"[34] என்ற கருத்து அக்காலத்து ஐந்திணைகளில் காணப்பட்ட மக்கட் பிரிவுகளை விவரிக்கின்றது. மனிதர்களின் சமூகப் பரிணாம வளர்ச்சியே ஒருநிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு அவர்களைப் பண்படுத்தி இட்டுச் செல்கின்றது. இதர உயிரினங்களோடு மனிதன் வேறுபடும் காரணிகளில் ஒன்றே சமூகமயப் படிநிலை வளர்ச்சியாகும். இனக்குழு வாழ்வில் வேற்றுமையும் பிரிவினையும் தோன்றவில்லை. அதற்கான அவசியமும் அங்கு நிலவவில்லை. ஏனென்றால் பொதுவுடைமைச் சமூகமாக அது இருந்தது. உணவும், நிலமும் பொதுவானதாக இருந்தது. அதுவே இனக்குழு முற்றிலும் அழிந்து நிலவுடைமைச் சமூகம் தோன்றிய பின்பு நிலங்கள் கூறிடப்பட்டன. தரநிலைச் சமூகம் சீர்குழைக்கப்பட்டு, எல்லைகளும் ஆட்சியும் விரிவு செய்யப்பட்ட பின்னர் ஆள்பவனுக்குக் கீழ் குடிகள் என்ற அதிகார முறை உருவானது. இந்நிலை இனக்குழு வாழ்வின் இறுதிக்

கட்டத்தில் வாழ்ந்த சீறூர் மன்னர் சமூகத்தில் காணப்படவில்லை. உற்பத்தியிலும், உற்பத்திக் கருவிகளிலும் ஏற்பட்ட முன்னேற்றத்தால் சமூகமாற்றம் ஓசையின்றி நடைபெற்றது. சுயநல அடிப்படையிலான உற்பத்திப் பெருக்கத்திற்காகச் சமூகத்தில் சக மனிதன் அடிமையாக்கப்பட்டான். கால ஓட்டத்தில் இனக்குழுவாக வாழ்ந்த கூட்டுச் சமூகத்தில் இருந்து முன்னேறியதான உடைமைச் சமூகம் தோன்றியது. இச்சமூகத்தை வர்க்கச் சமூகம் எனச் சமூகவியலாளர்கள் குறிப்பிடுகின்றனர். "வர்க்கம் (Class) என்பது ஒத்த சமுதாயப் பொருளாதாரத் தகுதியைக் கொண்ட ஒரு குழுவாகும்.

ஏறத்தாழ 2000ஆண்டுகளுக்கு முன்னரே அரிஸ்டாட்டில், சமுதாயத்தில் மிகுந்த செல்வர்கள், மிகுந்த வறுமையானவர்கள், இவர்கள் இருவருக்கும் இடைப்பட்டவர்கள் என மூன்று வகையான வர்க்கங்கள் நிலவும் எனக் கூறினார். ஆனால் தொழிலாளர்கள் (Proletariat), முதலாளிகள் (Bourgeoisie) என இரண்டு வர்க்கங்களே சமுதாயத்தில் நிலவும் என்பார் கார்ல் மார்க்ஸ்"[35] இக்கூற்று வர்க்கப் பிரிவினைகளான ஏழை, பணக்காரன் எனும் பாகுபாடு 2000 ஆண்டுகட்கு முன்னரே இவ்வுலகம் முழுதும் நிலவிற்று என்பதை அறிய ஏதுவாகிறது. இந்த ஏற்ற இறக்கமே ஆதிக்க உணர்வினை ஊட்டியது. அதனால் உயர்வு தாழ்வு பார்க்கும் நிலை உருவானது. தமிழக வரலாற்றில் மருத நிலத்தின் பொருளாதார வளமும் உழைப்புச் சுரண்டலும் வர்க்கங்களும், வர்க்க முரண்பாடுகளும் ஏற்பட வழிவகுத்தன எனலாம். உழைக்கும் சமூகம், அவ்வுழைப்பினால் பயன்பெற்ற சமூகம் எனச் சமூகம் இரண்டாகப் பிளவுற்றது. இலக்கியங்களில் காணலாகும் 'மேலோன்', 'கீழோன்' 'உயர்ந்தோன்', தாழ்ந்தோன்' எனும் சொல்வழக்குகள் அதனை உறுதிசெய்வதாக உள்ளன.

"மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க்காகிய காலமும் உண்டே" (தொல்,பொருள்,கற்பு:3)
"உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான" (தொல், அகத்:31)

"உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான" (தொல், அகத்:33)

என்னும் தொல்காப்பியர் கூற்றுகள் இதனை மெய்ப்பிப்பதாக அமைகின்றன. உழைக்கும் சமூகத்தில் அவர்களின் உழைப்பால் உற்பத்தி மிகுதியாகப் பெருகினாலும் அதன் பயன் அவர்களைச் சென்றடையவில்லை. இவர்களின் கடின உழைப்பால் தான் அரண்மனைகளும்,அகழிகளும், வளமனைகளும், கோட்டைகளும், கொத்தளங்களும் எழுப்பப்பட்டன. 'காடு கொன்று நாடாக்கி குளந்தொட்டு வளம் பெருக்கும்' பணிகளைக் கீழ்த்தட்டு மக்களே செய்தனர். ஆனால் ஆதிக்க வர்க்கத்தினர் அவர்களைச் சுரண்டி வாழ்ந்தனர். உழைக்கும் சமூகத்தார் குடிசைகளில் தான் வாழ்ந்தனர். அக்குடிசைகளுமே ஊருக்கு ஒதுக்குப் புறமான இடங்களில் அமைத்துக் கொள்ளும்படி நிர்பந்திக்கப்பட்டனர்.

'பறழ்பன்றி பல கோழி உறை கிணற்றுப் புறச்சேரி' என்று பட்டினப் பாலை இது பற்றிக் கூறுகிறது. 'குட்டிகளையுடைய பன்றிகளையும் பல சாதியாகிய கோழிகளையும் பாழடைந்த கிணறுகளையும் உடைய இழிகுலத்தோர் இருக்கும் தெருக்கள்' என்று நச்சினார்க்கினியர் இதற்கு உரை கூறுகின்றார். ஊருக்கு வெளியே, பன்றிகள், கோழிகள், ஆடுகள் ஆகியவை சுற்றித்திரியும் பாழ்பட்ட கிணறுகளும், குடிசைகளும் நிறைந்த சேரியில் வாழும்படி ஒதுக்கி வைத்தனர். அதே நேரத்தில் பார்ப்பனர்கள் வாழ்ந்த பகுதி கோழியும், பன்றியும், நாயும் நுழையாத, மெழுகப்பட்ட தூய்மையான வீடுகள் நிறைந்த, வேதம் ஓதும் கிளிகள் உள்ள இடமாகக் குறிப்பிடப்படுகிறது. ஆக, குலங்கள் என அடையாளப்படுத்திய நிலையே மாற்றம் பெற்று, பின்பு அது சாதி எனும் வரைமுறைகள் வகுத்த நிறுவனமாகத் தோற்றம் பெற்றது. இதனால் பூர்வீக ஆதிகுடிகளான இனங்கள் சில ஆதிக்க வர்க்கத்தினரால் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர். இவ்வாறு இழிசினர் என ஒதுக்கப்பட்ட மக்களே, தமிழ் மண்ணின் பூர்வீக ஆதிகுடிகளாக வாழ்ந்தவர்கள் என்பதையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. அதனை,

“துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று

இந்நான்கு அல்லது குடியும் இல்லை…” (புறம் 335:7-8)

மிகச் செல்வாக்காக இருந்ததாகக் கருதப்படும் நான்கு குடிகள் துடியன், பாணன், பறையன், கடம்பன் என்பவையாகும். இந்தக் குடிகளை விடச் சிறந்த குடிகள் வேறு இல என்று அவர்களின் சிறப்பைப் பாராட்டி மாங்குடிக் கிழார் பாடியுள்ளார். பண்டைய காலத்தில் மனித இனம் சிறிய குழுக்களாக அமைந்திருந்தது. உணவுக்குப் பஞ்சம் ஏற்பட்ட காலங்களில் மனித இனம் ஓரிடத்திலேயே நிலைத்து நிற்காமல் உணவு கிடைக்கும் பல்வேறு இடங்களை நோக்கி அலைந்து கொண்டிருந்தது. உணவுக்குரிய இடம் கண்டுபிடிக்கப்பட்டப் பின்னர் அவ்விடத்துக்கு வரும் புதிய குழுக்களின் ஊடுருவலைப் பிறிதொரு கூட்டம் தடுத்து நிறுத்தியது. இந்த உறவு, இதனடிப்படையில் நிலவிய பொதுமை உணர்வுப் பகிர்வு ஆகியன கூட்டங்கள் அல்லது குழுக்களாக இருந்த அமைப்புகளைக் குலக் குழுக்களாக மாற்றம் பெறச் செய்துள்ளன. அதாவது, கூட்டங்கள் அல்லது குழுக்கள் ஒவ்வொன்றும் குலத் தலைமை, தனிக் குல மரபுச் சின்னம், பொது மண உறவில் தடை ஆகியவற்றின் மூலமாக ஒன்றையொன்று வேறுபடுத்திக் கொண்டன. குலக் குழுக்களிடம் காணப்பட்ட இத்தகைய சிறுசிறு வேறுபாடுகளையே சாதிப்பிரிவினைகள் தோன்றுவதற்குரிய அடிப்படையாக அமைத்துக் கொள்ளலாம்.

ஆதிகால மனிதன் அல்லது குழுக்கள் உட்கொண்ட உணவுப் பொருள்களே குழுக்களைப் பிரிக்கும் குலச் சின்னங்களாகவும் அமைந்தன. இன்று ஒவ்வொரு சாதியும் அகமண உட்சாதிகளாகப் பிரிந்து ஒவ்வொன்றுக்குள்ளும் கரை, கூட்டம், வகையரா, பரம்பரை, வம்சம், குலம் என்று சொல்லக்கூடிய பல புறமணக் குழுக்கள் உள்ளன. இந்தியா முழுவதிலும் ஒவ்வொரு சாதியும் பல கால்வழிக் குழுக்களாகப் (வம்சம்) பிரிகின்றன. இரத்த உறவையும், சந்ததியின் தொடர்ச்சியையும் குறிக்கும் இக்குழுக்கள் குலம், கோத்திரம், கூட்டம், பரம்பரை, வகையரா, வம்சாவளி

போன்ற பல சொற்களால் குறிக்கப்படுகின்றன. சங்ககாலப் புலவர் குறிப்பிடும் நான்கு குடிகள் பூர்வகுடி மக்கள் என்பது மேற்கண்ட பாடல் வாயிலாகப் புலனாகின்றது. இதன் மூலமாக இக்குடிகள் யாவும் ஆதிகுடிகளாகச் சங்ககாலச் சிற்றூர்களில் வசித்தவர்கள் என்பதனை அறியமுடிகிறது. தொழில் அடிப்படையில் குழுக்களாக வாழ்ந்த மக்கள் யாவரும், ஆரியர்களின் கலாச்சாரப் படையெடுப்புக்குப் பின்னர் அடிமைகளாக மாற்றப்பட்டனர். "ஆங்கிலேயர் ஆட்சி தொடங்குமுன் பறையர்கள் அனைவரும் மேல்சாதியினரின் அடிமைகளாய் இருந்தனர். அவர்கள் மட்டுமின்றி, உழவுத் தொழிலில் வயலில் இறங்கி உழைக்கும் கீழ்சாதியினர் அனைவரும் அடிமைகளாகவே இருந்தனர்"[36] உழைக்கும் கலைஞர்கள், பாடுபடும் கூலிகளான ஆதிகுடிகள் பிறப்பால் இழிகுலத்தோராக்கப்பட்டுப் பிற்காலத்தில் அடிமைகளின் பிள்ளைகள் அடிமைகளாகவே இருக்குமாறு செய்யப்பட்டனர். இது காலம் காலமாக வலுப்பெற்று இன்றுவரை தொடர்கின்றது. உழைக்கும் மக்களை அடிமையாக்கி ஒடுக்கப்பட்ட செய்தியைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகவே கூறுகின்றன. சங்க இலக்கியங்களில் 'இழிசினன்' எனும் சொல் அக்காலத்தைய சமூகப் பாகுபாட்டை எடுத்துரைப்பதாக உள்ளது.

"கட்டில் நிணக்கும் இழிசினன் கையது..." (புறம் 82:3)

தொழில் புரிவோர் யாவரும் தாழ்ந்தோர் எனும் குறுகிய மனப்பான்மை அக்காலத்தில் இருந்ததை உணர முடிகிறது. மேற்கண்ட பாடலில் கட்டில் பின்னும் தொழிலினை மேற்கொள்வோன் இழிசினன் எனச் சுட்டப்படுவது இக்கருத்தினை உறுதி செய்கிறது. அதேபோல,

"பூக்காள் இன்று என்று அறையும்
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே?" (புறம் 289:9-10)

முரசு அறையும் பாணன் இழிசினன் என்று குறிப்பிடப்படுவதை இங்கு காணலாம். அரசுச் செய்திகளை அறிவிக்கும் பாணன், தண்ணுமை எனும்

கருவியை முழக்கி அச்செய்தியைத் தெரிவிப்பவனாவான். அத்தகைய தொழில் புரிந்த அச்சமூகத்தாரை இழிசினன் என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

> "துடி எறியும் புலைய !
> எறி கோல் கொள்ளும் இழிசின!
> கால மாரியின் அம்பு தைப்பினும்
> வயற் கெண்டையின் வேல் பிறழினும்
> பொலம் புனை ஓடை அண்ணல் யானை
> இலங்கு வால் மருப்பின் நுதி மடுத்து ஊன்றினும்
> ஓடல் செல்லாப் பீடுடையாளர்..." (புறம் 287:1-7)

துடிப்பறை கொட்டும் புலையர் எனும் சமூகத்தாரும், பறை எனும் கருவியைத் தடிகொண்டு முழக்கும் பறையர்கள் சமூகத்தாரும் அக்காலச் சமூகத்தில் வாழ்ந்த இனக்குழு மக்களாவர். போர்க் காலங்களில் படைகள் முன் சென்று பறைகொட்டி போரினை அறிவிப்பவராகவும்; அரசுச் செய்திகளை தெரிவிப்பவர்களாகவும், சமயத்தில் போர் வீரர்களாகவும் தொழில் செய்யப் பணிக்கப்பட்டனர். அப்படிப்பட்ட இவர்களை இழிசினன் என்றே ஒரு சாரர் பாவித்தனர். துடிகொட்டும் புலையனே, குறுந்தடியைக் கையில் கொண்டு பறையினை முழங்கும் பறையனே! கார்கால மழைபோல் அம்புகள் உடலில் தைத்தாலும் கெண்டைமீன் போன்ற வேல்கள் வந்து பாயினும், யானைக்கொம்புகள் குத்தினாலும் அதற்காக அஞ்சி புறமுதுகிட்டு ஓடாத வீரமிக்கவர்கள் நீங்கள்; வளம் மிக்க மருத நில ஊர்களைப் பெறுவதை விட போர்க்களத்தில் வீர மரணம் அடைந்தால் சொர்க்க உலகம் சென்று தெய்வமகளிரோடு மகிழலாம் என்று பாடல் பொருளுணர்த்துகிறது. இதன்மூலம் இங்கு சுட்டப்பட்ட குடிகள் வீரம் மிக்கவர்கள், கலைஞர்கள் என்பது தெளிவாகிறது. மருதநில ஊர்களைப் பெறுவதை விட வீரமரணம் அடைவது மேல் என்றுரைப்பதன் மூலம் இக்குடியினர் போர்த்தொழிலில் ஈடுபடவைத்து ஏய்க்கப்பட்டனரோ என எண்ண வேண்டியுள்ளது.

போர்க்காலங்களில் வேந்தர்கள் தம் வெற்றிக்கு மட்டும் இவர்களைப் பயன்படுத்தியதாகத் தெரிகிறது.

"மரை பிரித்து உண்ட நெல்லி வேலி
பரலுடை முன்றில் அம் குடிச் சீறூர்
எல் அடிப்படுத்த கல்லாக் காட்சி
வில் உழுது உண்மார் நாப்பண் ஒல்லென
இழி பிறப்பாளன் கருங்கை சிவப்ப
வலி துரந்து சிலைக்கும் வன் கண் கடுந்துடி..." (புறம் 170:1-6)

இப்பாடலில் சிற்றூர் குறித்துச் சித்தரிக்கப்படுகிறது. நெல்லி மரங்களால் ஆன வேலியையும், அதன் விதை பரவிய முற்றமும் கொண்ட அழகிய பல குடியிருப்புகளையும் உடையது சிற்றூர். அச்சிற்றூரில் கல்வியற்ற உழுதுண்போராகிய வேட்டுவர்களின் நடுவே, தன் கை சிவக்க (வலிக்க) இழிபிறப்பினை உடைய புலையன் (பறையர்களில் ஒரு பிரிவினர்) துடியினை முழக்குவான் எனப் பாடல் அமைகிறது. அக்காலத்தில் புலையர்களுக்கு கல்வி மறுக்கப்பட்டது என்பதும் இப்பாடல் வழியே புலனாகிறது. அவர்கள் சிற்றூர்களில் வாழ்ந்தவர்கள், கைவலிக்க பறைகொட்டி தொழில் செய்தனர் என்பதும், அவர்களை இழிபிறப்பினன் என அக்காலச் சமூகத்தில் குறிப்பிட்டனர் என்பதையும் அறியமுடிகிறது. இது உழைப்புச் சுரண்டல் மற்றும் பாரபட்சமான சமூகம்தான் சங்ககாலச் சமூகம் என்பதை விளக்குவதாக உள்ளது. உழைக்கும் தொழிலாளர்கள் கல்வி கற்க அக்காலச் சமூகம் அனுமதிக்கவில்லை. தொல்காப்பியரும் "ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன" (தொல்,பொருள்,அகத்:362) என்பதன் மூலம், கல்வி கற்பது உயர்ந்தோர்க்கு உரியது என விவரிக்கின்றார். தவிர அக்காலத்தில் உழைக்கும் மக்கள் மேல்தட்டுக் குடியினரால் பணிக்கப்பட்ட அனைத்து வேலைகளையும் செய்தனர். நாளடைவில் அவ்வேலைப் பிரிவுகளை வைத்தே, சமூகப் பிரிவுகளைப் பகுத்து பிரித்தாளும் சூழ்ச்சியினை ஆதிக்க வர்க்கங்கள்

கச்சிதமாகச் செய்தன. கீழ்த்தட்டு உழைக்கும் மக்கள் செய்து வந்த தொழில்கள் குறித்து சங்க இலக்கியங்கள் கூறும் செய்திகள் பின்வருமாறு,

"கள்ளி வேய்ந்த முள்ளிஅம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பு இலாஅ அவிப்புழுக்கல்
கைகொண்டு பிறக்கு நோக்காது
இழிபிறப்பினோன் ஈயப்பெற்று..." (புறம் 363:10-14)

"கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளில் நிறுத்த பின்றை கள்ளொடு
புல்லகத்து இட்டசில்அவில் வல்சி
புலையன் ஏவ புல்மேல் அமர்ந்து உண்டு
அழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த்து இராஅர் பருத்து உண்டோரே..." (புறம் 360:16-21)

அக்காலத்தில் ஈமக் காரியம் எனப்படும் இறப்புச் சடங்குகளை மேற்கொள்ளவும், இறந்த உடல்களை அப்புறப்படுத்தவும் சமூகத்தில் ஒருசாரரை வைத்திருந்தனர். அவர்களை இழிசினர் என்ற வட்டத்திற்குள் அடக்கினர். அதாவது, மேல்தட்டு மக்களுக்கென சமூகக் காரியங்களை மேற்கொள்ளவும், உழைக்கவும் பணிக்கப்பட்டவர்கள் இழிசினர் எனப்பட்டனர். அதனை மேற்கண்ட பாடல்கள் விவரிக்கின்றன. மேலும் இவை புற வாழ்க்கை நிகழ்வுகளை உரைக்கும் புறப்பாடல்கள் வாயிலாக வெளிப்படுவது அதன் உண்மைத் தன்மைக்கு வலுசேர்க்கின்றது எனலாம். 'சங்ககாலச் சமூகம் ஏற்றத் தாழ்வுகளற்ற பொற்காலம்' என்றுரைப்பவர்கள் கவனிக்கத்தக்கதாக மேற்கண்ட தொடர்கள் அமைகின்றன. "பிறப்புப் பற்றிய குலப்பிரிவு தமிழ்நாட்டில் ஏற்பட்டதிலிருந்து இங்கு நிலைமை மாறிவிட்டது. தமிழருக்குள் குலப்பற்று மிகுந்து இன உணர்ச்சி (National Feeling) குன்றிப்போயிற்று. தீண்டாமையால் தாக்குண்ட தமிழினம் சீர்குழைந்து சின்னாபின்னப்பட்டுத் தாழ்வடைந்து

போய்விட்டது"[37] எனும் கருத்தின் அடிப்படையில் பார்க்கும்போது ஆதிச்சமூகம் அதாவது சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் அழிவுற்ற பின் அதற்குரிய அடையாளங்கள் மறைந்தன. ஆதிக்கச் சக்திகளின் கை ஓங்கியதால் அங்கு வாழ்ந்த உழைக்கும் எளிய மக்கள் ஒடுக்கப்பட்டனர். அவர்கள் மேட்டுக்குடியினரின் இயந்திரமாகப் பாவிக்கப்பட்டனர். அதன் தொடர்ச்சியாகப் பிரிவினையினை ஊக்குவித்து வழிவழியாக அதனை வளர்த்து விட்டனர். அதன் தாக்கம் தான் சாதிகளாக உருப்பெற்று ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகள் கடந்த பின்னும் இன்றைய சிற்றூர்களிலும் இப்பாகுபாடுகள் வேரூன்றி வளர்ந்து சமூகத்தினைச் சீரழிக்கின்றது என்பது கண்கூடு.

இன்றைய சமூகம் சாதி என்பதைத் தொழில், பொருளாதார வசதி, இனம் போன்றவற்றின் அடிப்படையிலான சமூக கட்டமைப்பு என்றே விளங்கிக் கொள்கின்றது. இதனை மரபு மற்றும் பிறப்பைக் கொண்டு அடையாளம்கண்டு, பொதுவான வழக்கம் அல்லது சட்டம் மூலம் அந்த அடையாளத்தைச் சமூகம் பாதுகாக்கின்றது. ஆதிக்கம் செலுத்திய வர்க்கத்தினர் தமது ஆளுமைகளைத் தக்கவைக்க புகுத்திய அமைப்பே சாதியாகும். பிரிவினைகள் பொதுவாக உலக அளவில் வெவ்வேறு வடிவங்களில் இருக்கத்தான் செய்தது. அமெரிக்கா, தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் இனம், நிறம் சார்ந்த பாகுபாடுகள் இருந்ததை உலகறியும். முதலாளி, தொழிலாளி என்ற பாகுபாடு பொதுவாக எல்லா நாடுகளிலும் இருந்தது. "சீன, ஜப்பான் நாடுகளில் இன்று கிடைக்கும் தொல்லியல் சான்றுகள் தமிழகத்திற்கும் அந்த நாடுகளுக்கும் நெருங்கிய தொடர்புகள் இருந்ததைச் சுட்டிக்காட்டுகின்றன. ஜப்பான் நாட்டில் நான்கு சமூக அடுக்குகள் இன்றளவும் இருக்கின்றன; அதில் நான்காவது அடுக்கில் விளிம்புநிலை மக்கள் வைக்கப்பட்டுள்ளனர் (தாழ்ந்த குல மக்கள்); அவர்கள் பொதுவாகத் தோல்

பொருட்கள் சார்ந்த தொழிலினை மேற்கொள்பவர்களாவர்”[38] என்ற இத்தகவல் நம் தமிழ்ச் சமூகத்தைப் பிரதிபலிப்பதாகவே உள்ளது.

### 3.8 முடிவுகள்

சங்க இலக்கியங்கள் பொதுவாக அக்காலகட்டத்தில் நிகழ்ந்த மனித உறவுகளையும், சமூக பொருளாதாரக் கட்டமைப்புகளையும் குறித்துத் தெளிவான பதிவுகளைத் தாங்கியவையாகத் திகழ்கின்றன. அவற்றை மானுடவியல் அணுகுமுறையின் அடிப்படையில் பகுத்துப் பார்த்தோமேயானால்; உயிர்வாழத் தேவையான உணவினைத் தேடி அலைந்த நாடோடிநிலை, அவ்வாறாக உணவுதேடும் பொருட்டு குழுவாக இணைகின்றபோது குடி, குலம் என்ற சமூகக் கட்டமைப்பு தோன்றிய அடுத்தகட்டநிலை, குழுக்கள் தமக்கான உணவினைப் பெரும்பொருட்டு காடுகளைத் திருத்திக் கழனிகளாக்கியதும், இனக்குழுத் தலைவன் முன்னிருத்தப்பட்ட நிலையும், நீர்ப்பாசனம் குறித்த அறிவினைப் பெற்ற போதும், தேவைக்கு அதிகமான உற்பத்தி பெருகிய போதும் உருவான வேந்தர்களது எழுச்சி நிலையும் என நிலத்தலைவர்கள் முன்னேற்றம் அடைந்து, புகழ் பெறத்தக்க நிலையினை எட்டியிருந்ததைப் பல பாடல்களில் காணமுடியும்.

தொல்காப்பியர் காலச் சமூகத்தில் ஆண், பெண் பாகுபாடுகளும்; சமூகப் பிரிவுகளும், ஏற்றத்தாழ்வுகளும் நிலவியதனைக் காணமுடிகின்றது. குறிஞ்சி முல்லை நெய்தல் பாலை ஆகிய நான்கு நிலப் பகுதிகளிலும் வாழ்ந்த குறவர், ஆயர், பரதவர், மறவர் ஆகிய மக்கட் பிரிவினர், தத்தமக்கென சுயேட்ச்சையான ஆளுவோரைக் (குழுத்தலைமை) கொண்டிருந்தனர். இவர்களையே சீறூர் மன்னர், குறுநில மன்னர் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குறுநில மன்னர்களுக்கும் அவர்களால் ஆளப்படும் மக்களுக்குமிடையே ஆழமான வேறுபாடுகள் நிலவவில்லை. சீறூர் மன்னர்கள் இனக்குழு மரபின் வழி வந்தவராவர். தம் குடிகளை வழிநடத்தும் பொறுப்பு

அவர்களுக்கு இருந்தது. வறுமையிலும் தம் குழுக்களுக்காக தம் உடைமைகளைக் கூட விற்று கொடையளிக்கும் இயல்பினராக 2இவர்கள் வாழ்ந்தனர். சிறு சிறு ஊர்களை இவர்கள் வழிநடத்தினர் ஆதலின் சீறூர் மன்னர் எனப்பட்டனர். மருதம், நெய்தல் நிலங்களில் பேரூர் ஒன்றினை மையமாகக் கொண்டு பரந்த நிலப்பகுதியை ஆட்சிபுரிந்தவர்கள் வேந்தர் எனப்பட்டனர். சேரர், சோழர், பாண்டியர் என மூன்று வேந்தர்கள் மட்டுமே பெருநிலப் பகுதியை ஆண்டனர். வாய்ப்பு நேரிடும் போது குறுநில மன்னர்களின் நிலப் பகுதியையும் தங்களுடன் இணைத்துக் கொண்டனர். குழுவாக வாழ்ந்து கொண்டிருந்த மனிதர்கள் உடைமை வளர்ச்சியால் பிளவுண்டு சிதரலாயினர். அதன் அடுத்தகட்டமாக அரசு என்ற நிறுவனம் தோன்றியது; உடமை வர்க்கம் சான்றோர்களையும், உயர்ந்தோர்களையும் உருவாக்கியது; உழைப்போடு நேரடியாகத் தொடர்பில்லாத இந்த முலாம் பூசிய கூட்டமே ஆதிக்கத்தை தங்கள் கையில் வைத்திருந்தது.

இனக்குழுக் காலத்திலிருந்த பொதுவான நிலைமை மாறி, உயர்ந்தோர், தாழ்ந்தோர், மேலோர், கீழோர் என்ற இரண்டு கருத்துக்களும், அதனையொட்டி இரண்டு வகையான சமூகங்களும் உருவாயின. அரசுகள் தங்களை நிலைநிறுத்திக் கொள்ளவும், எல்லைகளை விரிவுபடுத்திக் கொள்ளவும் தொடர்ந்து யுத்தங்களை நடத்திக் கொண்டே இருந்தன. மகட்கொடை கிடைக்காதபோது, அதாவது, அதன் வழியாக உற்பத்தி நிலங்களைக் கைப்பற்ற முடியாதபோது, நீர்நிலைகளைச் சீரழித்தல், வயல்களைப் பாழாக்குதல், இவற்றால் ஊரினைப் பொழிவிழக்கச் செய்தல் என்பதே போரின் நோக்கமாக மாறியிருக்கின்றது. மூவேந்தர்களும் பிறரும் பெரும் படைகளுடன் வளமான நிலங்களைக் கைப்பற்றும் முயற்சிகளில் ஈடுபட்டபோது, நிலத்தலைவர்கள் பெரும்பாலும் படைகொண்டு அவற்றை எதிர் கொண்டதாகத் தெரியவில்லை ஏனென்றால் வலிமையான அரசர்கள் முன் இனக்குழுக்களது சீற்றம் தோல்வியே கண்டிருக்கக்கூடும

## குறிப்புகள்

1. சமூகவியல் கொள்கைகள் (தொ.நூ), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ப-42
2. வாழ்வியல் களஞ்சியம்,தமிழ்ப்பல்கலைக் கழகம், தொகுதி-8, ப-588
3. tn.wikipedia.com
4. வாழ்வியல் களஞ்சியம், தமிழ்ப்பல்கலைக் கழகம்,தொகுதி-8,ப-469
5. மேலது, ப-471
6. கு.வெ.பாலசுப்பிரமணியன்,சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப-iv
7. கே. முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் வர்க்க சமூகம், ப-16
8. tn.wikipedia.com
9. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள், ப-36
10. P.T. Srinivasa iyenkar, History of Tamils upto 600 A.D. pp-4-5
11. ந. சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப-147
12. சமூகவிஞ்ஞானம், காலாண்டுஆய்விதழ், இதழ்-33, ப-19
13. க. ப. அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, ப-327
14. க. வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ் மக்கள், ப-9
15. பக்தவத்சலபாரதி, பண்பாடு மானிடவியல், ப-553
16. ஐங்குறுநூறு, NCBH பதிப்பு,(தொகுதி-2), ப-1010
17. சமூகவிஞ்ஞானம், காலாண்டுஆய்விதழ், இதழ்-28, ப-17
18. பொ.வெ.சோமசுந்தரனார்(உ.ஆ,)புறப்பொருள் வெண்பாமாலை,நூ-13, ப-19
19. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப-308
20. கே. பழனிவேலு, சங்கஇலக்கியம்: பாட்டுமரபும் எழுத்து மரபும், ப-150
21. பெ.மாதையன்,சங்ககால இனக்குழுச் சமூகமும்அரசுஉருவாக்கமும், ப-79
22. கா.கோவிந்தன்,சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை-8,(கிழார்பெயர்பெற்றோர்),ப-6

23. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப-125
24. பிங்கலநிகண்டு - மூலமும் உரையும், நூற் - 353
25. பிங்கலநிகண்டு, நூற் - 374
26. மு. காமாட்சி, சங்ககாலம்: தொல்பொருளாய்வுகள், (தொ.ஆ) ப-129
27. சமூகவிஞ்ஞானம், காலாண்டு ஆய்விதழ், இதழ்-33, ப-17
28. தி.சுப்பிரமணியன்,தமிழகத் தொல்லியலும் வரலாறும்-தகடூர்ப் பகுதி,ப-216
29. பொ. வெ. சோமசுந்தரனார்,(உ.ஆ)புறப்பொருள் வெண்பாமாலை-நூற்-14, -ப-39
30. க. ப. அறவாணன், சங்க காலத்தமிழ் மக்கள், ப-333
31. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப-297
32. சி. க. சிற்றம்பலம், பண்டைய தமிழகம், ப-200
33. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப-161
34. ந. சி. கந்தையா பிள்ளை, தமிழர் சரித்திரம், பக்-38-40
35. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப-344
36. க.ரத்னம்(மொ.ஆ), எட்கர்தர்ஸ்டனின் தென்னிந்திய மானிடஇனஇயல், ப- 220
37. ஞா. தேவநேயப் பாவாணர், பழந்தமிழாட்சி, ப-135
38. K. K. Pillai, The Caste System in Tamilnadu, p- 4

# இயல் - 4

## சங்ககாலச் சிற்றூர் வாழ்வியல்

### 4.1 முன்னுரை

தமிழ்க் குடிகள் நாடோடிகளாக அலைந்து திரிந்து, ஆங்காங்கே கிடைத்ததை உண்டு உயிர் வாழ்ந்த இனக்குழு வாழ்வினின்று எழுச்சிபெற்று உயர்ந்த காலகட்டத்தினைச் சங்ககாலம் என்கிறோம். இனக்குழு வாழ்வு மேற்கொண்ட ஆதித் தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் அனுபவங்களை எல்லாம் பதிவு செய்து வைத்திருக்கும் ஆவணக்காப்பகமாக விளங்குவதே சங்க இலக்கியங்களாகும். தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் வரலாற்றினை அறிந்திடப் பன்முக நூலான தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களுமே முதன்மையான மற்றும் முழுமையான ஆதாரங்களாக விளங்குகின்றன. அவற்றைக் கொண்டு ஆராய்கையில் ஐவகை நிலங்களிலும் வாழ்ந்த மக்கள், தாங்கள் வாழ்ந்த நிலவியல் சூழலுக்கேற்ப வெவ்வேறு வாழ்வியல் கூறுகளைக் கொண்டிருந்தனர். இலக்கண நூலார் வகுத்திட்ட கருப்பொருள் பகுப்பினை நோக்கினால் அது புலப்படும். சங்ககாலச் சமூக அரசியல் இயங்குதளத்தில் சிற்றூர்களே அடிப்படை அங்கமாக விளங்கின. பண்டைய இனக்குழு மரபினைப் போற்றிப் பின்பற்றியவர்கள் சிற்றூர்களிலேயே வாழ்ந்தனர். அவ்வகையில், சங்க காலச் சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழு மக்களின் வாழ்வியல் கூறுகளை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

### 4.2 வாழ்வியல் வேறுபாடுகள்

சிற்றூர்களில் வாழும் மக்களின் வாழ்வியலும், பேரூர்களில் வாழும் மக்களின் வாழ்வியலும் அடிப்படையில் பல வேறுபாடுகளுடன் அமைவது கண்கூடு. அதற்கு, இவ்விரு பகுதிகளின் சூழலும், வளமும் முக்கியக் காரணிகளாகும். இன்றைக்குச் சென்னை போன்ற பெருநகரங்களில் வாழும் மக்களின் வாழ்வியல், மதுரைக்கு அருகில் உள்ள சிற்றூர்களில் வாழும் மக்களின் வாழ்வியலோடு ஒன்றுவதில்லை. இந்நிலைப்பாடு சங்ககாலச்

சமூகத்திற்கும் பொருந்தும். குடியிருக்கும் இருப்பிடங்கள் முதற்கொண்டு உண்ணும் உணவு, உடுக்கும் உடை, அணிகலன், தொழில், கலைகள் என எண்ணற்ற வேறுபாடுகள் இந்த இரண்டு அமைப்புகளிலும் காணப்படுகின்றன. சங்கால மக்களின் வாழ்வியல் குறித்து இதுவரை வெளிவந்துள்ள ஆய்வுகளில், சங்ககாலச் சமூகத்தினைப் பொதுவாகப் பார்க்கும் மனப்பாங்கே நிலவுகின்றது. சிற்றூர் மற்றும் பேரூர்களின் வாழ்வியலைத் தனியாகப் பகுக்கும் போதுதான் முழுமையான புரிதலைப் பெறமுடியும். அவ்வகையில் சங்காலச் சிற்றூர் மக்களின் வாழ்வியல் கூறுகளைத் தனியாகப் பகுப்பது அவசியமாகின்றது.

குரம்பைகளில் வாழ்ந்த சிற்றூர் மக்களுக்கும், எழுநிலை மாடங்களில் வாழ்ந்த பேரூர் மக்களுக்கும் வேறுபாடு இருக்கத்தானே செய்கின்றது. குப்பைக்கீரைக்கு இட்டுச் சமைக்க உப்பின்றித் தவித்த சிற்றூரார் வாழ்விலும், கலப்பையின் கொழுக்கள் உழுது தேய்வது போல், புலால் உணவைத் தின்றதால் பற்கள் தேயுமளவிற்கு உணவு இடக்கூடிய பேரூரார் வாழ்விலும் ஏற்ற இறக்கங்கள் இருக்கத்தானே செய்கின்றன. இதே போல் எண்ணற்ற வேறுபாடுகள் இவ்விரு அமைப்பிலும் உள்ளன. குறிப்பாகச் சங்ககாலச் சிற்றூர் வாழ்வியலில் பண்டைய இனக்குழு எச்சங்கள் நிறைந்து காணப்பட்டதையும் அறியமுடிகின்றது.

### 4.3 சிற்றூர் மக்களின் பண்பாடுகளும் வாழ்வியல் கூறுகளும்

சமூகவியல் அறிஞர்களின் கருத்துப்படி, பண்பாடு என்பது வாழ்க்கை முறை (Life Style) என்பதாகும். ஒவ்வொரு மனித சமூகத்திற்கும் ஒரு தனித்த பண்பாடு ஒன்று உண்டு. ஒரு சமூகத்தில் வாழ்கின்ற பெரும்பான்மையான மக்களின் ஒருமித்த நடத்தைகளையும், எண்ணங்களையும் வெளிப்படுத்தும் கருவியாகத் திகழ்வது பண்பாடாகும். சமுதாய மக்கள் கடைபிடிக்கும் பழக்கவழக்கங்கள், உணவுமுறைகள், கலைகள், நம்பிக்கைகள், வழக்காறுகள் இன்னும்பிற தனித்த அடையாளங்கள் அடங்கிய தொகுப்பே வாழ்வியல்

கூறுகள் எனப்படும். தமிழர் பண்பாடு என்பது இலக்கியங்கள் மேலோட்டமாக எடுத்துரைக்கும் பண்பாடு மட்டுமன்று. அது, சமூகத்தின் அடிப்படை அலகான சிற்றூர் மரபுகளோடு இணைந்த ஒன்றேயாகும். சிற்றூர் மரபுகளைக் கருத்தில் கொள்ளாமல் தமிழர் பண்பாட்டைக் கட்டமைக்கவோ, புரிந்து கொள்ளவோ இயலாது. ஏனெனில் நாட்டுப்புற மரபுகள் இம்மண்ணோடு இணைந்து வாழ்ந்துகொண்டிருக்கும் மரபுகளாகும். “பண்பாடு என்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயல்படும் போது உண்டாகும் நடத்தை முறைகளின் சேர்மமாகும். இது அந்தந்தச் சமுதாயத்திற்கு மட்டுமே உரியது. மக்கள் தலைமுறை தலைமுறையாக குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும், பழக்கங்களும், மரபுகளும் சேர்ந்த ஒரு தொகுதியே பண்பாடு ஆகும்”[1] என்ற கருத்தினடிப்படையில் பார்த்தோமேயானால் பண்பாடு என்பது மரபுவழிப்பட்ட ஒன்று என்பது புலனாகின்றது. தமிழர் பண்பாட்டின் வித்து சிற்றூர்களில்தான் விதைக்கப்பட்டுள்ளன.

சங்ககாலச் சிற்றூர்களில் பேணப்பட்ட எழுதப்படாத மரபுகளே, நிலைத்து நின்று பிற்காலச் சிற்றூர் மக்களை வழி நடத்தின என்றால் அது தகும். ஆகவே சங்ககாலச் சமூகத்தினைக் குறிக்கும் போது; பொதுவானதும், பரந்த பார்வையும் கொண்டு குறிப்பிடுவது; அக்காலத்தில் நிலவிய மரபுகளை முழுமையாகக் கூறுவதாகாது. இன்றைக்கு எவ்வாறு சிற்றூர்களும், பேரூர்களும் பண்பாட்டில் வேறுபட்டு நிற்கின்றதோ, அவ்வாறுதானே அக்காலத்திலும் நிலவியிருக்க வேண்டும். தனிப்பட்ட ஒரு இனத்தையோ, அவர்களது பண்பாட்டினையோ, பேசும் மொழியினையோ வரலாற்று நோக்கில் ஆய்வு செய்யும் போது, அம்மக்களின் வாழ்வியலை அறிந்து கொள்வதன் மூலம் மட்டுமே அது தொடர்பான மக்களின் பண்பாடுகளை வெளிக்கொணர இயலும். அவ்வகையில், சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியப்படும் சங்ககாலச் சிற்றூர் மக்களின் அன்றாட வாழ்வில் நிலைகொண்ட உணவு, உடை, கலைகள், புலங்குபொருட்கள், வேட்டைமுறைகள், நம்பிக்கைகள்

மற்றும் இதர வாழ்வியல் கூறுகளைத் தொகுப்பதன் வாயிலாக அம்மக்கள் பேணிக்காத்த பண்பாடுகளையும், அவர்களிடம் இருந்த நாகரீக வளர்ச்சியையும் அறியமுடியும். சங்ககாலச் சிற்றூர்ச் சமூகமானது, இனக்குழு வாழ்வில் கொண்டிருந்த மரபுசார் அறிவும் அதன் வெளிப்பாடான வாழ்வியல் கூறுகளும், உயர்ந்த பண்பாடுகளையும் கொண்டிருந்தது என்பதைச் சங்க இலக்கியங்களின் உணர்த்துகின்றன.

**4.4 உணவும் தொழில் முறைகளும்**

மனித வரலாறு, சமூக வரலாறு குறித்து விவரிக்கும் எவரும் தம் கூற்றுக்களை உணவிலிருந்தே தொடங்குவர். காரணம், சமூகமயமாதல் என்னும் கட்டமைப்பின் அடிப்படையாக விளங்கியது உணவேயாகும். மனிதன் நிலைத்து வாழத்தொடங்கியது இவ்வுணவினால் தான். உணவின் பயன்பாடு உயிரோடு தொடர்புடையதாகும். ஆரம்பகாலத்தில் மனிதசமூகம் வேட்டைச் சமூகமாக இருந்தது. மனிதன் இயற்கையாகவே கிடைத்தவற்றை உண்டு வாழ்ந்தான். உணவிற்காக வேட்டையாடுவது, இயற்கையாகக் கிடைப்பவற்றைத் தேடுவது என்னும் செயல்பாடுகள் மட்டுமே இருந்தன. உணவு சேகரிப்பு என்னும் அடுத்தகட்ட வளர்ச்சியில் இருந்துதான் மனித சமூகத்தின் வரலாறு ஆரம்பமாகிறது என்கின்றனர் மானிடவியல் அறிஞர்கள். “மனிதன் உயிர்வாழ இன்றியமையாத பொருள் உணவாகும். பழங்கால மனிதனது முதல் தொழிலே உணவுத் தேடலாக இருந்தது. அவன் இயற்கையாகக் கிடைத்த காய்களையும், கிழங்குகளையும், விதைகளையும் உண்டான். பின்னர் பறவைகளையும், விலங்குகளையும் வேட்டையாடி அவற்றின் உணவினைப் பதப்படுத்தாமலே உண்டுவந்தான். அறிவும் ஆராய்ச்சியும் பெருகிய போது, தீயை உண்டாக்க அறிந்தான். அதன் பின்னர்தான் பச்சையாய் உண்டுவந்த பொருட்களைப் பக்குவப்படுத்தி உண்ணத் தொடங்கினான்”[2] என்னும் இக்கூற்று இனக்குழுச் சமூகத்தின் உணவுப் படிநிலை வளர்ச்சியினை விளக்குவதாக உள்ளது. இனக்குழு மக்கள் வாழ்வில்

பசி என்னும் தூண்டலின் அடிப்படையில், தேவை ஏற்பட்ட போது மட்டுமே உணவு என்றுதான் வாழ்ந்து வந்தனர். இயற்கை உணவுகளும், வேட்டையாடலும் அதற்குப் பயனளிப்பதாக இருந்தது. அச்சமயம் நகரும் வாழ்வியலை இம்மக்கள் கொண்டிருந்தனர். பயிர் செய்யும் உத்தி குறித்து அறிந்த நாள்முதலாக உணவினைச் சேகரித்ததால் நிலையான வாழ்வு தொடங்கியது. இவ்வளர்சிக்கு மூல காரணமாக விளங்கியது உணவு என்றால் அது தகும். "பசி என்பது ஒரு உடல் சார்ந்த தூண்டுதலாகும். இது உலகில் உள்ள எல்லா உயினங்களுக்கும் பொதுவானதும்கூட. எனவே, உலகில் வாழும் மனிதன் உள்ளிட்ட உயினங்கள் ஒவ்வொன்றும், ஒவ்வொரு நாளும் தமக்குப் போதுமான உனவினைப் பெறுவதற்குக் குறிப்பிட்ட நேரம், சக்தி, ஆற்றல் போன்றவற்றினைச் செலவிடுகின்றன. ஆரம்பகாலப் புதை படிவங்கள் மனிதனுடைய தொல் மூதாதையரான 'ஹோமோ' கூடத் தன் உணவுத் தேவையினை நிறைவு செய்வதற்கு வேட்டையாடத் தூண்டப்பட்டுள்ளமையை வெளிப்படுத்துகின்றன"[3] என்னும் இக்கருத்து உணவின் தேவையினை விளக்குவதாக உள்ளது.

இன்றைய சமூகத்தில் தொழில் இன்றி மனிதன் இயங்குவது சற்று கடினமே. அவரவர் தாம் கொண்டுள்ள வளம், மரபுசார் அறிவு நுட்பம் என யாதேனும் ஒரு திறமையின் அடிப்படையில் ஒரு தொழிலினை மேற்கொள்கின்றனர். இதுவும் சமூக மதிப்பீடுகளைத் தீர்மானிக்கும் காரணிகளில் முக்கிய அங்கம் வகிப்பதாகத் திகழ்கின்றது. சங்ககாலத்தில் தொழிலின் அடிப்படையில் பாகுபாடுகள் உருவாக்கப்பட்டது இங்கு நினைவுகூறத்தக்கதாகும். ஆகவே தொழில் என்பது மனிதன் தன் எதிர்காலத் தேவைகளைக் கருத்தில் கொண்டு பொருளியல் வளத்தினைப் பெருக்கிக் கொள்ள மேற்கொள்வதாகும். ஆனால் சங்ககாலத் தொல்குடிகள் வசித்த சிற்றூர்களில் தொழில் என்பது பெரும்பாலும் பொருளீட்ட அன்றி, அன்றாட உணவுத் தேவையினைப் பூர்த்திசெய்து கொள்ளவும், அடுத்த வேளை

உணவுக்கான பொருட்களை உருவாக்கிக் கொள்ளவுமே மேற்கொள்ளப்பட்டன. ஐவகை நிலங்களில் வசித்த மக்களின் அன்றாட தொழில்களை நோக்கும் போது அது உணவுக்கான தேடல்தான் என்றே தோன்றுகின்றது. பொதுவாக இனக்குழு மக்கள் வரலாற்றினை விவரிக்கும் மானிடவியல் ஆய்வாளர்கள், அம்மக்கள் மேற்கொண்ட உணவிற்கான தொழில்கள் குறித்து நான்கு படிநிலைகளை முன்வைக்கின்றனர். அவை பின்வருமாறு:

1.வேட்டையாடி உணவு சேகரித்தல்

2.கால்நடை வளர்த்தல்

3.எளிய வேளாண்முறை

4.பண்பட்ட வேளாண்மை

இந்நான்கு காலகட்டங்களைத் தமிழ்ச் சமூகத்தோடு பொருத்திப் பார்க்கும் போது பின்வருமாறு அடையாளம் காணமுடிகின்றது:




குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல் ஆகிய நிலங்களில் வேட்டையாடி உணவு சேகரித்தல், எளிய வேளாண்மை மேற்கொள்ளல்; முல்லையில் ஆநிரை வளர்த்தல்; மருதநிலத்தில் பண்பட்ட வேளாண்மை எனும் அமைப்புமுறை சங்ககாலத்தில் இருந்ததைக் காண்முடிகின்றது.

#### 4.4.1 உணவும் சமூக மதிப்பீடுகளும்

உயிர்வாழ இன்றியமையாத தேவைகளில் உணவு முதன்மையானது. அனைத்து உயிரினங்களும் உயிர்வாழ உணவே காரணமாகின்றது. ஆகவே உயிரினங்களின் செயல்பாடுகள் உணவுகளைத் தேடுவதை அடிப்படையாகக் கொண்டுள்ளன. பண்டைத் தமிழர்கள் அவரவர் வாழ்ந்த நிலத்திற்கேற்ப உணவு வகைகளும், உணவு முறைகளும் வேறுபட்டு இருந்தன. அவரவரின் பொருளாதார நிலையை ஒட்டியும் உணவின் தரம் வேறுபட்டிருந்தது. அவ்வகையில், சங்க கால சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழு மக்கள் மரக்கறி என்னும் தாவரவகை உணவை விடவும், புலால் உணவுகளையே பெரிதும் விரும்பியுண்டனர். பல வகைகளில் தயாரிக்கப்பட்ட கள் என்னும் பானம் தமிழர்கள் வாழ்வினில் முக்கிய பருகு பொருளாக அக்காலத்தில் இருந்துள்ளதையும் அறியமுடிகின்றது. ஆண்களும் பெண்களும் மகிழ்ச்சியான தருணங்களில் இதனைப் பருகி உற்சாகமடைந்துள்ளனர்.

இயற்கையாக அமைந்த நிலப்பாகுபாடுகளில் ஆங்காங்கே கிடைக்கப்பெற்ற பொருள்களையும், தங்கள் முயற்சியால் தட்பவெட்ப சூழ்நிலைக்கேற்ப உற்பத்தி செய்த பொருள்களையும் கொண்டு பண்டைத் தமிழர்கள் தங்கள் உணவுத் தேவையினை நிறைவேற்றிக் கொண்டனர் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன. உணவு என்பது உயிர்வாழத் தேவையான ஒன்றே என்றாலும், அதன் தன்மை, வகை, சமைக்கப்படும் முறை போன்றவற்றால் அதற்கான மதிப்பு கூட்டப்படுகின்றது. வயிற்றுப் பசிக்கு உணவு என்னும் நிலை மாறி, தகுதி (அந்தஸ்து) சமூகம், பொருளாதாரம் ஆகியவற்றிற்கு ஏற்ப உணவின் மதிப்பு இச்சமூகத்தால் கூட்டப்பட்டுள்ளது என்பதே உண்மையாகும். அந்தணர் சமுதாயத்தினருக்கு என்றே தனித்த உணவு வகைகளும், உணவு முறைகளும் கட்டமைக்கப்பட்டுள்ளது. மேட்டுக்குடியினருக்கென்றே தனி உணவுகள் உண்டு. அடித்தட்டு மக்கள் உண்ணக்கூடிய உணவுகள் தனிப்பட்டவையாக உள்ளன.

குறிப்பாக, மாட்டு இறைச்சியை உண்பவர்கள் தாழ்ந்த குலத்தார் என்னும் நிலைப்பாடு இன்றளவும் சமூகத்தில் இருக்கத்தான் செய்கிறது. “உணவும் சமூகமும் அல்லது உணவும் பண்பாடும் என்பது நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. ஒன்றையொன்று ஊடாடுபவை. மனித குலம் ஒன்றாயினும் மனித இனங்கள் பலவாகும். ஓர் இனத்திற்குள்ளும் ஒவ்வொருவருக்கும் உருவ அடையாளம் தனித்துவமானது; வேறானது. அவ்வாறே ஒவ்வொரு பண்பாட்டிற்கும், சமூகத்திற்கும், குழுவிற்கும் தனிநபருக்கும் உணவுவழித் தனித்தனியான அடையாளம் ஏற்படுகின்றது”[4] என்ற இக்கருத்து உணவிற்கான சமூக வெளியைக் குறிப்பிட்டுக் காட்டுவதாக உள்ளது. ஆகவே உணவு என்பது தனிப்பட்ட ஒன்றல்ல. அது சமூகத்துடன் இணைந்த ஓர் குறியீடாகக் கொள்ளப்படுகின்றது.

### 4.4.2 திணைவாரியாக உணவுகளும் தொழில்களும்

உணவு என்பது உயிர்வாழ அடிப்படைக் காரணியாகையால் மக்கள் வாழும் சூழலுக்கேற்ப அது வேறுபடும். அவ்வகையில் சங்ககால ஐவகை நிலங்களில் வாழ்ந்த தொல்குடியினரின் உணவு முறைகள் வேறுபட்டவையாகவே இருந்தன. “குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து நிலங்களும் ஒரேவகை வளம் உடையன அல்ல. நிலத்திற்கு ஏற்றவாறு மக்களின் தொழில்கள் வேறுபடுதல் போலவே விளைபொருட்களும் வேறுபடுகின்றன. எனவே உணவு வகைகளும் வேறுபடுகின்றன. ஒவ்வொரு நிலத்திலும் இயற்கையாகக் கிடைக்கும் உணவுப் பொருள்களும் உண்டு; மக்கள் உழைப்பால் விளைவிக்கப்படும் உணவுப் பொருள்களும் உண்டு; இவையல்லாமல் ஒவ்வொரு நிலத்து விலங்குகளிலும், பறவைகளிலும் உண்ணத்தக்கனவற்றையும் மக்கள் உண்டு வாழ்ந்தனர்”[5] அக்காலத்தைய சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழு மக்கள் பெரும்பாலும் வறுமையின் பிடியில் இருந்தார்கள் எனத் தெரிகின்றது. ஆகையால் அவர்களது உணவுத் தேவைக்காக முழுமையும் இயற்கையினை நம்பியே

இருந்தனர். மலை, காடு, வயல், வறண்ட நிலங்கள், கடல் என அறியப்படும் களங்களில் இருந்து சங்ககாலத் திணைசார் குடிகள் தங்களது உணவுகளைப் பெற்றுவந்தனர் என்பதைச் சங்க இலக்கியத் தரவுகள் வாயிலாக அறியமுடிகின்றது.

#### 4.4.2.1 குறிஞ்சி

மலைவாழ் மக்களான குறிஞ்சி நிலத்தார் தாங்கள் வாழ்ந்த மலைப் பகுதிகளில் கிடைக்கக் கூடிய கிழங்குகள், பழங்கள், தேன் போன்றவற்றைச் சேகரிப்பதனையும் மற்றும் தினை பயிரிடுதலையும், வேட்டையாடுதலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர். அதன் மூலம் கிடைக்கும் உணவுகளையே உட்கொண்டனர். மலைகளில் இயற்கையாகத் திரியும் விலங்குகளை வேட்டையாடிப் பெற்ற புலால் இவர்களது விருப்பமான உணவாகும். உடும்பின் இறைச்சியையும், மானின் இறைச்சியும், காட்டுப் பன்றி, மான் போன்றவற்றின் இறைச்சியையும் வாட்டி உண்டனர். குறிஞ்சி நிலத்தில் வேட்டைக்குத் உகந்த பல உயிரினங்கள் அதிகமாகக் காணப்படுமாதலின் வேட்டைப் பண்டம் முதன்மையானதாகத் திகழ்ந்தது. குறிஞ்சி நிலத்தாரின் உணவு முறைகளை நோக்குங்கால், பண்டைய இனக்குழு மரபினை நினைவுபடுத்தி அவர்கள் இனக்குழு வழிவந்தோர் என்பதை அடையாளப்படுத்துவதாக உள்ளது. பிற நிலத்தார்க்கும் இவைகளைக் கொடுத்து அதற்குப் பதிலாக மாற்றுப் பண்டங்களை வாங்கிச் சென்றனர். இந்நிலப்பிரிவைச் சேர்ந்த மக்கள் உட்கொண்ட உணவு முறைகள் குறித்து பிவருமாறு அறியப்படுகின்றன:

> “பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய
> செறிமடை அம்பின் வல்வில் கானவன்
> பொருதுதொலை யானை வெண்கோடு கொண்டு
> நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன் …” (அகம் 282: 1-4)

> “கிழங்ககழ் கேழல் உழுத சிலம்பிற்
> தலைவிளை கானவர் கொய்தனர் பெயரும்…” (ஐங் 270:1-2)

“தேம் பிழி நறவின் குறவர் முன்றில்

…………………………………….. ………………………………… ………………………..

செழுஞ் செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு

தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி …” (அகம் 78: 10, 17-18)

மேற்கண்ட பாடல்கள் சங்ககாலக் குறிஞ்சி நிலத்தாரின் தொழில்சார் உணவுமுறைகளை விவரிப்பதாக உள்ளன. குறிஞ்சி நிலக் கானவர் குறித்த பாடல்களில் உணவுக் குறிப்புகளும் அதன் கூடவே அவர்களின் தொழில்முறை பற்றியும் அறிய முடிகின்றது. (அகம் 78:7, 322-12, மலை 292, பெரும் 130-133, 142, முருகு 95, நற் 209, 276, 282, 285, குறுந் 82, அகம் 202:1-4, புறம் 177:17-20, 177:13-16 போன்ற சங்க இலக்கியப் பாடல்களிலும் இன்னும் பிற பாடல்களிலும் கானவர் தம் உணவு, தொழில் குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன) பன்றி கிழங்கு தோண்டும் நோக்கில் கிளறிய நிலத்தில் தினை பயிரிட்டு விளைவித்துள்ளனர். மேலும் வேட்டைத் தொழில் குறிஞ்சிநில மக்களின் மரபுசார் நிகழ்வாக இருந்திருக்கக் கூடும். காரணம் பண்டைய இனக்குழு வாழ்வில் வேட்டை மரபு மட்டுமே உணவிற்கான ஆதாரமாக விளங்கியது. இதன் தொடர்ச்சியாகவே சங்ககாலக் குறிஞ்சி நிலத்தார் வேட்டை உணவினை விரும்பி உண்டதாகத் தெரிகின்றது.

#### 4.4.2.2 முல்லை

வன்புலமாகிய முல்லைநிலத்தில் ஆநிரைகளை மையமிட்ட தொழிலினையும் அவைகளிடமிருந்து பெறப்படும் பண்டங்களையும், வரகினையும் முதன்மை உணவாகக் கொண்டிருந்தனர். ஆயர்கள் வசித்த முல்லை நிலத்தினில் காணப்பட்ட சிற்றூர்களில் தினை, வரகு, அவரை முதலியன புன்செய் பயிர்களாய் விளைவிக்கப்பட்டன. காடுகளில் காணப்படும் மூங்கில்களில் ஒருவகை அரிசி காணப்படும் அவற்றையும் சேகரித்து முல்லைநிலச் சீறூர் மக்கள் பயன்படுத்தினர். பால் பொருட்களான மோர், தயிர், வெண்ணெய், நெய் போன்றவற்றை அண்டை நிலத்தாருக்கு அளித்து

அதற்குப் பதிலாக நெல், கள், மாமிசம், உப்பு, ஆநிரைகள் போன்றவற்றைப் பெற்றுக் கொண்டனர். பின்வரும் பாடல்கள் முல்லைநிலச் சிற்றூர் மக்களின் தொழில்களையும், அவர்தம் உணவு முறைகளையும் விவரிக்கும் சான்றுகளாகும்.

"சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்
இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு
கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து
ஈயல் பெய்துஅட்ட இன்புளி வெஞ்சோறு
சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக..." (அகம் 394:2-6)

"வருவழி வம்பலர்ப் பேணி கோவலர்
மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவிஅடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்" ... (அகம் 311:9-11)

"முயல்சுட்ட ஆயினும் தருகுவேம்..." (புறம் 319: 8)

முல்லை நிலத்திலும் வேட்டைமரபு இருந்தது. காடுகளில் கானக்கோழி, முயல், எலி போன்றவற்றை வேட்டையாடி அவற்றை வாட்டி உண்ட செய்தி குறிப்பிடப்படுகின்றது (புறம் 322, 324, 325). முல்லைநில மகளிர் பசுக்களில் இருந்து பெற்ற பாலை மோராக மாற்றி விற்கும் தொழிலில் ஈடுபட்டனர்.

#### 4.4.2.3 மருதம்

நீர்வளமும் நிலவளமும் நிறைந்த இந்நிலத்து மக்கள் கரும்பினையும், அவலையும் (அண்டை நிலத்தவரான) குறிஞ்சி நிலத்தார்க்குக் கொடுத்து அவர்களிடமிருந்து மான் தசையையும் கள்ளையும் பெற்று உண்டனர். நெற்சோற்றையும், நண்டும், பீர்க்கங்காயும் கலந்த கலவை இவர்களின் சிறப்பான உணவாகும். பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, கிழங்கு ஆகியவையும் இவர்களது உணவுப் பண்டங்களாகும். வயல், குளங்களில் கிடைக்கும் மீன், நண்டு போன்றவற்றைச் சுட்டும், சமைத்தும் உண்டதாகத் தெரிகின்றது.

"நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்
-தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்
நார்அரி நறவுஉண்டு இருந்த தந்தைக்கு
வஞ்சி விறகின் சுட்டு வாய் உறுக்கும்..." (அகம் 216:1-4)

"நெல்விளை கழனிப் படுபுள் ஒப்புநர்
ஒழி மடல் விறகின் கழிமீன் சுட்டு
வெங் கள் தொலைச்சியும் அமையார் தெங்கின்
இளநீர் உதிர்க்கும் ........." (புறம் 29:13-16)

பொதுவாகத் தாவர உணவோடு புலால் உணவைச் சேர்த்து உண்ணும் வழக்கம் இல்லை. ஆனால் மருத நிலத்து மக்கள் பீர்க்கங்காயோடு நண்டுக்கறியையும் இணைத்து உண்ட செய்தி புதுமையானதாகும். இப்புதிய உணவுப் பழக்கம் பற்றி சிறுபாணாற்றுப்படை 195வது பாடல் விவரிக்கின்றது. இதற்குக் கவைத்த காலினையுடைய நண்டும், பீர்க்கங்காயும் கலந்த கலப்புடனே பெறுகுவீர் என்று நச்சினார்க்கினியர் உரை வகுத்துள்ளார். இதன் மூலம் பண்டைத் தமிழர் நண்டுக்கறியுடன் பீர்க்கங்காயையும் சேர்த்து உண்டுள்ளனர் என்ற செய்தியை அறிந்துகொள்ள முடிகிறது. ஆமை, நத்தை போன்ற புலால் உணவுகளும் இந்நிலத்தார் விரும்பி உண்ணும் உணவுகளாகும். (பெரும் 224-227,254-256, சிறுபாண் 183-195 மலை 460-464 நற் 250:6-8, புறம் 42:12-17 ,249:1-7, அகம் 236 போன்ற பாடல்களில் மருத நிலத்தாரின் உணவுகள் குறித்துக் குறிப்பிடப்பட்டுள்ளன)

#### 4.4.2.4 நெய்தல்

நெய்தல்நில மக்கள் பரந்து விரிந்துள்ள கடல்பரப்பினை உணவு மற்றும் தொழிலுக்கான முக்கிய ஆதாரமாகக் கொண்டவர்களாவர். கடலில் இருந்து பெறப்படும் இறால், மீன், உப்பு போன்றவற்றில் தங்கள் தேவைக்குப் போக மீதமுள்ளவற்றை அருகிலுள்ள மருத நிலத்து மக்களிடம் கொடுத்து நெல்லினைப் பெற்றனர். பனை மரத்திலிருந்து பெறப்படும் கள், நெல்லரிசியில்

தயாரிக்கப்படும் கள் போன்றவற்றைப் பருகினர். கள் விற்கப்படும் இடங்களில் மீன் இறைச்சி, விலங்கிறைச்சி ஆகியனவும் விற்கப்பட்டன. சங்க காலச் சமூகத்தில் கள் என்பது உற்சாகமூட்டும் உண்வுப் பொருளாகவே கருதப்பட்டது. ஆதலின் அதனை ஆடவர், பெண்டிர் என இருபாலரும் பருகினர். நெய்தல் நிலத்தார் உலர்ந்த மீனின் சூடான இறைச்சியுடன் கள் உண்டதாகத் தெரிகின்றது. பின்வரும் பாடல்கள் பரதவரின் தொழில்சார் உணவுகள் குறித்தனவாகும்.

"...................... .............................. ............... பரப்பில்
பல்மீன் கொள்பவர் முகந்த இப்பி
நார்அரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும் ..." (அகம் 296:7-9)

"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப
பாட்டம் பொய்யாது பரதவர் பகர
இரும் பனந்தீம் பிழி உண்போர் மகிழும் ..." (நற் 38: 1-3)

"நெடுங் கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்
கொழு மீன் கொள்ளை அழிமணல் குவைஇ ..." (நற் 175: 1-2)

குறிஞ்சி, முல்லை மற்றும் பாலை நிலங்களில் விலங்குகளை வேட்டையாடுதலை 'வேட்டம்' என்னும் சொல்லால் குறிப்பர். நெய்தல் நிலத்தினில் மீன் பிடித்தலை மீன் வேட்டை, சுறா வேட்டை என்றே அழைத்தனர். ( குறுந் 304:1-4, பெரும் 263-273, நற் 303, 358, 372, 388, பட்டின 80-81, அகம் 270:3 போன்ற பாடல்களில் நெய்தல் நிலப் பரதவர்களது தொழில்களும் அவர்களது உணவு முறைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன).

#### 4.4.2.5 பாலை

வறண்ட நிலமான பாலை நிலத்து மக்கள் வழிப்பறியின்பால் கிடைக்கும் பொருட்களை நம்பியே வாழ்ந்தனர். எனினும் வேட்டையும், ஆநிரை கவர்தலும் அவர்களது உணவுத் தேவையினைப் பூர்த்திசெய்தன. புல்லரிசியினை நிலஉரலிற் குற்றிச் சமைத்து அதனுடன் உப்புக்கண்டம்

சேர்த்து உண்டிருக்கின்றனர். விருந்தினர்க்குத் தேக்கிலையில் விருந்துபடைத்து மகிழ்ந்திருந்தனர். ஈசல், உடும்பு, முயல், மான், காளை போன்றவற்றின் இறைச்சியினையும் உட்கொண்டனர்.

“தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்
நாகுஆ வீழ்த்து திற்றி தின்ற...” (அகம் 249: 12-13)

“இன்சிலை எழிஏறு கெண்டி புரைய
நிணம்பொதி விழுத்தடி நெருப்பின் வைத்து எடுத்து
அணங்குஅரு மரபின் பேஎய் போல
விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க
துகள்அற விளைந்த தோப்பி பருகி
குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்
புலாஅல் கையர் பூசா வாயர்
ஒராஅ உருள்துடி குடுமிக் குராலொடு
மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்...” (அகம் 265: 12-21)

“வயவாள் எறிந்து வில்லின் நீக்கி
பயம்நிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென
தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்
புலவுப்புழுங்கு உண்ட வான்கண் அகலறை”... (அகம் 309:1-6)

பாலை நிலத்தினில் பயிர்கள் விளையாது என்பதால் அங்கு காணப்படும் புற்களில் இருக்கும் அரிசியினை எறும்புகள் தம் புற்றுகளில் சேகரித்து வைத்திருக்கும். அதனை பாலைநிலச் சிற்றூர் மக்கள் தோண்டியெடுத்து உண்ணும் நிலையில் இருந்தனர் (அகம் 377:2-4). வேட்டையாடுவதில் வல்லவர்களான மறவர்கள் வில்லாற்றலில் சிறந்தவர்களாதலின் அவர்கள் இருப்பிடங்களைச் சுற்றிக் காணப்படும் விலங்குகளை வேட்டையாடி

அவற்றின் இறைச்சியினை வாட்டி உண்டனர். எஞ்சியவற்றைப் பக்குவப்படுத்தி சேகரித்து வைத்துக் கொள்வர். ஆநிரை கவர்தலைத் தொழிலாகவும் கொண்டிருந்தனர் என அறியமுடிகின்றது. அங்ஙனம் கவர்ந்து வருகையில் தம் வெற்றியினைக் கொண்டாட, அவற்றில் கொழுத்த காளையினை அடித்து அதன் மாமிசத்தை வாட்டி உண்டுள்ளனர். இன்றைக்கு மாட்டு இறைச்சியினை உண்போர் தீண்டத்தகாதோர் என்று இச்சமூகம் வரையறுத்துள்ளது. ஆனால் தொல்தமிழரின் உணவில் அது இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதன் மூலம் உணவு குறித்த சமூகப்பாங்கு இச்சமூகத்தில் திரித்து வழங்கப்பட்டு வருவதைப் பொய்யாக்குவதாக அமைகின்றது.

"அற்றம்பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்தாம்
கொள்ளுப் பொருள்இலர் ஆயினும் வம்பலர்
துள்ளுநர்க் கண்மார்தொடர்ந்து உயிர்வெளவலின்" (கலி 4)

பாலை நிலத்தில் ஆறலைத்தலும் தொழிலாக இருந்து வந்துள்ளதை சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. பாலை நிலம் வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களிடம் அவர்தம் உடைமைகளைப் பறித்துச் செல்லும் ஆற்றலைக் கள்வர்கள் குறித்து மேற்காணும் பாடல் சான்றுரைக்கின்றது.

#### 4.4.2.6 தமிழர் வாழ்வில் 'கள்'

பண்டைத் தமிழர் வாழ்வில் கள் (மது) தவிர்க்க இயலாத பருகும் பானமாக இருந்துள்ளதை அறியமுடிகின்றது. பழந்தமிழ் மக்களிடையே கள் அருந்தும் பழக்கம் தனிச் சிறப்புடன் விளங்கியது. அரசன், இனக்குழுத் தலைவனான சீறூர் மன்னன் முதலாக குடிமக்கள் வரை ஆண், பெண் அனைவரும் களிப்புடன் கள்ளைப் பருகி மகிழ்ந்த செய்திகளைச் சங்க இலக்கியங்களில் காணலாம். சங்ககால ஔவை பாடிய,

"சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தாம் மகிழ்ந்துண்ணும் மன்னே" (புறம் 23:1-3)

என்னும் புகழ்பெற்ற புறப்பாடல் இதற்குச் சிறந்த சான்றாகும். போதைக்காகவும், மன மகிழ்ச்சிக்காகவும் பழந்தமிழர் 'கள்' பருகியது குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன. மட்டு, மது, நறவு, தேறல், கள் எனப் பல்வகைப் பெயர்களைப் பெற்று விளங்கும் இப்பானம்; தேன், நெல்லரிசி, தென்னை, பனை போன்றவற்றிலிருந்து இயற்கையான முறையில் தயாரிக்கப்பட்டன. ஐவகை நிலத்தாரும் வெவ்வேறு வகையில் தயாரிக்கப்பட்ட கள்ளினைப் பருகிக் களிப்படைந்துள்ளனர். மலைகளில் எடுக்கப்பட்ட தேனில் இருந்து உருவாக்கப்பட்ட ஒருவகைக் கள்ளினை நறவு எனச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதனைத் தயாரித்து குறிஞ்சி நிலத்தார் பருகினர். 'தோப்பி' என்னும் கள் குறிஞ்சி நிலத்தார் (பெரும் 142) தயாரித்துப் பருகிய பானமாகும். மேலும், அண்டை நிலங்களில் விளைவிக்கப்பட்ட முற்றிய நெல்லினைப் பண்டமாற்று முறையில் கொணர்ந்து சமைத்து உண்டதாகத் தெரிகின்றது. தேன், வள்ளிக்கிழங்கு, தினை, ஆம்பல் மலர் போன்றவை தாவர வகை உணவுப் பண்டங்களையும்; மான், காட்டுப்பன்றி, முயல், உடும்பு போன்ற விலங்குகளை வேட்டையாடிப் பெற்ற மாமிச உணவுகளையும் இந்நில மக்கள் உண்டனர். இவ்வுணவுப் பண்டங்களைச் சேகரிப்பதனைத் தம் தொழிலாகவும் கொண்டிருந்தனர்.

#### 4.4.3 சங்ககாலச் சிற்றூர் மக்களின் பிற தொழில்கள்

பழந்தமிழகச் சிற்றூர்களில் மக்கள் உழவுத் தொழிலை மேற்கொண்டு பயிர்களைப் பாதுகாக்கும் பணிகளிலும் ஈடுபட்டனர். குறிஞ்சி, முல்லை ஆகிய நிலங்களில் வரகும், தினையும் பயிரிட்ட எயினர்கள் யானை, மான், பன்றி முதலிய விலங்குளாலும் கிளி, மயில் முதலிய பறவைகளாலும் பயிருக்கு ஏற்படும் சேதங்களினின்றும் அவற்றைப் பாதுகாக்கப் பரண் அமைத்துக் காவல் காத்தனர். பகலில் பெண்களும், இரவில் ஆண்களும் காவற்பணியில் ஈடுபட்டனர். குறிஞ்சி நிலத்தில் மகளிர் பகற்பொழுதில் பரண்மீதமர்ந்து கிளியோட்டும் கருவிகளைக் கொண்டும், கவணில் கல்லினை வைத்து எறிந்து

பறவைகளை ஓட்டிக் காவல் காத்தமை குறித்து மதுரைக்காஞ்சி (35-45) கூறுகிறது. பின்வரும் பாடல் தினைப்புனம் காத்த நிகழ்வு குறித்துச் சான்றுரைக்கின்றது:

"வட்ட வரிய செம்பொறிச் சேவல்

ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்

கானத்தோர் ........................ .................... ........................" (புறம் 28:8-10)

விளைந்த தினைக் கதிரைப் பறவைகள் வந்து உண்டுவிடாமல் இருக்க தினைப்புனங் காக்கின்ற தொழிலைப் பெண்களும் மேற்கொண்டதைப் பின்வரும் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

"ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையார் வில்லர்

களிறு என ஆர்ப்பவர் ஏனல் காவலரே" (கலி 52:13-14)

"படிகிளி பாயும் பசுங்குரல் ஏனல்

கடிதல் மறப்பித்தாய் ஆயின் ...." (கலி 50:9-10)

தினைப் புனங்காக்கும் மகளிர் கவனையும், வில்லையும் கொண்டு களிற்றினை விரட்டி ஆரவாரம் செய்தமையும், தினைப்புனத்திற்கு வருகின்ற கிளிகளைக் கவண் கொண்டு ஓட்டியமையும் இப்பாடல் வரிகளால் நாம் அறிந்து கொள்ளமுடிகின்றது. இதன்மூலம் பெண்களின் பொறுப்பும் வீரமும் குறித்து அறியமுடிகின்றது. மருத நிலத்தில் வயல்களில் விளைந்து நின்ற நெற்பயிர்களைப் பாதுகாக்கும் பணியில் உழைக்கும் உழவர்களில் ஆடவரும், பெண்டிரும் ஈடுபட்டிருந்தனர்.

"கழி சுற்றிய விளை கழனி

அரிப்பறையான் புள் ஓப்புந்து

மென் பறையான் புள் இரியுந்து..." (புறம் 396:3-5)

மகளிர் அரித்த ஓசையுடைய கிணைப் பறையைக் கொட்டி வயலில் விளைந்த நெற்கதிர்களை உண்ணுவதற்கு வருகின்ற பறவைகளை தடுத்த நிகழ்வினைப் பார்க்க முடிகின்றது.

உழவர்கள் வயலில் நெல்லறுத்துக் கொண்டிருந்தபோது அரிவாள் முனை மழுங்கி விட்டது. அதனால் அவர்கள் விரைந்து நெற்கதிர்களை அறுக்க முடியவில்லை. அறுவடைக்குப் பயன்படும் கதிர் அரிவாளைத் தீட்டிக் கூராக்கினால்தான் தொடர்ந்து விரைவாக அறுக்க முடியும். எனவே வயலில் கிடந்த ஆமையின் முதுகில் முனைமழுங்கிய அரிவாளைத் தீட்டினர் என்ற தொழில்சார் நிகழ்வு குறித்த பதிவு பின்வரும் பாடலில் இடம்பெறுகின்றது:

''நெல்அரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்
பின்னை மறத்தொடு அரிய கல்செத்து
அள்ளல் யாமைக் கூன்புறத்து உரிஞ்சும்
நெல்அமல் புரவின்'' (புறம் 379:3-6)

மேற்காணும் சான்றுகளை நோக்குங்கால் சங்ககாலச் சிற்றூர் சமூகத்தார் மேற்கொண்ட தொழில் என்பது உடைமைகளைச் சேர்ப்பதற்காக அன்றி, அடிப்படைத் தேவையான உணவுகளைச் சேகரிக்கும் நோக்கிலே அமைந்துள்ளதனை உணரமுடிகின்றது.

**4.4.4 நம்பிக்கைகளும் வழிபாடும்**

செவ்வியல் இலக்கியங்கள் பழந்தமிழ் மக்களின் வாழ்க்கை முறைகளையும், அவர்களது பழக்க வழக்கங்களையும் எடுத்துரைக்கும் காலப் பெட்டகங்களாக மிளிர்கின்றன. மக்கள் வாழ்வினில் அன்றாடம் பல்வேறு மரபுக் கோட்பாடுகளின் அடிப்படையிலான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இவ்வகையான நம்பிக்கைகள் பொதுவாகச் சிற்றூர் மக்களிடமிருந்தே தோன்றுகின்றன. இனக்குழு வாழ்வு தொடங்கி இத்தகைய நம்பிக்கைகள் இருந்துவருகின்றன. பொதுவாக நம்பிக்கைகள் பல்வேறு நிகழ்வுகளின் மூலம் உருவாகியிருக்க வேண்டும்.

கற்கால மனிதர்கள் சூரியன், நெருப்பு, காற்று, மழை போன்ற இயற்கைச் சக்திகளைக் கண்டு முதலில் பயந்தனர். அவைகள் தம்மை அச்சுறுத்துவதாகவும் எண்ணினர். அவைகளை வணங்கினால் தம்மை ஒன்றும்

செய்யாது என்று கருதினர். இது போன்ற நிகழ்வுகளே மனித நம்பிக்கைகளின் தோற்றுவாயாக அமைந்திருக்கக் கூடும் எனக்கொள்ளலாம். “நம்பிக்கை என்பது மனித மனத்தின் விளைவாகும். இயற்கையால் படைக்கப்பட்டுள்ள பொருட்களுக்கும் மனிதனின் செயல்களுக்கும் தொடர்புண்டு என்ற உளவியல் அடிப்படையில் தோன்றியனவாகவே நம்பிக்கைகள் காட்சி தருகின்றன. இந்நம்பிக்கைகள் மனித சமுதாயத்தில் காலங்காலமாக நிலைகொள்வதற்கு மரபு ஒரு காரணமாக அமைகின்றது. எப்பொழுது தோன்றின என வரையறுக்க இயலாத பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் மக்களின் இன்றைய நடைமுறை வாழ்விலும் தொடர்ந்து இருந்துவரக் காண்கின்றோம்”[6] மேற்காணும் கருத்து நம்பிக்கைகள் குறித்த புரிதலை எடுத்தியம்புவதாக அமைகின்றது.

நம்பிக்கைகள் மரபுவழிப்பட்ட ஒன்றாகும். ஏதேனும் ஒரு காரணத்தினால் மக்களிடம் உருவான நம்பிக்கைகள், அதை உருவாக்கிய சமூகத்தினரால் கடைபிடிக்கப்பட்டு அதனைத் தொடர்ந்து அடுத்த தலைமுறைக்குக் கடத்தப்படுகின்றது. அவ்வாறு கடந்து வரும் மரபுகள் காலப்போக்கில் சமூகத்தில் நிலைத்துவிடுகின்றன. தமிழ்ச் சமூகத்தினைப் பொருத்தமட்டில் ஒவ்வொரு குழுக்களும் தமக்கெனச் சில தனித்த மரபுகளைக் கொண்டிருக்கின்றன. அம்மரபுகள் காலங்காலமாகக் கட்டிக்காக்கப்படுகின்றன. அவை குறித்த சமூக மதிப்புகள் விதிகளாகக் கடைபிடிக்கப்படுகின்றன. அவ்விதிகளை மீறுவோர் அச்சமூகத்தினரால் புறக்கணிக்கப்படுவதும் உண்டு. அந்த அளவிற்கு தமிழ்ச் சமூகத்தார் மரபுகளின் மீது நம்பிக்கையும், பற்றும் கொண்டிருக்கக் காண்கின்றோம். “தனிமனிதப் பழக்கங்களே காலப்போக்கில் சமுதாய வழக்கங்களாக உருப்பெற்றுத் தலைமுறையாக இடையறாது நிலைத்து மரபுகளாக வாழ்வுபெறுகின்றன”[7] எனும் கூற்று இங்கு ஏற்புடையதாக உள்ளது. இவ்வாறான மரபுவழிப்பட்ட பல நம்பிக்கைகளைச் சங்ககால இனக்குழு மக்கள் கொண்டிருந்தனர். குறிப்பாகச் சங்ககாலச் சிற்றூர்

மக்கள் வாழ்வில் இவ்வகை நம்பிக்கைகள் என்பதைச் சங்க இலக்கியங்களின் வழியாக அறியமுடிகின்றது.

#### 4.4.4.1 சங்ககாலச் சிற்றூர்களில் நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும்

நம்பிக்கைகளும் சடங்குகளும் தற்செயலாக ஒருவருக்கு ஏற்படும் இன்ப துன்ப நிகழ்வுகளைக் காரண காரியத்துடன் பொருத்தி அது மற்றவருக்குப் பாடமாக விளக்கப்படுவது என இதனைப் புரிந்து கொள்ளலாம். இது ஒரு உளவியல் காரணியும் கூட. அதாவது ஒருவகையான முன்னறிவிப்பு உத்தியாகும். இது அறிவியல் பூர்வமான உண்மைத் தனமை கொண்டவையா? என்ற நோக்கில் ஆராய்வதை விட சமூகவியல் தாக்கத்துடன் பார்ப்பதே இங்கு பொருத்தமானதாகும். தனக்கு நேர்ந்த ஒன்று அடுத்தவருக்கு நேர்ந்துவிடக் கூடாது அல்லது தமக்கு ஏற்பட்ட நல்நிகழ்வுகள் குறித்து ஆற்றுப்படுத்தும் சமூகவியல் பார்வை கொண்ட செயலே நம்பிக்கைகளும் சடங்கு முறைகளுமாகும்.

சகுனம் என இக்காலத்தில் வழங்கும் பொதுச்சொல் சங்ககாலத்தில் புள் (குறுந் 140:1-3), நிமித்தம் (தொல் பொருள் 39:1-4) போன்ற சொற்களால் உணர்த்தப்பட்டது. அவற்றின் பொருள் தனித்தனிக் கருத்துகளை உணர்த்தின. நடைமுறையில் பின்னர் நிகழ்விருப்பவற்றை அறிந்திட மக்கள் பெரிய அளவில் ஆவல் கொண்டிருப்பதனை இன்றளவும் காண்முடிகின்றது. சிற்றூர்களில் குறிகேட்டல், சோதிடம் பார்த்தல் போன்ற செயல்கள் இவ்வகையினைச் சார்ந்தவையே எனலாம். “சமயம், சடங்கு, நம்பிக்கைகள் அவை சார்ந்த கருத்தாடல்களையும் விரிந்த நிகழ்வுக் களத்தையும் தன்னகத்துக் கொண்டுள்ளது சங்க இலக்கியம். மனிதன் தோன்றிய காலந்தொட்டு மனித மனதில் நம்பிக்கைகள் மிக ஆழமாக வேரூன்றிக் கூட்டு நனவிழியாக, சமூகத்தை வழிநடத்தும் காரணியாக வளர்த்தெடுக்கப்பட்டு வந்துள்ளன என்பதற்குச் சங்க இலக்கியம் கட்டியம் கூறுகின்றது”[8] என்ற கருத்தினடிப்படையில் பார்க்கும் போது, சங்ககாலச் சிற்றூர்களில் விளங்கிய

சில நம்பிக்கைகளை இங்கு காணலாம். உயிரினங்கள் தன்னைப் பாதுகாக்கும் உணர்வுடனே ஒவ்வொருநாளும் வாழ்ந்து வருகின்றன. குறிப்பாக ஆறறிவு கொண்ட மனிதன் தன் இறப்பு குறித்த அச்ச உணர்வு அதிகம் கொண்டவனாவான். ஆகவே இறப்பு குறித்த விழிப்பு அவனுள் பிறப்பு முதலே குடிகொண்டுவிடுகின்றன. அதன்பொருட்டு ஒவ்வொரு செயலிலும் ஒரு நம்பிக்கைக் குறியீட்டினைக் காலங்காலமாக மக்கள் பயன்படுத்தி வருகின்றனர். சங்ககால இனக்குழு மக்கள் இவ்வாறான நம்பிக்கைகள் பலவற்றைக் கொண்டிருந்தனர்.

"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து

ஆறுசெல் மாக்கள் புள்கொள பொருந்தும் ..." (குறுந் 140:1-2)

இப்பாடலில் பாலை நிலத்தின் வழிச் செல்வோர் அங்கு மரங்களில் காணப்படும் ஓதி (ஓதி = ஓணான் வகையில் ஒன்றான பச்சோந்தி) குறித்த நம்பிக்கையினைக் கொண்டிருந்தனர். தான் செல்லும் பயணத்தின் இடையில் ஆண் ஓதியைக் காணின் அது தீய நிமித்தம் என நம்பினர். அதனால் தன் பயணத்தைத் தவிர்ப்பர். அதனை மீறி பயணம் மேற்கொண்டால் அது தீமையில் முடியும் என்பதும் அவர்களது நம்பிக்கையாகும். இவ்வாறாக உயினங்களை வைத்துப் பல நம்பிக்கைகள் மக்கள் மத்தியில் உலாவந்தன. பின்வரும் பாடல் அதற்குத் தக்க சான்றாகும்:

"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்

நெடுங்சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்

மனைமா நொச்சி மீமிசை மாச் சினை

வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்..." (நற் 246:1-4)

பல்லி எழுப்பும் ஒலியும், குயில் கூவும் ஒலியும் நல்ல நிகழ்வு வரப்போவதனை அறிவிக்கும் நிமித்தம் எனக் கருதினர். கண் துடிப்பதை வைத்து நன்மை தீமை நிகழப்போவதை உணர்ந்தனர். பெண்களின் இடக்கண் துடிப்பின் (ஐங் 218, பாலைக்கலி10) அது நல்ல நிகழ்வின் அறிகுறியாகக்

கருதப்பட்டது. பிறர் தற்செயலாகப் பேசிக்கொள்ளும் பேச்சினை வைத்து விரிச்சி என எடுத்துக் கொள்வது, தற்செயலாக நிகழும் காட்சிகளை பயணத்தின் இடையில் காண நேரும் போது அதன் பொருட்டு நிமித்தங்கள் என்று எடுத்துக் கொள்வது தொன்றுதொட்டு தமிழர்களிடையே இருந்துவரும் வழக்கங்களேயாகும்.

நாகரீக வாழ்வின் உச்சத்தில் இருக்கும் இன்றைய மக்களிடமும் இவ்வாறான நம்பிக்கைகள் இருப்பதனைப் பார்க்கும் போது அதன் தோற்றம் எந்த அளவிற்குத் தாக்கத்தினை ஏற்படுத்தியுள்ளது என்பதனை உணரமுடிகின்றது. **“ஒருசில நிகழ்ச்சிகள் பரம்பரை வழக்கமாக வழிவழி வந்து, சடங்குகளாகவும் மாறிவிட்டன. முதியோர்களும் சான்றோர்களும் நடைமுறை வழங்களை மக்களுக்கு அறிவித்தனர்”**[9] என்ற கருத்து நம்பிக்கைகள் மற்றும் சடங்குகள் வளர்ந்த விதம் குறித்து விளக்குவதாக அமைகின்றது. ஆரம்ப காலத்தில் இயற்கைகளைக் கண்டு பெரிதும் பயந்த மனிதன், அவற்றால் தன் உயிருக்குத் தீங்கு நேருமோ என அஞ்சி, என்னை ஒன்றும் செய்து விடாதே; என்னைக் காப்பாற்று என்று அவற்றைத் தொழுது வணங்கினான். தவிர, ஆபத்து விளைவிக்கும் கொடிய காட்டு விலங்குகளான சிங்கம், புலி, யானை, கொடிய நச்சுப் பாம்புகள் முதலியவற்றையும் அச்சத்தால் வணங்கினான். ஆகவேதான் சிறு தெய்வங்களை விலங்குகளோடு சேர்த்து (கருப்பசாமி-நாய்) வணங்கினான். இது இனக்குழு வாழ்வினின்று பெறப்பட்ட எச்சமாகும். சங்ககாலத்தில் இவ்வாறான வழிபாட்டு முறைகளைக் காணமுடிகின்றது.

> “கரந்து பாம்பு ஒடுங்கும் பயம்புமார் உளவே
> குறிக் கொண்டு மரங் கொட்டி நோக்கி
> செறிதொடி விறலியர் கைதொழுஉப் பழிச்ச
> வறிது நெறி ஒரிஇ வலம்செயாக் கழிமின்” (மலை: 199-202)

பரலையுடைய பள்ள நிலத்தின் பரப்பிலே பாம்புகள் மறைந்து கிடக்கும் குழிகள் உள்ளன. அவற்றை மனத்தாலே குறித்துக் கொண்டு, அப்பாம்பு மனம் மகிழும்படி கையால் தொழுது வணங்கிப் போவீராக என்ற பாணனின் கூற்று நோக்கத்தக்கதாகும். அச்சத்தை உண்டாக்கும் எதையும் மனிதன் தன்னினும் மேலான சக்தியாக எண்ணினான். காலப்போக்கில் அவற்றைத் தம்மைவிட உயர்ந்த ஆற்றல் படைத்தவை (தெய்வம்) என்று கருதி வணங்கினான். அணங்கு என்னும் சொல் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே கையாளப்பட்டுள்ளது. அணங்கு என்பதற்கு; வருத்தம், அச்சம், ஆசை, மோகினி, அழகு, பெண், பேய்மகள், கொல்லிப்பாவை என்னும் விளக்கங்களை அகராதிகள் சுட்டுகின்றன.

"அணங்கெனும் பெயரே ஆசையும் அழகும்
வருத்தமும் கொலையும் ஐய னோயும்
தெய்வமும் தெய்வத்து வமைசொல் மாதுமாம்"[10]

காட்டுமிராண்டி நிலையில் இருந்து வளர்ந்து முன்னேறி அநாகரிக நிலையை அடைந்த காலகட்டத்தில் மனிதன் அருவிகள், ஆறுகள், கடல்கள், காடுகள், மரங்கள், மலைகள் முதலிய இடங்களில் தெய்வம் உறைவதாக (வாழ்வதாக) நம்பினான். சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே அணங்குடைச் சிலம்பு, அணங்குடைச் சாரல், அணங்குடை நெடுங்கோடு, அணங்குடை நெடுவரை, சூருடைச் சிலம்பு, சூர்உறை வெற்பு போன்ற தொடர்கள் மலைகளில் தெய்வம் உறைவதாக மனிதன் நம்பியதைக் கூறுகின்றன.

"சூருடைச் சிலம்பில் சுடர்ப்பூ வேய்ந்து
தாம் வேண்டு உருவின் அணங்குமார் வருமே
நனவின் வாயே போல துஞ்சுநர்க்
கனவுஆண்டு மருட்டலும் உண்டே..." (அகம் 158: 8-11)

இப்பாடலில் தான் நினைத்தபடி உருமாறக்கூடிய பெண் தெய்வம் மலைதனில் உறையும் என்றும், அது கனவில் தோன்றி நிஜத்தில் நடப்பது போன்ற

நிகழ்வுகளைக் காட்டி மயக்கும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவைதவிர, ஆலமர் கடவுள், எரிமருள் வேங்கைக் கடவுள், கடவுள் மரத்த முள், கடவுள் முதுமரம், கடம்பமர் நெடுவேள், நெடுவீழ் இட்ட கடவுள் ஆலம் முதலான சங்க இலக்கியத் தொடர்கள் மரங்களில் தெய்வம் உறைவதாக மனிதர்கள் நம்பியதைக் கூறுகின்றன. அணங்குடை முந்நீர், சூருடை நனந்தலைச் சுனை, நிலைத்துறைக் கடவுள், நிறை சுனை உறையும் சூர்மகள் போன்ற தொடர்கள் அருவிகள், ஆறுகள், கடல்கள் முதலிய நீர்த்துறைகளிலும் தெய்வம் உறையும் என்று மனிதன் நம்பியதைக் குறிப்பனவாகும்.

“பெருவரை அடுக்கம் பொறப்பச் சூர்மகள்

அருவி இன் இனியத்து ஆடும்...” (நற் 34: 4-5)

மேற்கணும் இப்பாடல் நீர் நிலையான அருவியில் சூர்மகள் என்னும் தெய்வம் உறையும் என்று சங்ககால மக்கள் கருதியதை விவரிக்கின்றது. அணங்கு, சூர், சூர்மகள், தெய்வம், முதலிய பெயர்களால் தெய்வம் குறிக்கப் படுகிறது. சங்ககாலத்திற்குச் சற்று முந்தைய காலத்தில் இனக்குழு மரபு இருந்தது. எனவேதான் தெய்வங்களும் தனித்தனிப் பெயர்களால் குறிக்கப்படாமல் அணங்கு, சூர் முதலான பொதுப் பெயர்களால் குறிக்கப்பட்டன. அதற்கு அந்தக் காலகட்டத்தில் நிலவிய சமூக அமைப்பே காரணம் ஆகும். இப்பெயர்கள் அனைத்தும் பெண்பாற் பெயர்களாக உள்ளன என்பது நம் கவனத்துக் குரியதாகும். ஆதிப் பொதுவுடைமைச் சமூகம் நிலவிய அந்தக் கட்டத்தில் சமூகம் தாயின் தலைமையில் இயங்கியது. தாயே தலைவியாக இருந்து சமூகத்தை நிர்வகித்து வந்தாள். தாய் வழியாகவே வம்சாவளி குறிக்கப்பட்டது. அக்காரணத்தால் தான் தெய்வங்களின் பெயர்கள் அந்தக் கால கட்டத்தில் பெண்பாற் பெயர்களால் குறிக்கப்பட்டன. மழை குறைந்து அருவிகளிலும் ஆறுகளிலும் நீர் வற்றி வறட்சி ஏற்பட்ட காலங்களில் நீரின் தேவைக்காக ‘மழைபெய்வதாக’ என்று மலைவாழ் குறவர்கள் மலையுறை தெய்வத்தை வேண்டுவர். மழை மிகுதியாக பெய்ததும்

‘பெய்த மழை போதும்; மேகம் மேலே போவதாக’ என்று வேண்டிக் கொண்டார்கள். இதனை,

> “மலை வான் கொள்க! என உயர் பலி தூஉய்
> மாரி ஆன்று மழை மேக்கு உயர்க! எனக்
> கடவுட் பேணிய குறவர் மாக்கள்
> பெயல் கண் மாறிய உவகையர் சாரற்
> புனத்தினை அயிலும் நாட! ...” (புறம் 143: 1-5)

என்னும் சங்கப்பாடல் வாயிலாக அறியமுடிகின்றது. இங்கு மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை வெளிப்படுகின்றது. சில நேரங்களில் மனிதனது செயல்களில் தோல்வி ஏற்படுகையில் அதற்கு ஏதேனும் ஒரு காரணம் கற்பிப்பது வழக்கமாக இருக்கும் ஒன்றுதான். குறிப்பாக, சிற்றூர் மக்களிடம் இதனைக் காணலாம். சங்ககாலச் சிற்றூர்களிலும் இது போன்ற நிகழ்வுகளைக் காணமுடிகின்றது. குறிஞ்சி நிலத்தில் மானின் மேல் அம்பெய்கிறான் கானவன். அவன் எய்திய அம்பு குறி தவறுகின்றது. தன் குறி தப்பியதற்கு மலையுறை தெய்வத்தின் சினமே காரணம் என்று கருதி அத்தெய்வத்தின் சினத்தைத் தணிப்பதற்காகப் பலியிட்டதனை அறியமுடிகின்றது. அணங்கு, சூர் என்னும் இப்பெயர்கள் துன்பம், அச்சம் என்னும் பொருள் தருவன ஆகும். அணங்கு என்றால் துன்பம் தருபவள் என்று பொருள்; சூர் என்னும் சொல்லுக்கு அச்சம் என்பது பொருள். ஆரணங்கு என்பது மிக்க துன்பத்தைத் தருபவள் என்று பொருள்படும். சூர்மகள் என்னும் சொல்லுக்கு அச்சம் தரும் தெய்வப் பெண் என்பது பொருளாகும். ஆண்களை அணங்கு, சூர் ஆகிய பெண் தெய்வங்கள் அச்சுறுத்தும் என்று சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அச்சம் தரும் பெண் தெய்வங்களான அணங்கு, சூர் முதலியவற்றுக்குப் பலி கொடுத்து அவற்றின் சினத்தைத் தணிக்க மனிதன் முயன்றான். அதனைப் பின்வரும் பாடல் விவரிக்கின்றது:

> “அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது
> பணைந்த பகழிப் போக்கு நினைந்து கானவன்

அணங்கொடு நின்றது மலை வான் கொள்க எனக்

கடவுள் ஒங்குவரை பேண்மார் வேட்டு எழுந்து

கிளையொடு மகிழும் குன்ற நாடன்...” (நற் 165: 1-5)

இவ்வாறு தெய்வத்தின் சினத்தைத் தணிப்பதற்காக அத்தெய்வங்களுக்குப் பலியிட்டு வணங்கினர் என்ற செய்தியைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகின்றது.

#### 4.4.4.2 வழிபாட்டுக் குறியீடுகள்

வழிபாடு என்னும்போது ஏதேனும் ஒரு குறியீடு (Symbol) அவற்றில் இடம்பெற்றிருக்கும். வழிபடும் தெய்வங்களுக்கு உருவங்களை தருவித்தோ அல்லது ஏதேனும் ஒரு அடையாளத்தை எற்படுத்தியோ வணங்குவர். சான்றாக, உலகநாடுகளில் வாழும் கிறித்தவர்கள் சிலுவையினைத் தம் வழிபாட்டுக் குறியீடாகக் கொண்டுள்ளனர். தமிழகத்தில் வேல், சூலாயுதம் இந்து சமய மக்களின் குறியீடாக உள்ளன. சங்ககால மக்கள் நடுகல், சுறாமுள், போன்றவற்றை நட்டு வழிபட்டு வந்தனர் என்பதை அறியமுடிகின்றது. இவ்வழக்கம் இனக்குழுச் சமூகத்தின் தொடர்ச்சியாகத் தெரிகின்றது. இதற்கான காரணங்கள் குறித்து ஆராயும்போது, “புராதன காலத்திய மக்கள் தம்மைச் சூழ்ந்துள்ள இயற்கைப் பொருட்கள் மற்றும் அவற்றின் இயக்கம், நிகழ்வுகள் ஆகியவை பற்றிய அறிவுப்பூர்வமான அறிதல் அற்றவராகவே விளங்கினர். ஆனால் அவை ஒவ்வொன்றையும் பற்றித் தம் அறிவு நிலைக்கு எட்டியவாறு காரணம் கற்பித்துக் கொண்டனர். இவ்வாறு காரணம் கற்பித்து, புற உலகப் பொருட்களைத் தம் விருப்பத்திற்கேற்ப இயக்கி, அவற்றின் தன்மைகளைப் பெறுவதற்குச் சில உபாயங்களைக் கையாளத் தொடங்கினர்”[11] எனும் கருத்தினை ஆழ்ந்து நோக்க வேண்டியுள்ளது. சங்ககாலத்தினைப் பொருத்தமட்டில், மக்கள் தங்களது வாழ்வியலோடு தொடர்புடைய வேட்டை, ஆகோள் போன்ற நிகழ்வுகளை முன்வைத்துச் சில வழக்கங்களை நடைமுறையில் கையாண்டு வந்ததை அறியமுடிகின்றது. அதாவது நெய்தல்,

நிலத்தில் மீன்பாடு (அதிகமாக மீன் அகப்படுதல்) வேண்டி நெய்தல் நில மக்கள் சுறா மீனின் கொம்பை நட்டு அதனைத் தெய்வமாக வணங்கினர் என்பதை:

"சினைச் சுறவின் கோடு நட்டு

மனைச் சேர்த்திய வல் அணங்கினான்" (பட்டின 86-87)

என்ற சங்கப் பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. இதற்குத் தொழில்சார் காரணம் என்றும் பொருளியல் காரணம் என்றும் கூறலாம். கடலில் சக்தி வாய்ந்த உயினமாக சுறா விளங்குகின்றது. ஆகவே அதனை வழிபட்டிருக்கலாம். கடலில் சுறா வேட்டை மேற்கொள்வது அக்காலத்தைய வழக்கமாக இருந்ததை நாம் அறிவோம்; அவ்வாறு வேட்டையாடிய சுறாவின் எலும்பினை வணங்கியிருக்கலாம். மீனவர்களின் வாழ்வாதாரம் மீன்களே என்பதால் அதனை வணங்கியிருக்கலாம். "தற்காலத்திலும் கூட நாகை மாவட்டக் கடலோர மீனவர்களிடம் ஆங்காங்கே சுறாமுள் வழிபாடு தொடர்பான குறைந்தபட்ச எச்சங்கள் காணப்படுகின்றன. மேலும் சிந்துநதி பாயும் மக்ரான் கடற்கரையிலும், அந்தமான் தீவுகளிலும் சுறாமுள் வழிபாடு வாழும் மரபாகக் காணப்படுகிறது"[12] எனும் கூற்று தற்காலத்திலும் இவ்வழக்கம் நடைமுறையில் உள்ளதைக் காட்டுகின்றது. மேய்ச்சல் சமூகத்தவர்களான முல்லை நில மக்கள் பெண் எருமையின் கொம்பை நட்டு தெய்வமாக வணங்கினர் என்பதையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. பின்வரும் பாடல் அதனை விளக்கியுரைக்கின்றது:

"தருமணல் தாழப்பெய்து இல் பூவல் ஊட்டி

எருமைப் பெடையொடு எமர் ஈங்கு அயரும்" (கலி 114: 13-14)

பெண் எருமையின் கொம்பினை நட்டு அதனைத் தெய்வமாகப் பாவித்து வழிபடும் வழக்கம் முல்லைநில ஆயர்களின் மரபுசார்ந்த ஒன்றாக இருந்துள்ளதை இங்கு பார்க்கமுடிகின்றது.

#### 4.4.4.3 வெறியாட்டு

சங்க காலத்தைச் சேர்ந்த மலைப்பகுதிகளில் வசித்து வந்த கானவர் வெறியாட்டு என்ற நிகழ்வினை நடத்தினர். அவர்களுடைய கன்னிப் பெண்களை அணங்கு ஆட்கொண்டு ஊறு செய்வதாக நம்பினார்கள். (குறிஞ்சி 174-175, நற் 288:1,10 அகம் 98:9-10) அந்த நிலையில் இருந்து அவர்களை வெளியில் கொண்டுவர வெறியாட்டு என்ற நிகழ்ச்சியினை நடத்தினார்கள். இதைப் பற்றியக் குறிப்பு 'அணங்குடை முருகன்' (புறம் 299:6); 'அணங்கு பெண்கள், 'நெடுவேல் அணங்குறு மகளிர்' (குறிஞ்சி 174-175) என்று பல பாடல்களில் உள்ளன. முருகனை வேண்டி செய்யப்படும் அப்படிப்பட்ட வழிபாடுகளை முருகு ஆற்றுப்படுத்தல் (அகம் 22:11); 'வேலன் வெறி' (ஐங்குறு 243:2; நற் 273:4-5; என்பார்கள். வெறியாட்டில் வேலன் என்பவர் இந்நிகழ்வினை நடத்துபவராக உள்ளார். அவர் வேலினைக் கையில் கொண்டு இருப்பார். கழுத்தில் பச்சை நிற இலைகளினால் ஆன மாலை, காட்டு மல்லிகை மற்றும் வெண்தழை அதாவது வெள்ளை இலைகளையும் மாலை போல் அணிந்து கொண்டு அவர் மீது முருகன் ஆக்ரமித்துக் கொண்டு உள்ளது போல சாமியாடி அணங்கினை விரட்டுவார். அவருடைய மார்பு முழுவதும் சந்தனம் பூசப்பட்டு இருக்கும் (முருகு 190-193). அந்த நிகழ்வு நடக்கும் இடத்தை 'வெறிஅயர்களன்' (முருகு 222; அகம் 98:18-19; 114:1-2) என்பார்கள். அந்த விழா நடு இரவில் வீடுகளில் உள்ள முற்றம், அதாவது வீடுகளுக்குள் உள்ள திறந்த வெளிக் கூடத்தில் நடக்கும். அதில் ஒருபுறத்தில் கடல் மணலைக் கொண்டு வந்து கொட்டி அலங்கரித்து இருப்பார்கள் (அகம்138:10; நற் 268:8-9). அதன் ஒரு பக்கத்தில் சேவல் கொடி நடப்பட்டு இருக்கும். அந்தக் கொடி மரத்தின் மீது மலர் மாலைகளினால் அலங்கரித்து வைத்து இருப்பார்கள். கடம்பு அமர் நெடுவேல் (பெரும் 75), அங்குள்ள மரத்தில் கட்டப்பட்டு உள்ள ஆட்டை(மறி) வெட்டி அதன் இரத்தத்தைத் தினையுடன் கலந்து, அதை பரப்பி வைத்து, பலி என்னும் பெயரில் மாமிசத்தைப் படைப்பார்கள். பாடல்களைப் பாடியும், இசைக்

கருவிகளை இசைத்தும் முருகனைப் போற்றிப் பாடுவார்கள். மலர்களைத் தூவியும் அவரை வணங்குவார்கள் (நற் 47:9-10: 173:1-4;322:10-12; அகம் 22:8-11; 98:18-19; 114:1-3). குறிஞ்சி நிலத்தார் நடத்தும் வெறியாட்டு நிகழ்ச்சியைப் பற்றி விரிவாக முருகாற்றுப்படையில் கூறப்பட்டு உள்ளது. வெறியாட்டு தொடர்பான மேலும் சில விளக்கங்களும் அதில் தரப்பட்டு உள்ளன. அந்த நிகழ்ச்சி நடைபெறும் இடமோ அச்சம் தரும் வகையில் இருக்கும். முருகனை அழைக்கும்போது அந்த இடத்தை நன்கு அலங்கரித்து வைத்தும், பல விதமான உணவுகளைக் கொடுத்தும், இசைகளை இசைத்தும் வழிபாடுகள் நடைபெறுகின்றன. வேலன், குறவர்கள் மற்றும் அங்குள்ள இளம் பெண்களுடனும் சேர்ந்து நடனம் ஆடுவார். அவர்களின் கைகளைப் பிடித்துக் கொண்டு அங்குள்ள வேங்கை மர அடிக்கு அழைத்துச் சென்று, அங்கும் கள்ளைக் குடித்து விட்டு ஆடுவார். அங்குள்ள ஆண்களும் பெண்களின் கையைப் பிடித்துக் கொண்டு தொண்டகப் பறை இசைக்கு ஏற்ப ஆடுவார்கள்(முருகு 197).

குரவை நடனம் குறித்து பல இடங்களிலும் கூறப்பட்டு உள்ளது (முருகு 190-197; மலைபடு 318-322; புறம் 129:1-3). அங்குள்ளப் பெண்களுடன் பாறைகள் மீது சென்று நடனம் ஆடுவது முருகனுக்குப் பிடித்தமானது. (முருகு 190-217). மேலே குறிப்பிட்டுள்ள முறையில் செய்யப்படும் வழிபாடு முருகனை மலைவாழ் மக்கள் வணங்கிய விதத்தை எடுத்துக் காட்டுகிறது. அவர்கள் தினை, மலர்கள், பலியாடுகள் போன்றவற்றைத் தந்து சேவல் கொடி ஏற்றி வெறியாட்டு என்னும் இச்சடங்குமுறையினை நிகழ்த்தியுள்ளார்கள். அறிவியல் முறைப்படிப் பார்க்கும் போது, அணங்கு தீண்டியதாகக் கூறப்படுவது பெண்களுக்கு ஏற்படும் காதல் ஏக்கம் (பசலை) காரணமாக ஏற்படுவது என்றாலும் அக்காலத்து மக்களின் சடங்குமுறை குறித்து இதன்மூலம் அறியமுடிகின்றது.

#### 4.4.5 நடுகல் வழிபாடு

பண்டைத் தமிழரின் வாழ்வியல் பதிவுகளை உலகுக்கு வெளிக்காட்டும் சான்றுகளுள் நடுகற்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. தமிழகம் மட்டுமின்றி இந்தியா முழுவதும் நடுகற்கள் ஆங்காங்கே இருப்பது கண்டறிப்பட்டு விரிவான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. Hero Stones (வீரன்கல் - வீரக்கல்) என வழங்கிய கற்கள் Memorial Stones (நினைவுக் கற்கள்) எனவும் வழங்கப்படுகின்றன. போர் உள்ளிட்ட வீரச்செயல்களில் ஈடுபட்டு உயிரிழக்கும் வீரர்களுக்கு அவர்களது வீரத்தைப் பாராட்டி அவரது நினைவாக கல் ஒன்றினை நட்டுச் சிறப்பு செய்து வழிபடுவது பண்டைத் தமிழரின் மரபாக இருந்துள்ளது. அக்கற்களை நடுகல், வீரக்கல் என்று இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.. பொதுவாக, போர்க்களங்களில் விழுப்புண்பட்டு இறத்தல், ஆகோள் புரிகையில் மடிதல், கொடிய விலங்குகளுடன் போரிட்டு மாய்தல் போன்ற காரணங்களுக்காகவே பெரும்பாலான நடுகற்கள் எழுப்பப்பட்டுள்ளன. தொல்காப்பியத்தில் நடுகல் எடுப்பதற்கான ஆறு நிலைகள் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. அவை, காட்சி, கால் கோல், நீர்ப்படை நடுதல், பெரும்படை, வாழ்த்தல் எனப்படுகின்றது. ஊருக்கு வெளியே வீரன் இறந்த இடத்திலேயே பெரும்பாலும் நடுகற்கள் எழுப்பட்டிருக்க வேண்டும். இன்று அகழ்வாய்வுகள் மூலமாகக் காணப்படும் நடுகற்கள் யாவும் ஊரின் புறத்தே அமைந்துள்ளவையாகும். வீரனை அடக்கம் செய்த இடத்தின் மேலே அடையாளமாக நடப்பட்டிருக்கக்கூடும். அவ்வாறு நடப்படும் கற்களில் இறந்த வீரனின் உருவம், பெயர், செயல் போன்றவை பொறிக்கப்பட்டிருக்கும். வரலாற்றின் ஊற்றுக் கண்ணாக விளங்கும் பழங்குடி மக்களின் பண்பாட்டை விளக்க நடுகற்களே சிறந்த சான்றுகளாக அமைகின்றன. உலகப் பொதுமறையான திருக்குறளில் நடுகல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

“என்ஐ முன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்” (குறள்: 771)

எனப் போரில் இறந்த பகைவர்கள் பலர் கல்லாகி (நடுகல்) நின்றதாக மேற்காணும் குறள் குறிப்பிடப்படுகின்றது. பெரும்பாலும் வீரதீரச் செயல்களுக்கே நடுகல் நாட்டப்பட்டது. குறிப்பாகப் போருக்கு முதற்காரணமாக அமையும் ஆநிரைகவரும் வெட்சித் திணைக்கும், கவர்ந்த ஆநிரைகளை மீட்கும் கரந்தைத் திணைக்கும் உரிய நடுகற்களே மிகுதியாகும். கல் என்றாலே நடுகல்லையே குறிக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்தது.

"விடுவாய்ச் செங்கனைக் கொடுவில் ஆடவர்
நல்நிலை பொறித்த கல்" (அகம் 179:7-8)

கடவுள் கோட்பாடுகள் தீவிரமடையாத காலங்களில் இனக்குழு மக்கள் நடுகல்லை மட்டுமே தெய்வமாக வணங்கியுள்ளனர் என்றே தெரிகின்றது. தம் கூட்டத்திற்காக உயிர்துறந்த வீரனின் தியாகத்தைப் பெருமைப்படுத்தும் வகையில் இச்செயல் அமைகின்றது. சங்ககாலச் சிற்றூர் மக்கள் நடுகல்லினைப் போற்றி அதனை அலங்கரித்து வணங்கி மரியாதை செய்தமையினைச் சங்க இலக்கியங்கள் சான்றுரைக்கின்றன.

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்ததென
கல்லே பரவின் அல்லது
நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே" (புறம் 335:9-12)

நடுகல்லை ஆள் என ஒரு யானை உதைத்தது. நடுகல் சாயவில்லை, யானையின் கால் நகம் உடைந்ததாம். போர்க்களத்தில் விழுப்புண் பட்டோர் நடுகல் அருகே வந்து புண்ணைக் கிழித்து உயிர் விடுவர். நடுகல்லை வணங்கினால் மழைவரும், அரசன் வெற்றி பெறுவான், பயிர் செழிக்கும் எனவும் நம்பினர்.

"பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி
மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு

அணி மயிற் பீலிசூட்டி பெயர் பொறித்து

இனி நட்டனரே கல்லும் ...” (புறம் 264:1-4)

இறந்த வீரனின் பெயரையும் பெருமையையும் கல்லில் பொறிப்பர்; நடுகல்லுக்கு நீராட்டி, நெய்பெய்து வாசனைப்புகை காட்டி விளக்கேற்றுவர்; அதற்குப் பூக்களைச் சொரிவர்; மாலை சூட்டுவர், மயிற்பீலி சாத்துவர்; காப்புநூல் கட்டுவர், ஆட்டுக்கிடாய்களைப் பலியிடுவர். துடி, பறை ஒலிப்பர். எண்ணெய் பூசுவர், சிறு கலங்களில் கள் படைப்பர். வில், வேல், வாளால் வேலி அமைப்பர். பெரும்பாலும் மக்கள் கடந்துசெல்லும் வழிகளில் நடுகல்லை நட்டனர். இறந்தவர்களுக்குத் தெய்வீக சக்தி இருப்பதாக அக்கால மக்கள் நம்பினர். அதற்கேற்ப சடங்குகள் செய்யவும், வழிபடவும் முற்பட்டனர்.

ஆதித் தமிழனின் வழிபாட்டு முறையானது இறந்து போன வீரர்களின் நினைவாக கல்நட்டு, அவனுக்குப் பிடித்த உணவு வகைகளைப் படையலிட்டு, பலியிட்டு வணங்குவதாகும். இறந்து போன மனிதனின் உடலோடு அவன் பயன்படுத்திய ஆயுதம் மற்றும் பொருட்கள் ஆகியவற்றையும் சேர்த்துப் புதைத்து, தனது முன்னோரைத் தமிழன் வழிபட்டு வந்தான். இறந்தவர்களின் நினைவும், அது சார்ந்த நம்பிக்கையும் தங்களுக்கு ஆற்றலை வழங்கும் என்ற கருத்தியலின் அடிப்படையிலேயே நடுக்கல் வழிபாடென்பது அமைந்தது. நடுக்கல்லுக்குப் பூக்களைச் சூடி மயில் தோகையை அணிவித்து வழிபாடு செய்தமை குறித்தும்; கரையை அழிப்பது போல் பீறிட்டு வரும் வெள்ளத்தை அணை தடுத்து நிறுத்தியது போல் பாய்ந்து வரும் பகைவர் படையைத் தடுத்து நிறுத்தி ஊரைக் காத்திடத் துணிந்து மாண்ட வீரர்களுக்கு நடப்பட்ட நடுக்கற்களைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இறந்தவர்களின் நினைவாக நடப்பட்ட நடுக்கல் வழிபாட்டில் ஆடு, கோழி வெட்டப்படுவதும், கள் படைக்கப்பட்டதும் முக்கிய இடம் பிடித்தது. (கிறித்தவ சமயத்தாரிடம் ‘நீத்தார் நினைவுநாள் வழிபாடு’ என்னும் நிகழ்வு வருடந்தோறும் நடைபெறுகின்றது. மறைந்த முன்னோர்களுக்கு, அவர்கள் விரும்பிய

பண்டங்களை அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் படைத்து, பூமாலை அணிவித்து, நறுமணப்புகை காட்டி வழிபடும் இவ்வழக்கம் இங்கு நோக்கத்தக்கதாக உள்ளது.)

"இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி" (புறம் 329:1-2)
"நடுகல் பீலி சூட்டி நார் அரி
சிறு கலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ" (புறம் 232:3-4)
"நடுகள் பீலி சூட்டி துடுப்படுத்து
தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்" (அகம் 35:8-9)

இறந்தவனின் நினைவிடத்தில் அவன் விரும்பி உண்ட மதுவும், பலி கொடுக்கப்பட்ட ஆடும் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்ட செய்தியை மேற்கண்ட சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

"பெருங் களிற்று அடியின் தோன்றும் ஒரு கண்
இரும்பறை இரவல! சேறி ஆயின்
தொழாதனை கழிதல் ஓம்புமதி வழாது
வண்டு மேம்படூஉம் இவ்வறநிலை ஆறே
பல் ஆத்திருள் நிரை பெயர்தரப் பெயர்தந்து
கல்லா இளையர் நீங்க நீங்கான்
வில் உமிழ் கடுங் கணை மூழ்க
கொல் புனல் சிறையின் விலங்கியோன் கல்லே" (புறம் 263:1-8)

இறந்தவன் ஆன்மா நடுகல்லில் இருப்பதான நம்பிக்கை ஏற்பட்டது. நடுகல்லை வழிபட்டால் நிலம் செழிக்கும் என்ற நம்பிக்கை தமிழக மக்களிடையே நீண்டகாலமாக இருப்பதைச் சங்கப்பாடல்கள் வாயிலாக அறியலாம்.

#### 4.4.6 வழிபாடுகளில் ஏற்பட்ட மாற்றங்கள்

தாய்வழிச் சமூகமாக விளங்கிய ஆரம்பகாலச் சமூகத்தில் வழிபாட்டு முறைகளில் பெண்ணே தெய்வங்களாக முதன்மைப்படுத்தப்பட்டாள். பிற்கால மாற்றத்தில் பெண்ணிடமிருந்து சமூகத்தின் தலைமையிடத்தைக் கைப்பற்றிய ஆண், வழிபாடுகளிலும் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டினான். இதுவரையிலும் மலைகளிலும் மரங்களிலும் உறைந்திருந்த பெண் தெய்வங்கள் ஆண்களை அச்சுறுத்தி வந்தன என்று இலக்கியங்கள் கூறின. இந்நிலையில், சமூகத்தில் உயர்ந்த நிலைக்குத் தம்மை அடையாளப்படுத்திய ஆண், மலைகளிலும் மரங்களிலும் ஆண் தெய்வங்களைக் குடியேற்றினான். அவற்றில் ஆண் தெய்வங்கள் உறைவதாகக் கூறினான். செவ்வேள், சேய், நெடுவேள், முருகன் முதலிய ஆண்பாற் பெயர்களால் அத்தெய்வம் குறிக்கப்பட்டது. மலையும் மலை சார்ந்த இடமுமான குறிஞ்சி நிலத்தின் தெய்வமாக முருகன் கூறப்பட்டான். ஆணாதிக்கம் மேலோங்கிப் பெண்ணின் நிலை தாழ்ந்ததால், மலைகளில் உலவி ஆண்களை அச்சுறுத்தி வந்ததாகக் கூறப்பட்ட அணங்கு, சூர் முதலிய பெண்தெய்வங்களின் முக்கியத்துவம் குறைந்து மறைந்தது.

சமூகத்தில் பெண்ணின் நிலை தாழ்ந்து ஆணின் நிலை உயர்ந்தது போலவே, பெண் தெய்வங்களின் நிலை தாழ்ந்து ஆண் தெய்வங்களின் நிலை உயர்ந்தது. இரவுக் குறியிடத்தில் தலைவியைக் காண இரவு நேரத்தில் வந்த தலைவனைக் காட்டு விலங்குகளான புலி, கரடி, யானை முதலிய வற்றுடன் அச்சம் பொருந்திய பெண் தெய்வங் களும் துன்புறுத்தும் என்று தலைவி அஞ்சிக் கூறிய நிகழ்வுகளைச் சங்க இலக்கியங்கள் கூறின. ஆனால் ஆணாதிக்கம் மேலோங்கிய நிலையில், தினைப் புனக் காவலுக்குச் சென்ற தலைவியை ஆண் தெய்வமான முருகன் அச்சுறுத்தினான். அதனால் தலைவியின் மேனி நிறம் மாறுபட்டது; உடல் மெலிந்தது; நெற்றியில் பசலை படர்ந்தது என்று தாய் கூறினாள். மகளின் மேனி மெலிவுக்கும் நிறமாறுபாட்டுக்கும் முருகன் தலைவியை அச்சுறுத்தியதே காரணம் என்று கருதிய தாய், முருகனின் சினத்தைத் தணித்துச் சாந்தி

செய்வதற்காக வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்தச் செய்தாள் என்று சங்க இலக்கியங்கள் கூறலாயின. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலம் நான்காகப் பகுக்கப்பட்ட போது, அந்நிலங்களுக்கு உரிய தெய்வங்களாக ஆண் தெய்வங்களே குறிக்கப்பட்டன. அந்நிலங்களில் உலவி ஆடவரை அச்சுறுத்தி வந்ததாகக் கூறப்பட்ட பெண் தெய்வங்கள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டன. மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சி நிலத்தின் தெய்வமாக முருகன் கூறப்பட்டான். திருமால் முல்லை நிலத்துக்குரிய தெய்வம் எனப்பட்டது. இந்திரன் மருத நிலத்துக்குரிய தெய்வமாகக் கூறப்பட்டான். வருணன் நெய்தல் நிலத்துக்குரிய தெய்வம் எனப்பட்டது. இவ்வாறு, ஆண் தெய்வங்களே நான்கு நிலங்களுக்கும் உரிய தெய்வங்களாகக் கூறப்பட்டமை, சமூகத்தில் போர்ச்செயல் மிகுந்த ஆணாதிக்கம் மேலோங்கியதன் விளைவேயாகும்.

இத்தெய்வங்களில் முருகனைத் தவிர்த்த பிற தெய்வங்கள் ஆரியக் கடவுளர் என்பது கவனத்துக் குரியதாகும். கொற்றவை என்னும் பெண் தெய்வம் பாலை நிலத்துக்கு உரிய தெய்வமாகக் கூறப்பட்டது. பாலை தனிநிலம் அன்று; மழையின்றி வறட்சி ஏற்பட்டு முதுவேனிற் காலத்தில் முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தம் இயல்பில் திரிந்து பாலை நிலமாக மாறும் முக்கியத்துவம் இல்லாத இப்பாலை நிலத்துக்குரிய தெய்வமாகவே கொற்றவை என்னும் பெண் தெய்வம் கூறப்பட்டது. இந்நிலை, சமூகத்தில் பெண்ணின் முக்கியத்துவம் பறிக்கப்பட்டு விட்ட நிலையையே உணர்த்துகிறது.

#### 4.4.7 முடிவுரை

தமிழக வரலாற்றின் தொடக்க காலமான சங்ககாலம் இனக்குழு வாழ்க்கையிலிருந்து நிலமானிய முறையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. இதனால் இக்காலத்தை மாறுதல் நிகழும் காலம் (Transition Period) என்பர். உணவு தேடி வாழும் இனக்குழு வாழ்க்கை, கால்நடை வளர்ப்பினை மையமாகக் கொண்ட மேய்ச்சல் நில வாழ்க்கை, உணவு உற்பத்தி செய்து உபரி கண்ட நிலவுடைமைச் சமுதாய வாழ்க்கை என மூன்று வகையான

சமூக அமைப்புகள் வெவ்வேறு நிலப்பகுதிகளில் ஒரே நேரத்தில் நிலவின. இதனடிப்படையில் வெவ்வேறு வகையான பொருளாதார நடவடிக்கைகளும் சமூக அமைப்புகளும் கொண்ட ஓர் அசமத்துவ வளர்ச்சி (Uneven Development) சங்ககாலத்தில் நிலவியது.

குறிஞ்சி நில மக்கள் சிலம்பன், குறவன், வெற்பன், வேட்டுவர், கானவர், குன்றவர் என அழைக்கப்பட்டனர். தொடக்கத்தில் வில், அம்பு, வேல் ஆகியவற்றின் துணையுடன் வேட்டையாடி வாழ்ந்தனர். மூங்கிலரிசி, திணை, மலை நெல், தேன், கிழங்குகள் ஆகியனவும் உணவாகப் பயன்பட்டன. உணவு தேடி வாழும் வாழ்க்கை இங்கு நிலவியது. பின், புன்புல வேளாண்மை உருவாகியது. ஆடுமாடுகளை மேய்க்கும் மேய்ச்சசல் நில வாழ்க்கையை மையமாகக் கொண்டது முல்லை நிலம். வரகு, சாமை, கேழ்வரகு, கடலை, அவரை, துவரை ஆகியன மழையை நம்பி மேற்கொண்ட வேளாண்மையில் கிட்டின. உணவு தேடும் வாழ்க்கையைக் கடந்து உணவு உற்பத்தி செய்யும் நிலையும் ஆநிரைகளைச் சொத்துக்களாகக் கொள்ளும் நிலையும் இங்கு உருவாகின.

மலையிலும் காட்டிலும் அலைந்து திரிந்த நிலையிலிருந்து வளர்ச்சி பெற்று ஆற்றங்கரையில் நிலையாக வாழத் தொடங்கிய இடம் மருத நிலமாகும். இங்கு உழு தொழிலின் மூலம் உணவு உற்பத்தி நிகழ்ந்தது. ஆற்று நீரை நேரடியாகவும், நீர்நிலைகளில் தேக்கி வைத்தும் இம்மக்கள் பயன்படுத்தினர். அதனால் நெல், கரும்பு, மஞ்சள் ஆகிய பணப்பயிர்கள் இங்கு முக்கிய உற்பத்திப் பொருள்களாக இருந்தன. கரும்பிலிருந்து வெல்லம் தயாரிக்கும் கரும்பாலைகளும், உபரி நெல்லை மூலதனமாகக் கொண்டு பண்டமாற்று வாணிபத்தை மேற்கொண்ட வாணிப குழுக்களும் உருவாயின. சிற்றூர்கள் பேரூர்களாக வளர்ச்சி பெறத் தொடங்கின. நெய்தல் நிலப்பகுதியில் மீன்பிடித்தலும், உப்பு உற்பத்தி, உலர்மீன் உற்பத்தி செய்தலும்; அவற்றைப் பிற நிலப்பகுதிகளுக்குக் கொண்டு சென்று பண்டமாற்று செய்தலும் முக்கிய

தொழில்கள். இதன் வளர்ச்சி நிலையாகக் கடல் வாணிபம் உருவாகியது. நெய்தல் குடியிருப்புகள் பட்டினம், பாக்கம் என்றழைக்கப்பட்டன. வளமற்ற நிலப்பகுதியான பாலையில் வழிப்பறியும், கொள்ளையும் மக்களின் துணைத் தொழில்களாயின. புல்லரிசி, வழிப்பறியில் கிடைக்கும் பொருட்களை உண்டு வாழ்ந்தனர். ஆவிகளின் மீது நம்பிக்கை கொண்ட ஆவி உலகக் கோட்பாடும் (Animism) 'குலக்குறி' (Totem) வழிபாடும், போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் எடுத்து வழிபடும் நடுகல் வழிபாடுமே பரவலாக இருந்தாகத் தெரிகின்றது.

## குறிப்புகள்

1. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல், ப-151
2. பி.சேதுராமன், ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல், ப-86
3. தமிழர் உணவு, பக்தவத்சலபாரதி, (தொ.ஆ), ப-13
4. மேலது, ப-17
5. இராமநாதன் செட்டியார், சங்ககாலத் தமிழர் வாழ்வு, ப-95
6. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப-4
7. மேலது, ப-16
8. பக்தவத்சல பாரதி, நா.செல்வராசு, இரா.சம்பத் (ப.ஆ), பண்பாட்டியல் நோக்கில் பண்டைத் தமிழர் சமய மரபுகள்,ப-143
9. மு.சண்முகம் பிள்ளை, சங்கத்தமிழர் வாழ்வியல், ப-155
10. வடமலை நிகண்டு, நூ-10
11. ஆ.தனஞ்செயன், குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், ப-189
12. மேலது, ப-178

# இயல் - 5

# இன்றைய தமிழகத்தில் சங்ககாலச் சிற்றூர் வாழ்வின் எச்சங்கள்

## 5.1 முன்னுரை

சங்க இலக்கியங்கள் வழி அறியலாகும் தமிழ்க்குடிகளின் வாழ்வியல் பற்றிய செய்திகள் யாவும் சற்றேறக்குறைய வரலாற்றுப் பதிவுகளாகவே அமைந்துள்ளன. ஒரு நாட்டின் மொழி, இனம், நிலவியல் குறித்த தொன்மையினை அறியவும் அதனை நிரூபிக்கவும் தொல்லியல் தடயங்கள் முக்கியப்பங்கு வகிக்கின்றன.எனவேதான் ஒவ்வொரு நாட்டிலும் தொல்லியல் அகழ்வாய்வுகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. அவ்வாறு நடைபெறும் ஆய்வுகள் மூலமாக வெளிக்கொணரப்படும் வாழ்வியல் எச்சங்களை உய்த்துணர்ந்து, பண்டைய வாழ்வியல் முறைகளையும், பண்பாடுகளையும், வரலாற்று நிகழ்வுகளையும் அறிந்துகொள்ளமுடிகின்றது. பொதுவாக, வரலாறு என்பது நடந்து முடிந்த நிகழ்வுகள் குறித்ததாகும். குறிப்பிட்ட ஒரு துறையினைக் குறித்த வரலாறு என்பது, அத்துறை தொடர்புடைய எழுத்துப் பூர்வமான ஆதாரங்கள், தொல்படிமங்கள் போன்ற பல்வேறு மூலங்களில் இருந்து பெறப்படும் தகவல்களை அறிவியல் பூர்வமாகவும் ஆராய்ந்து பகுத்து முடிவுகள் பெறுவதாகும். இதன் மூலம் பல பண்பாடுகளும், பழக்கவழக்கங்களும் வெளிக்கொணரப்படும். சங்ககாலத்து வாழ்வியல் தாக்கங்கள், எச்சங்கள் நேரடியாகவும் பிற வடிவங்களிலும் இன்றளவும் நிலைபெற்றிருப்பதனையும் கண்டுணரமுடிகின்றது. அவற்றை ஆய்வதன் மூலம் அக்காலத்தைய சமூகத்தினை விவரிக்க இயலும். அங்ஙனம், இன்றைய காலச்சூழலில் நிலவக்கூடிய சங்ககால வாழ்வின் எச்சங்களைப் பலதரப்பட்ட தரவுகள் மூலமாகவும் மற்றும் கள ஆய்வின் வாயிலாகவும் தொகுத்து உரைக்கும் விதமாக இந்த இயல் அமைகின்றது.

### 5.2 சங்ககால எச்சங்கள்

உலகநாடுகள் தங்களது பண்டைய வாழ்க்கைமுறைகளையும், வரலாற்றினையும் அறிந்துகொள்வதில் ஆர்வம்காட்டத் தொடங்கியுள்ளனர். அதற்கென நடைபெறும் ஆய்வுகளின் மூலம் அவர்களது முந்தையகால வாழ்வியல் எச்சங்களைத் தேடிக்கொணர்ந்து முன்வைக்கின்றனர். மிகப்பழமையான எகிப்து, ரோம் போன்ற நாடுகளின் நாகரிகங்கள் இன்றளவும் போற்றப்படக் காரணம்; அந்நாடுகளின் முந்தையகால வாழ்வியல் எச்சங்களை முன்வைத்ததேயாகும். ஒவ்வொரு சமூகமும் கால ஓட்டத்தின் ஒருகட்டத்தில் அழிவுகளைச் சந்திக்க நேரிடுகின்றது. இங்கு அழிவு என்பது நிலவியல் மற்றும் பண்பாடு சார்ந்ததாகிறது. இவ்வகைச் சிதைவுகளினின்று பண்பாடுகளை மீட்டுருவாக்கம் செய்திட, முந்தைய காலத்தைய எச்சங்களைத் தேடித் தொகுப்பது பயன்தரத்தக்க ஒன்றாக அமையும். அவ்வகையில், தமிழ்ச் சமூகத்தின் வேர்களை அறிந்திடும் தேடலில், அவர்கள் வாழ்ந்த காலத்தில் காணப்பட்ட ஊர்கள், பயன்பாட்டுப் பொருட்கள், சொல்வழக்குகள், நடுகற்கள், பாறை ஓவியங்கள், கல்வெட்டுக்கள் எனப் பலவகையான தரவுகள் முற்றிலும் அழிவதில்லை.

எச்சங்கள் என்பதை வாழ்ந்ததற்கான தடயங்கள் எனப் பொருள்கொள்ளலாம். அதாவது, நம் முன்னோர்கள்காலத்தில் காணப்பட்ட, அவர்கள் பயன்படுத்திய, அவர்களோடு தொடர்புடைய பொருட்கள், பண்பாடுகள், வாழ்வியல் முறைகள் குறித்த தடயங்கள் பன்னெடுங்காலத்திற்குப் பின்னும் வழிவழியாக தொடர்ந்து வந்துதற்கால வாழ்வில் புலப்படுமாயின் அவற்றை எச்சங்களாகக் கொள்ளலாம்.

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்" (குறள் 114)

எனும் இக்குறளில் ஒருவரது பண்பினை அறிந்து கொள்ள வேண்டுமாயின் அவர் விட்டுச் சென்ற எச்சங்களால் (வழித்தோன்றல்) அறிந்து கொள்ளலாம் எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். அதுபோலவே நமது முன்னோர்களைப் பற்றி அறிந்து கொள்ள அவர்களது வாழ்வினைப் பிரதிபலிக்கும் தொல்லியல் மற்றும்

பண்பாட்டு எச்சங்கள் விளங்குகின்றன.இவ்வகை எச்சங்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை, 1. தொல்லியல் எச்சங்கள் 2. வாழ்வியல் எச்சங்கள் எனப்படும்.

**5.3 தொல்லியல் எச்சங்கள்**

தொல்லியலை 'முற்காலத்தைப் பற்றி அறிய உதவும் அறிவியல்' என்பர். தொல்லியல் ஆய்வு என்பது பூமிக்குள் புதையுண்டு மறைந்து கிடக்கும், அல்லது மேற்பரப்பிலே காணப்படும் மனித இனத்தோடு தொடர்புடைய பொருள்களையும், அவர்கள் நாள்தோறும் வாழ்க்கையில் பயன்படுத்தி விட்டுச்சென்ற பொருள்களையும் அகழ்ந்தெடுத்து ஆய்வுசெய்து அவர்களின் தொல்பண்பாடுகளைப் பற்றியும், மரபுகள் குறித்தும் உலகறியச் செய்யும் ஓர் அறிவியல் அடிப்படையிலான ஆய்வாகும்.தமிழகத்தில் பல்வேறு இடங்களில் தொல்லியல் அகழாய்வுகள் நடைபெற்றுள்ளன. அவற்றில் எடுத்த அரிய பல தொல்பொருட்கள் C14 எனப்படும் கரிப்பகுப்பாய்வு (காலக்கணிப்பு மற்றும் உறுதிபடுத்துதல் ஆய்வு) மூலம் அறிவியல் முறைப்படி காலநிர்ணயம் செய்யப்பட்டுள்ளன. அந்த ஆய்வுகளில் சங்க இலக்கியங்களோடு தொடர்புடைய பல பெயர்கள், பொருள்கள் கிடைத்துள்ளன. எனவே அந்தத் தொல்லியல் அகழாய்வுக் காலத்தைச் சங்ககாலம் என்று கொள்ளுவது தவறாகாது. எனவே தொல்லியல் ஆய்வுகள் (Orchiological Research) என்பவை பண்டைய கால மக்களின் வரலாறுகளை மீட்டுருவாக்கம் செய்திட உதவும் என்கிற நோக்கில் தமிழரின் தொன்மை, பண்பாடுகள் போன்ற எச்சங்கள் குறித்து ஆய்வது அவசியமாகின்றது.

**5.3.1 ஊர்களின்தோற்றமும் ஊர்ப்பெயர் ஆய்வும்**

உலகெங்கிலும் உள்ள பல இனக்குழுச் சமுதாயங்கள் ஆங்காங்கே ஒரு இடத்தில் சேர்ந்து வாழ ஆரம்பித்த பின்பு, அவ்விடத்திற்கு அவர்கள் ஒரு பெயரையும் வைத்துக் கொண்டார்கள். இவ்வாறு பெயரிடுவது, அவ்விடத்தினை எளிதில் இனம் காணவும், எல்லை வகுப்பதற்கும் உதவியாக இருந்திருக்கக் கூடும். அவ்வாறு இடப்பட்டஊர்ப் பெயர்கள் அங்கு வாழும் சமூகத்தாரது பண்பாட்டு அடையாளமாகவும், நிலம் சார்ந்ததாகவும், குறியீடாகவும், சில வரலாற்றுச்

செய்திகளைத் தாங்கியவையாகவும் இருப்பதைக் காணமுடிகிறது. தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றினை அறிந்து கொள்ளத் துணைபுரிவதில் இலக்கியங்களே பெரும்பங்கு வகிக்கின்றன என்றாலும்; எவ்வாறு கல்வெட்டுக்களும், சாசனங்களும், பட்டயங்களும் சமூக வரலாற்றினை அறிவிக்கும் தரவுகளாக விளங்குகின்றனவோ; அவ்வாறே, பண்டைய ஊர்களைக் குறிக்கும் பெயர்களும் தமிழ்ச் சமூக வரலாற்றினையும், பண்பாடுகளையும் விவரிக்கின்றன. ஓர் ஊரின் பெயரினை வைத்தே அவ்வூரினைக் குறித்த அடிப்படைத் தரவுகள் சிலவற்றை விவரம் தெரிந்த எவராலும் கூறிட முடியும். அந்த அளவிற்கு ஊர்ப் பெயர்களில் தகவல்கள் பொதிந்திருக்கும். ஒரு வகையில் ஊர்களின் தோற்றமும், ஊர்களுக்குப் பெயரிடும் முறையும், சமூகப் படிநிலை வளர்ச்சியின் உந்துதலால் ஏற்பட்டதே எனலாம். அதனால் தான் உலகெங்கிலும் உள்ள சமூகவியல், மானுடவியல் மற்றும் வரலாற்றியல் ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் இடப்பெயர்களின் பின்புலம் குறித்து ஆராய்வதனை ஒரு துறையாகவே உருவாக்கி வளர்த்தெடுத்துள்ளனர். அதுவே 'TOPONOMY' எனும் ஊர்ப் பெயராய்வுத் துறையாகும்.

சமூகவியல் ஆய்வுத் துறைகளில் வளர்ந்து வரும் ஆய்வுப் பிரிவாக இத்துறை உள்ளது. "மனித இனம் ஓரிடத்தில் நிலைத்து வாழத்தொடங்கிய காலத்திலேயே இடப்பெயர்களும் தோற்றுவிக்கப் பெற்றிருத்தல் வேண்டும். இத்தகு இடப்பெயர்களை ஆய்ந்து அதன் வாயிலாகப் பல்வகைப் பயனுள்ள செய்திகளை எடுத்துக் கூறும் நிலை இன்றைய இலக்கியத் துறையில் காணக்கூடிய ஒரு புதுமையாகும்"[1] எனும் கருத்து ஊர்ப்பெயராய்வு குறித்து விளக்குவதாக உள்ளது. தமிழகத்தில் ஊர்ப்பெயர் குறித்த ஆய்வுச் சிந்தனை ரா.பி. சேதுப்பிள்ளை அவர்களின் 'தமிழகம் ஊரும் பேரும்' (1946) எனும் நூலினை அடியொற்றி எழுந்தது எனலாம். அதற்கு அடுத்து ஊர்பெயர் ஆய்வில் பெரும்பாலும் எவரும் கவனம் செலுத்தவில்லை என்றே தெரிகிறது. ஆயினும், அண்மைக் காலங்களில் சீரிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு ஊர்ப்பெயர் ஆய்வு வளர்ந்து வருகின்றது. இதன் ஒரு பகுதியாக 1978 ஆம் ஆண்டு துவங்கப்பட்ட

‘இந்தியப் ஊர்ப் பெயராய்வுக் கழகம்’ (Place Names Society of India) செயல்பட்டு வருகின்றது. அதன் வாயிலாக, பல அரிய தகவல்கள் வெளிவந்தவண்ணம் உள்ளன. தமிழர்கள் தம் ஊர்களுக்குப் பெயரிடும் முறை சங்ககாலத்திற்கு முன்பிருந்தே வழக்கில் இருந்துள்ளதனை அறியமுடிகிறது. ஐவகை நிலங்களுக்குமான கருப்பொருள்களை வகுத்த இலக்கணத்தார்; ஒவ்வொரு நிலத்தினது ஊர்களும் இன்ன பெயர்களில் வழங்கப்படும் எனக் குறிப்பிட்டுள்ளனர். இத்தகு கருப்பொருள் பகுப்பினைப் பார்க்கும் போது அது திணை மாந்தர்களின் வாழ்வியல் கூறுகளை விவரிப்பதாகவும் விளங்குகின்றது. அதனைப் பின்வரும் தொல்காப்பிய நூற்பாவின்பால் அறியலாம்,

“தெய்வம், உணாவே, மா, மரம், புள், பறை,
செய்தி, யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கரு என மொழிப” (தொல் அகத்:18)

இவ்வாறாக பகுக்கப்பட்ட கருப்பொருள்களில் ஊர்களும் இடம்பெறுகின்றன. முல்லை நில ஊர்கள்; பாடி, சேரி, பள்ளி, குறிஞ்சி நில ஊர்கள்: சிறுகுடி, குறிச்சி, பாலை நில ஊர்கள்; பறந்தலை, நெய்தல் நில ஊர்கள்; பட்டினம், பாக்கம், மருதநில ஊர்கள்: ஊர்கள் என்றே அழைக்கப்பட்டன. இதன்வாயிலாக அன்றைய காலகட்டத்திலேயே ஊர்களுக்குப் பெயரிடும் வழக்கம் இருந்துள்ளதனை இங்கு உணர முடிகிறது. சங்ககாலத்தில் மேற்கண்ட வரைமுறைகளின் அடிப்படையில் ஊர்கள் இருந்ததனை அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களின் வழியே அறியமுடிகிறது. ஐந்திணைகளில் அடையாளம் காணப்படும் ஊர்களையும்; அவ்வூர்களைப் பாடிய புலவர்களையும், பாடப்பட்ட தலைவர்களையும்; அவர்களது ஆட்சி முறையினையும், மக்களையும்; அவர்களது பண்பாட்டுப் பழக்கவழக்கங்களையும் தொகுத்து ஆராயும் போது பல செய்திகள் புலப்படும்.

### 5.3.2 சங்ககாலத்தில் ஊர்ப்பகுப்பு

சங்கால மக்களின் வாழ்வியல் எச்சங்களைக் குறித்த ஆய்வில் முதற்படியாக அவர்கள் காலத்தில் காணப்பட்ட ஊர்கள் குறித்து ஆய்வது அவசியமாகின்றது.

ஊர்களின் வரலாறு குறித்து அறிகின்றபோது, அவ்வூர்களில் வாழ்ந்த குடிகளின் வரலாற்றினையும் தெரிந்துகொள்ளமுடிகிறது. சங்ககாலத்தைச் சேர்ந்தவை என அறியப்படும் ஊர்கள்; சங்க இலக்கியங்கள், சங்ககால ஊர்ப்பெயர் அமைப்புகள் (எ.கா குடி, குறிச்சி, பாடி, சேரி போன்ற போன்ற அக்கால வழக்கச் சொற்களோடு தொடர்புள்ளவை) கல்வெட்டுக்கள், தொல்லியல் ஆய்வுகள் ஆகியவற்றின் வாயிலாக பெறப்படுகின்றன. அவ்வகையில் சங்ககாலத்தில் திணை அடிப்படையில் ஊர்ப்பெயர்கள் பகுக்கப்பட்டு இருந்ததைப் பார்க்கமுடிகின்றது. இலக்கண ஆசிரியர்களும், உரையாசிரியர்களும் இதனைக் கோடிட்டுக் காட்டியுள்ளனர்.

5.3.3 **திணைசார் ஊர்கள்**

தனியொரு குடும்பம் வாழ்ந்த இடம் வீடு என அழைக்கபட்டது. பல (வீடுகள்) குடும்பங்கள் சேர்ந்து கூட்டுச் சமூகம் உருப்பெறுகின்றது. அத்தகைய சமூகம் கூடி வாழும் பகுதி ஊர் எனப்படுகிறது. நிலத்தின் கூறுகளுக்கேற்ப பொதுவான பெயர் ஊருக்குப் இடப்பட்டது. தமிழின் மிகத்தொன்மையான இலக்கண நூலாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் மக்கள் வாழுமிடங்களை 'ஊர்' என்றே குறிக்கப்பட்டுள்ளது.

"ஊரும் பெயரும் உடைத்தொழில் கருவியும்
யாரும் சார்த்தி அவை அவை பெறுமே" (தொல் மரபு:76)

மக்கள் பெயர்களோடு அவர்கள் வசிக்கும் ஊர்ப்பெயரினைச் சேர்த்தே வழங்கும் வழக்கம் குறித்து இந்நூற்பாவில் விளக்கப்பட்டுள்ளது. இக்கூற்றினை மெய்ப்பிக்கும் விதமாக சங்ககாலப் புலவர்கள் தம் பெயர்களோடு ஊர்ப்பெயரினையும் சேர்த்தே குறித்துள்ளதனைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். சங்ககால மக்கள் வாழ்ந்த இருப்பிடங்கள் அதன் அளவு, சூழல், அமைப்பு கருதி; ஊர், சிற்றூர், பேரூர், பட்டினம், பாக்கம், சேரி, சிறுகுடி, குடி, குறிச்சி, பாடி, பள்ளி, பறந்தலை என அழைக்கப்பட்டது. இவற்றில் ஐவகை நிலங்களுக்கு எவை எவை பொருந்தும் எனவும் உரையாசிரிகள் விவரித்துள்ளனர். அதனடிப்படையில்,

குறிஞ்சி நில ஊர்கள் - சிறுகுடி, குடி, குறிச்சி

முல்லை நில ஊர்கள் - பாடி, சேரி, பள்ளி

மருத நில ஊர்கள் - ஊர்

நெய்தல் - பட்டினம், பாக்கம்

பாலை - பறந்தலை

மேற்கண்ட இப்பாகுபாட்டினைத் தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். இவர் குறித்த வகைப்பாட்டின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் பல ஊர்களின் பெயர்கள் காணப்பட்டன. சான்றாக, சிறுகுடி, ஆவினன்குடி, மாங்குடி, ஊணூர், ஆமூர், குராலம்பறந்தலை, குறுக்கைப் பறந்தலை போன்றவற்றைக் கூறலாம். இப்பகுப்பில் சிறுகுடி எனும் பதம் ஐவகை நிலங்களிலும் ஊர்ப்பெயராக வருதலைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. சேரி என்பது முல்லைநில ஊர்ப் பெயராகவும், நெய்தல் நில ஊர்ப்பெயராகவும் அமைந்தது. தவிர பரத்தையர், பரதவர் ஏனைய அடித்தட்டு மக்கள் வாழும் இடங்களையும் அக்காலத்தில் இப்பெயராலேயே குறிப்பிட்டனர். இன்றைக்கும் தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் பகுதிகளைக் குறிப்பதற்கும், கடலோரப்பகுதிகளைக் குறிப்பதற்கும் சேரி எனும் சொல் பயன்படுத்தப்படுகின்றது. இலக்கண ஆசிரியர்களின் கூற்றுப்படி அக்காலத்தில் முல்லை நிலத்து ஊர்கள் சேரி எனப்பட்டன. ஊரின் புறத்தே உள்ள குடியிருப்புகளைக் குறிப்பதற்காக அன்றைக்கு இப்பெயர் வழங்கப்பட்டது. மேலும், மக்கள் சேர்ந்து வாழுமிடம் 'சேரி' எனக் காரணப் பெயராகவும் வழங்கியிருக்கிறது; பார்ப்பனச்சேரி, இடையச்சேரி என்று மக்கட் குழுக்களின் பெயர்களுடன் சேர்ந்து குறிப்பிடப்பட்டது. இவ்வாறு சங்ககால மக்கள் வாழ்ந்த இருப்பிடங்களுக்கான பெயர்கள் வழங்கப்பட்டன.

#### 5.3.4 சிற்றூர் – பேரூர்

சங்ககாலத்திலும், தற்காலத்திலும் வழங்கப்படுகின்ற சொற்களாக இவ்விரு சொற்களும் விளங்குகின்றன. ஆங்கிலத்தில் Rural – Urban எனக் குறிப்பிடப்படுகின்றன. மக்கள் அடர்த்தி குறைவானதும், எளிய இருப்பிடங்களைக் கொண்டதும், பண்டைய

இனக்குழு வாழ்வின் தொடர்ச்சியான பழக்கவழக்கங்களைப் பின்பற்றியும் வாழும் மக்கள் வாழ்கின்ற பகுதிகள் சிற்றூர்கள் (Rural) எனப்பட்டன. மக்கள் குடிகொண்ட நிலப்பரப்பின் அளவு கருதியும் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். இங்கு வாழும் மக்களின் முதன்மை அடையாளங்களாக; உழவுத்தொழிலும், கால்நடைகளும் விளங்குகின்றன. பொருளாதார ஆதாரங்களும் அவைகளே. அடிப்படையான வசதிகளும், வாய்ப்புகளும் இங்கு பொதுவாகக் குறைவாகவே காணப்படும்.

**5.3.4.1 பேரூர் (Urban)**

பேரூர் (Urban, City, Town) என்பது வடமொழியில் நகரம் எனச் சுட்டப்படும். சங்காலத்தில் வாணிபத் தொழில் எங்கெல்லாம் சிறப்புற்று விளங்கியதோ அங்கெல்லாம் பேரூர்கள் தோற்றம் பெற்றன. பொதுவாக மருதம், நெய்தல் நிலங்களில் பேரூர்கள் காணப்பட்டன. இங்கு தொழில் வளம் உச்சத்தில் இருந்ததாகச் சங்க இலக்கியங்களில் பார்க்கின்றோம். முத்தும், பொன்னும், மணியும் நகரங்களில் வாணிபப் பண்டங்களாக விளங்கின. பொருளாதாரத்தில் உயரிய வளர்ச்சியைப் பேரூர்கள் அடைந்திருந்தன. அதன் தாக்கம் அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்வியல் கூறுகளில் வெளிப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. செவ்வனே கட்டப்பட்ட உறுதியான மாடமாளிகைகள், அரண்கள் சூழப்பட்ட கோட்டைகள், எழுநிலை கொண்ட மனைகள் (அடுக்குமாடி வீடுகள்), அரசர்கள் வாழும் அந்தப்புரங்கள் அரண்மனைகள் அன்றைய பேரூர்களில் வெகுவாகக் காணப்படும். இங்கு மக்களின் அடர்த்தி அதிகமாகும். மக்கள் வாழ்கின்ற நிலப்பரப்பின் அளவும் பரந்துகாணப்படும். பேரூர் என்றும் நகர், பட்டினம் என்றும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. பெருவேந்தர்கள், முதுகுடி மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டவையாக பேரூர்கள் விளங்கின. சங்ககாலத்தில் காணப்பட்ட பேரூர்களுள் மதுரை, புகார், கொற்கை, உறையூர், முசிறி, தொண்டி போன்றவை முக்கியமானவையாகும்.

**5.3.4.2 சிற்றூர் (Rural)**

சிற்றூர் எனும் தமிழ்ச்சொல் ஆங்கிலத்தில் Village, Rural, Slum என்றும், வடமொழியில் கிராமம், மங்கலம்பள்ளி என்றும் குறிப்பிடப்படுகின்றன. பொதுவாகச்

சிறிய அளவிலான வளர்ச்சியடையாதகுடியிருப்புக்களைக் கொண்டதும், பரப்பளவில் குறுகிய அளவினதுமான இடங்களைச் சிற்றூர்கள் என்பர். சங்ககாலத்தைப் பொருத்தமட்டில்; இது சீறூர் என்று குறிப்பிடப்படுகின்றது. கொண்டும், கொடுத்தும் வாழும் இனக்குழு மரபு கொண்ட மக்கள் கூட்டங்கள் எளிமையாக வாழ்ந்துவருவர். குடிசைகளும், சிறிய வீடுகளும் இங்கு காணப்பட்டன. தொழில் என்பது பாரம்பரியமிக்க சுய தொழில்களே இங்கு நடைபெறும். அது விவசாயம், கைவினை என்றவாறு அமையும். சீறூர் மன்னன் எனும் இனக்குழுத்தலைவன், கிழார்கள், குறுநில மன்னர்கள், குலத்தலைவர்கள் வழிகாட்டுதலின்படி சிற்றூர்கள் இயங்கின. பேரூர்கள் பல சங்ககாலத்தில் காணப்படினும், அவை முற்காலத்தில் சிற்றூராக இருந்து பின்பு வாணிபத் தொடர்புகள் மூலம் வளர்ச்சி பெற்று விரிவாகியிருத்தல் வேண்டும். இன்றைக்கு இந்தியாவில் இருக்கக் கூடிய பெருநகரங்கள் யாவும் ஒரு காலத்தில் சிற்றூராகவே இருந்திருக்க வேண்டும். காரணம், பேரூர்கள் திடீரென்று உருவாகியிருக்க வாய்ப்பில்லை. ஒவ்வொரு கட்டத்திலும் அவை வளர்ச்சி பெற்று பெருநகராக உருப்பெறுகின்றன. இதனையே Urbanization என்கின்றனர்.

**5.3.5 சங்ககாலத்து ஊர்கள்**

தமிழக வரலாற்றினைப் பின்னோக்கிப் பார்க்கும் போது, இம்மண்ணை அந்நியர்கள் தம் சூழ்ச்சியால் வசப்படுத்தி ஆண்டு வந்தமை புலப்படும். அவ்வாறு ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களால் பல மொழிக்கலப்பு இங்கே விதைக்கப்பட்டன. அவ்வகையில் வடமொழி, பாரசீகம், அரபு, ஆங்கிலம், தெலுங்கு எனப் பலமொழிகள் தமிழுடன் கலக்கப்பட்டன. அதனால் தமிழகத்தில் வழங்கப்பட்ட ஊர்ப்பெயர்கள் மொழிமாற்றம் செய்யப்பட்டன. தமிழ்ப்பெயர்கள் அழிய நேரிட்டது. இன்று சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட பெரும்பாலான ஊர்களைக் காணமுடியவில்லை. சங்க இலக்கியங்களில் ஏறக்குறைய 240 ஊர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளதாக ஆர்.ஆளவந்தார் தம் ‘இலக்கியங்களில் ஊர்ப்பெயர்கள்’ எனும் நூலில் குறிப்பிடுகின்றார். இவற்றுள் பிற நாட்டு ஊர்களும் இடம்பெற்றுள்ளன எனவும் அவர் விளக்குகின்றார். அவ்வகையில் சங்ககாலப் புலவர்களின் பாடல்களில் நேரடியாகவும்,

மறைமுகமாகவும் அறியும்படியான ஊர்ப்பெயர்கள் பலவாறாகக் காணப்படுகின்றன. அவற்றில் சிற்றூர்கள் என இனம்காணப்படுபவை பின்வருமாறு; இவை பிற்காலங்களில் பேரூர்களாக வளர்ச்சியடைந்திருக்கலாம்.

**5.3.6 சங்ககாலத்துச் சிற்றூர்கள்**

1. அந்தியூர்
2. அழுங்கல்மூதூர்
3. அழுந்தூர்
4. அள்ளூர்
5. ஆமூர்
6. ஆய்குடி
7. ஆர்க்காடு
8. ஆலங்குடி
9. ஆலத்தூர்
10. ஆவினன்குடி
11. ஆவூர்
12. ஆலம்பேரி
13. இளம்புல்லூர்
14. இடையாற்றுமங்கலம்
15. இடைக்காடு
16. இடைக்குன்றூர்
17. இருந்தையூர்
18. இருப்பையூர்
19. இலவந்திகைப்பள்ளி
20. உகாய்க்குடி
21. உம்பற்காடு
22. உறத்தூர்
23. ஊனூர்
24. எருக்காட்டூர்
25. எழில்
26. எயில்
27. எறிச்சலூர்
28. ஏணிச்சேரி

29. ஐயூர்
30. ஒக்கூர்
31. ஒகந்தூர்
32. ஒல்லையூர்
33. கட்டூர்
34. கடம்பனூர்
35. கடியலூர்
36. கரும்பனூர்
37. கழுமலம்
38. கள்ளில்
39. கழாஅர்
40. காமூர்
41. கிள்ளிமங்கலம்
42. குராப்பள்ளி
43. குழுமூர்
44. குறுங்குடி
45. குறுங்கோழியூர்
46. குறும்பூர்
47. குன்றகநல்லூர்
48. குன்றூர்
49. குறுங்கை
50. கூடலூர்
51. கொழுகூர்
52. கொடுகூர்
53. கொடும்பை
54. கொண்கானம்
55. கொடுகூர்
56. கொடுமணம்
57. கோவல் (கோவலூர்)
58. கோவூர்
59. சாயக்காடு
60. சாலியூர்
61. சிக்கற்பள்ளி
62. சிறுதடி

63. சிறுமலை
64. சிறுகுடி (வாணன் சிறுகுடி,அருமன் சிறுகுடி)
65. சிறைக்குடி
66. செயலூர்
67. செல்லூர்
68. தலையாறு
69. தண்பனையூர்
70. தேனூர்
71. துவரை
72. நல்லூர்
73. நாலூர்
74. நிழல்
75. நீடூர்
76. நெடுங்காடு
77. நெல்லூர்
78. பந்தர்
79. பருவூர்
80. பருவூர்ப் பறந்தலை
81. பாண்சேரி
82. பாரம்
83. பாழூர் நெருஞ்சி
84. பாழி
85. பிசிர்
86. பிடவூர்
87. புறந்தை
88. பெருமையூர்
89. பொதினி
90. பொருந்தில்
91. மணம்கமழ் சேரி
92. மாங்காடு
93. மாந்தை
94. முள்ளூர்
95. மோகூர்
96. வட்டாறு

97. வல்லம்
98. வல்லார்
99. வாகை
100. வாகையூர்
101. வியலூர்
102. விளங்கில்
103. விரியூர்
104. வியலூர்
105. வீரை
106. வெள்ளைக்குடி
107. வெள்ளூர்
108. வேம்பி
109. வேம்பற்றூர்
110. வேளூர்
111. வைப்பு

இவற்றில் சில ஊர்கள் நேரடியாகவும், பல ஊர்கள் பெயர்மருவியும் இன்றளவும் இருந்துவருகின்றன.சங்க இலக்கியம் குறிக்கும் தொன்மையான சில ஊர்களில் முறைப்படி அகழாய்வுகள் நடைபெற்றுள்ளன. அவற்றின் மூலம் அவ்வூர்கள் இருந்தமையும், அங்கு மக்கள் வாழ்ந்தமையும் அகழாய்வில் உறுதி செய்யப்பட்டுள்ளன. அவ்வாறு செய்யப்பட்ட ஆய்வுகளின் மூலமாக பல்வேறு தொல்லியல் எச்சங்கள் அடையாளம் காணப்பட்டுள்ளன. பொதுவாக அண்மைக்காலங்களில் நடைபெற்ற ஆய்வுகளின் முடிவுகளைப் பார்க்கும் போது, பெருவாரியான தொல்லியல் களங்கள் யாவும் சங்ககாலச் சிற்றூர்களாக இருந்தவை என்ற கருதுகோளை முன்வைக்கும் விதமாகவே உள்ளன. காரணம், கிடைக்ககூடிய எச்சங்கள் யாவும் இனக்குழுச் சமூகத்தினரின் வாழ்வியலோடு தொடர்புடையவையாகவே உள்ளன. சான்றாக, நடுகல், முதுமக்கள் தாழி, பாறை ஓவியங்கள், கற்பதுக்கை, குகை வீடுகள் போன்ற வாழ்வியல் எச்சங்கள் யாவும் இனக்குழு மரபில் இருந்தவையாகும்.

### 5.4 திண்டுக்கல் மாவட்டத்தில் சங்ககால எச்சங்கள்

பொதுவாக அகழ்வாய்வுகள் மூலமாகவே பண்டைக்கால வாழ்வியல் எச்சங்கள் வெளிக்கொணரப்படுகின்றன. தமிழகத்தில் அகழ்வாய்வுப் பணிகள் ஆங்கிலேயர் ஆட்சிக் காலந்தொட்டே நடைபெற்று வருகின்றன. இவ்வகையான ஆய்வுகளை அறிமுகப்படுத்தித் தொடங்கிவைத்த பெருமை அவர்களையே சாரும். அவ்வகையில், தொல்பழங்காலத்தைத் தொல்லியல் ஆய்வாளர்கள் நான்கு வகைகளாகப் பிரிக்கின்றனர். அவை, 1. பழையகற்காலம், 2. நுண்கற்காலம், 3. புதியகற்காலம், 4. பெருங்கற்காலம். பழைய மற்றும் நுண்கற்காலங்களில் நாகரிக வளர்ச்சி மந்தமான நிலையில் இருந்தது. நாடோடி வாழ்க்கை மேற்கொண்ட மக்களது வாழ்வில் பெருத்த மாற்றங்கள் ஏற்படவில்லை. அதற்கான வாய்ப்பும், சூழலும் இருக்கவில்லை. ஆனால், மனித வரலாற்றில் பல மாற்றங்களைத் தருவித்தது புதிய கற்காலமேயாகும். இக்காலகட்டம் தொல்லியல் வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்ததாகத் திகழ்கின்றது. கற்கருவிகளில் புதுமையினை மக்கள் புகுத்திய நிகழ்வுகள் இத்தருணத்தில் நடைபெற்றது. விலங்குகளைப் பழக்கி வளர்க்கத் துணிந்ததும் இக்காலத்தில் தான். இக்காலத்தைய கருவிகள் தமிழகத்தின் பல்வேறு இடங்களில் கிடைத்துள்ளன.

புதியகற்கால மக்களின் அடுத்தகட்ட எழுச்சியே பெருங்கற்காலம். இக்காலத்தில் இனக்குழுவினைச் சேர்ந்தவர் எவரேனும் இறந்து விட்டால் அடக்கம் செய்து வழிபடுகின்ற முறை புழக்கத்தில் வந்தது. இறந்தவரின் ஆவி, கால்நடை வளர்ச்சிக்கும், வேட்டைத் தொழிலுக்கும் உதவியாகத் தங்களுடன் இருக்கும் என்று நம்பியதன் விளைவாக இவ்வாறு செய்திருக்கக் கூடும். இரும்பின் பயன்பாடு இக்காலத்தில் இருந்ததையும் அறியமுடிகின்றது. பயிரிட்டு விளைவிக்கும் நுட்பமும், புழங்குபொருட்களை உருவாக்கிப் பயன்படுத்தியதையும் காணமுடிகின்றது. இதுவரை செய்யப்பட்ட அகழாய்வுகள், மேற்பரப்பாய்வுகள் ஆகியவற்றின் அடிப்படையில் இவற்றின் காலங்கள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு கணிக்கப்படும் காலங்களில், மனித நாகரிகம் உச்சத்தில் இருந்த காலமே சங்ககாலம் (கி.மு.300-கி.பி.300) என

அறியப்படுகின்றது. இது பெரும்பாலான அறிஞர்களாலும் ஏற்றுக்கொள்ளப்படுவதாக உள்ளது. இக்காலகட்டத்தில் வாழ்ந்த தமிழர்களின் நாகரிக வாழ்வினை மெய்ப்பிக்கும் விதமாகத் தமிழகத்தில் நடைபெறும் தொல்லியல் ஆய்வுகளின் முடிவுகள் அமைகின்றன. அகழ்வாய்வுகள் மூலம் வெளிப்படும் புதைபொருட்கள் தொல்தமிழர்களின் வாழ்வியல் எச்சங்களே என அண்மைக் காலங்களில் தெரியவருகின்றது. சங்ககாலத்திற்கு முந்தைய காலகட்டப் பண்பாடுகளைப் பறைசாற்றும் வகையில் பெருங்கற்படைக்காலம் என அறியப்படும் காலத்தைச் சேர்ந்த மக்கள் பயன்படுத்தியவை திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள ஊர்கள் பலவற்றில் ஆங்காங்கே கிடைக்கப்பெற்றுள்ளன. குறிப்பாகச் சிறுமலை, தாண்டிக்குடி, பன்றிமலை, பெருமாள்மலை, கே.சி.பட்டி, கொடைக்கானல், அம்பிளிக்கை, பழனி, கலையமுத்தூர், இரவிமங்கலம், நெய்க்காரபட்டி, கருமலை, பெரியகோட்டை, அயிரைமலை, அம்பாத்துறை போன்ற இடங்களில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகளின் வாயிலாகக் கல்திட்டை, கல்பதுக்கை, கற்குவை, முதுமக்கள் தாழிகள், இரும்புக் கருவிகள், அணிகலன்கள் போன்றவை கிடைத்துள்ளன. இம்மாவட்டத்தில் தொல்தமிழர்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் இவையெனக் கொள்ள இடமுண்டு.

தமிழக வரலாற்றில் திண்டுக்கல் மாவட்டம் குறிப்பிடத்தகுந்த இடத்தினைப் பெற்றிருந்தாலும், அண்மைக்காலங்களில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வு முடிவுகளுக்குப் பின் ஆய்வாளர்களின் கவனத்தினைத் தன் பக்கம் ஈர்த்ததைத் தமிழுலகம் நன்கறியும். தொடக்கத்தில், இம்மாவட்டத்தின் குறிஞ்சி நிலப்பகுதிகளில் அநேகமான தொல்லியல் எச்சங்கள் கிடைத்தன. பின் ஆய்வாளர்களின் ஆய்வு வீச்சு பரவலான நாள்முதலாக; தொடக்ககால, சங்ககால மக்கள் இப்பகுதியில் வாழ்ந்ததற்கான எச்சங்கள் கிடைக்கப்பெற்ற செய்தி தினசரி ஏடுகளில் வெளிவந்தவண்ணம் உள்ளன. குறிப்பாக, பழனி மலை மற்றும் அதனை ஒட்டியுள்ள பகுதிகள், சிறுமலை, கொடைக்கானல் மற்றும் அதன் சுற்றியுள்ள மலைசார் ஊர்கள், தாண்டிக்குடி, பன்றிமலை போன்ற பகுதிகளில் தொல்பழங்கால மக்களின் வாழ்வியல் எச்சங்கள் கிடைத்துள்ளன.

### 5.4.1 கொடைக்கானல்

'மலைகளின் இளவரசி' என்று புகழப்படும் இக்குறிஞ்சி நிலப்பகுதி, மேற்குத்தொடர்ச்சி மலைமீது அமைந்துள்ளதாகும். தமிழக கேரள எல்லையாகவும், பழனிமலைத் தொடர்ச்சியாகவும் உள்ளது. இந்தியக் கோடைவாச தலங்களில் முக்கியமான ஒரு பகுதியாக இது விளங்குகின்றது. தமிழக வரலாற்றில் சங்ககாலத்துடன் தொடர்புடைய இப்பகுதியினை ஆங்கிலேயர் தான் முதன்முதலில் கண்டறிந்து சாலை அமைத்துக் குடியேறினர். "மதுரை மாவட்டத்தில் கோடைக்கானல் என இன்று அழைக்கப்படும் மலைக்குச் சங்ககாலத்தில் கோடைமலை என்று பெயர்"[2] எனும் குறிப்பின் வாயிலாக இம்மலை சங்ககாலத்தைச் சேர்ந்தது என்பது புலனாகின்றது. கொடைக்கானல் என்பது கோடைக்கானல் என்றே பழங்காலத்தில் பெயர்பெற்றிருந்தது. கோடை என்பது மேல்காற்று, வேனில்காலம், வெயில் என்றும்; கானல் என்பது மலைசார் சோலை எனவும் பிங்கலநிகண்டு பொருள் விளக்கம் தருகின்றது.

"கோடை என்றும் கோடைச் சிலம்பு என்றும் குறிப்பிடப்படும் இடங்கள் இன்றைய கொடைக்கானல் மலைப்பகுதியினைக் குறிப்பதாகக் கருதுகிறார் என். சுப்பிரமணியன். கோடை என்பது கோட்டூரின் மரூஉவென்றும் மலையில் அமைந்த ஊர்(கோடு-மலை;கோடு-ஊர்) ஆதலின் இவ்வாறு பெயர்பெற்றதென்றும் அகநானூற்று உரையாசிரியர் குறிப்பார். ஆனால் கோடை என்பதனைத் தனிப்பெயராகக் கொண்டு, கோடைக்காற்று (மேல்காற்று) இங்கிருந்து வீசுவதால் இப்பெயர் இம்மலைக்கு வந்திருக்கலாமென என்.சுப்பிரமணியன் மேலும் கூறுகிறார்"[6] கொடைக்கானல் மலைப்பகுதியில் மேல்காற்று வீசுவது இயல்பு. இதற்குச் சான்றாக இங்குள்ள தொப்பி தூக்கிப்பாறை எனும் பகுதி. இங்கு ஒரு மிதமான எடையுள்ள பொருளை தூக்கி வீசுகையில் மேல்காற்று வீசுவதால் அது தள்ளப்பட்டு மீண்டும் எறிந்த இடத்திற்கே வரும். ஆதலால் மேல்காற்று வீசக்கூடிய சோலைக்காடுகள் நிறைந்த பகுதியாதலின் கோடைக்கானல் எனப் பெயர்பெற்றிருக்கலாம். தற்போதுள்ள கொடைக்கானல் நகரம் பண்டைய கோடைக்கானல் அல்ல. இது ஆங்கிலேயரால் நிர்மாணிக்கப்பட்ட

ஊராகும். மாறாக இலக்கியங்களில் குறிப்பிடப்படும் கோடைக்கானல் என்பது, குறிஞ்சிநில மக்கள் வாழ்ந்த சிற்றூராகவே இருந்திருக்க வேண்டும். சங்க இலக்கியத்தில் கோடைப்பொருநன் கடியவேட்டுவன் எனும் மன்னன் என்பவனது ஆட்சிக்குட்பட்ட பகுதியாக இப்பகுதி அறியப்படுகின்றது. இவன் நோன்சிலை வேட்டுவன் எனவும் சிறப்பிக்கப் பெற்றுள்ளான்.

"விறற் சினம் தணிந்த விரை பரிப் புரவி
உறுவர் செல் சார்வு ஆகி செறுவர்
தாள் உளம் தபுத்த வாள் மிகு தானை
வெள் வீ வேலிக் கோடைப் பொருந!
முறியவும் பெரியவும் புழை கெட விலங்கிய
மான் கணம் தொலைச்சிய கடு விசைக் கதநாய்
நோன் சிலை வேட்டுவ! நோய் இலையாகுக! " (புறம் 205:3-9)

கடியவேட்டுவன் எனும் இச்சிற்றூர் மன்னன் விரைந்து செல்லும் ஆற்றல் கொண்ட குதிரைப்படைகளை தன்னகத்தே உடையவன். தன்னை நாடிவரும் வறியவருக்கு யானைத் தந்தங்களை வாரிவழங்கும் வள்ளல் தன்மை கொண்டவன். மான் கூட்டங்களை வேட்டையாடும் நாய்களை உடையவன். இக்கோடைமலைத் தலைவன் என்று இந்த இனக்குழுத் தலைவனை பெருந்தலைச் சாத்தனார் விவரிக்கின்றார். இம்மன்னன் வேட்டுவர் (வேடர்) குலத்தைச் சார்ந்தவன் என்பது இங்குத் தெளிவாகின்றது. தற்போதுள்ள கொடைக்கானல் அருகே உள்ள வேடபட்டி எனும் ஊர் முற்காலத்தில் வேடர்கள் வாழ்ந்ததாக இருக்கலாம். மேலும் பெருமாள்மலைக்குக் கீழே உள்ள கடியங்கானல் எனும் ஊரினை கடியன் கானல் என்று பொருள் கொள்வோமாயின் கடியவேட்டுவன் பெயரினைக் கொண்ட ஊராகத்தெரிகின்றது. இன்றும் இப்பகுதியில் வேட்டைத்தொழில் புரியும் குறிஞ்சிநில மக்களின் தாக்கங்களை உடைய பழங்குடியின மக்களே அதிகளவில் வசிக்கின்றனர். இப்பகுதியில் முதுமக்கள் தாழிகள் எனும் தொல்லியல் எச்சங்கள் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். வத்தலக்குண்டிலிருந்து

கொடைக்கானல் செல்லும் சாலையில் கொடைக்கானலுக்கு முன்பாக 'Dalamens circle' எனும் பகுதியில் இவை எடுக்கப்பட்டன. "இம்மலைப் பகுதிகளில் நெடுங்காலத்திற்கு முன் மனிதர் வாழ்ந்திருக்கின்றனர் என்பது, இன்றும் சில இடங்களில் இருக்கும் டால்மன் குகை வீடுகளிலிருந்து தெரிகிறது. இத்தகைய வீடுகளில் வாந்தவர்களே கொடைக்கானலின் ஆதி மனிதர்களாவர்"[4] எனும் இக்கருத்து இப்பகுதியினைக் குறித்த வரலாற்றுப் பிண்ணனியை உணர்த்துவதாக உள்ளது.



செண்பகனூர் அருங்காட்சியகத்திலுள்ள கோடைமலை சார்ந்த சங்ககாலத் தொல்லியல் எச்சங்கள்

#### 5.4.2 பன்றிமலை (பண்ணி மலை)

கோடைமலைத் தொடர்ச்சியில் உள்ள மற்றொரு தொன்மையான ஊராக இது உள்ளது. சங்க இலக்கியங்களில் கோடைப்பொருநன் கடிய வேட்டுவன் என்பானைத் தொடர்ந்து பண்ணி என்றொரு இனக்குழுத் தலைவன் குறித்த குறிப்பு காணப்படுகிறது. இவனும் கோடைப்பொருநன் என்ற அடைமொழியுடன் அழைக்கப்படுகிறான். இதன்மூலம், கோடைப்பொருநன் எனும் சிறப்புப் பெயர் கொடைமலையினை ஆளும் குறுநிலத் தலைவருக்கு வழிவழியாக வழங்கப்படும் பெயர் என்பது தெரியவருகின்றது. பண்ணி கடியவேட்டுவனை அடுத்து

இப்பகுதியினை வழிநடத்தியவன் என்பது புலனாகிறது. இச்சீறூர்த் தலைவன் 'தென்னவன் மறவன்', 'கோடைப்பொருநன் பண்ணி' என்றெல்லாம் அழைக்கப்படுகின்றான். பண்ணியாமலை (பண்ணியின் மலை), பண்ணைக்காடு (பண்ணியின் காடு), பண்ணுவார்பட்டி (பண்ணியார் பட்டி), பண்ணைப்பட்டி (பண்ணியின் பட்டி) போன்ற இச்சுற்றுவட்டாரப் பகுதியிலுள்ள ஊர்கள் பண்ணியை நினைவூட்டுவதாக உள்ளது. பின்வரும் சங்க இலக்கியப் பாடலில் பண்ணி குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது.

"குறவர் தந்த சந்தின் ஆரமும்
இரு பேர் ஆரமும் எழில் பெற அணியும்
திரு வீழ் மார்பின் தென்னவன் மறவன்
குழியில் கொண்ட மராஅ யானை
மொழியின் உணர்த்தும் சிறு வரை அல்லது
வரை நிலை இன்றி இரவற்கு ஈயும்
வள் வாய் அம்பின் கோடைப் பொருநன்
பண்ணி ........" (அகம் 13: 4-11)

பண்ணி யானைகளைப் பிடித்துப் பழக்கித் தன்னை நாடி வரும் இரவலர்க்கு வழங்கும் தன்மை கொண்டவன். தென்நாட்டின் அரசனான பாண்டியனிடம் போர்த்தொழில் புரிந்தவனாதலின் 'தென்னவன் மறவன்' எனப் பாடலில் சிறப்பிக்கப்படுகின்றான். சங்கப்புலவரான பெருந்தலைச் சாத்தனார் என்பவரே கடிய வேட்டுவனையும், பண்ணியினையும் போற்றிப் பாடியுள்ளமையால், இவ்விருவரும் ஒரே பகுதியினைச் சார்ந்தவர்களே என்பதும் தெளிவாகின்றது. இன்றைக்குக் கோடைமலைத் தொடரில் உள்ள பன்றிமலை எனும் ஊர் பண்ணியின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருந்திருக்க வேண்டும். அது பண்ணிமலை என்று வழங்கப்பட்டு, பின்னாளில் மருவி, மக்களின் பேச்சு வழக்கில் பன்னிமலை என்றும், எழுத்து வழக்கில் பன்றிமலை எனவும் தவறுதலாக வழங்கப்படுகிறது. இங்கு சங்ககால மக்கள் வாழ்ந்ததற்கு அடையாளமாக இம்மலையினைச் சுற்றிலும் நடைபெற்ற

அகழ்வாய்வுகளில் கண்டறியப்பட்ட கற்குகைகள், முதுமக்கள் தாழிகள் போன்ற எச்சங்கள் சாட்சியாக அமைகின்றன. தவிர, சிறுவரை எனும் பகுதியும் இவன் தலைமையின் கீழ் இருந்ததாக அறிகின்றோம். வரை என்பதற்கு மலை என்று கழக அகராதி விளக்கம் தருகின்றது. பன்றிமலைக்கு நேரெதிரே அமைந்துள்ள சிறுமலை என்பதே இங்கு சிறுவரை எனக் குறிப்பிடப்பட்டிருப்பின் சிறுமலை உள்ளிட்ட பகுதிகளுக்கும் இவன் தலைவனாக இருந்திருக்கலாம் எனவும் எண்ணுவதற்கு இடமுண்டு.

5.4.3 **தாண்டிக்குடி**

கோடைமலைத் தொடரில் உள்ள குறிஞ்சிநிலம் சார்ந்த ஊரான தாண்டிக்குடி, கடல் மட்டத்திலிருந்து சுமார் 4400 அடி உயரத்தில் அமைந்துள்ள ஊராகும். “கலித்துருமந் தான்றி”[5] தான்றி என்பது ஒருவகை மரம் என்பதும், இது மலைகளில் காணப்படும் என்றும் நிகண்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆகவே தான்றி மரங்கள் அதிகமாகக் காணப்படும் பகுதியாதலின் இப்பெயர் பெற்றிருக்க வேண்டும். குறிஞ்சிநில ஊராதலின் குடி என்ற பின்னொட்டுடன் தோன்றிக்குடி என முடிகின்றது. இங்கு கிடைக்கப்பெற்ற கி.பி 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் இவ்வூரினை தான்றிக்குடி எனக் குறிக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்பு இவ்வூர் தோன்றிக்குடி என அழைக்கப்பட்டிருக்க வேண்டும். சங்ககாலத்தில் வாழ்ந்த சீறூர் மன்னனான தாமான் தோன்றிக்கோன் என்பவன் இப்பகுதியினை ஆட்சி செய்ததாகத் தெரிகின்றது.

“வான்தோய் உயர்சிமைத் தோன்றிக் கோவே” (புறம் 399:34)

தோன்றிக்கோ எனும் இம்மன்னன் ஆண்ட மலை கரூருக்கு அருகிலுள்ள தான்தோன்றிமலை என்று ஒருசாரரும்; திண்டுக்கல் மாவட்டத்திலுள்ள தாண்டிக்குடிமலை என மற்றொரு சாரரும் கருதுகின்றனர். ஐயூர் முடவனார் பாடியுள்ள இப்புறப்பாடலில், அருவிகள் விழக்கூடிய வானுயர்ந்த மலையாகத் தோன்றிமலையினைக் குறிப்பிடுகின்றார். இது தாண்டிக்குடி மலைக்கே முற்றிலும் பொருந்துவதாக உள்ளது. தவிர, தமிழக வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம்வகிக்கும்

இவ்வூரில் சில ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற அகல்வாய்வில் சங்ககால மக்கள் இப்பகுதியில் வாழ்ந்ததற்கான அரிய தொல்லியல் எச்சங்கள் பல கிடைத்துள்ளன. அவற்றில் அணிகலன்கள், கல்லறைகள், தாழிகள், குகைகள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன. தாண்டிக்குடிக்கு நேர் கீழே உள்ள சிற்றூர் அய்யம்பாளையம் என்பதாகும். தாமான் தோன்றிக்கோவைப் புகழ்ந்து பாடிய சங்கப்புலவர் ஐயூர்முடவனார் இவ்வூரை சார்ந்தவர் என்ற கருத்தும் நிலவுகின்றது. ஐயூர் என்பதே மருவி பிற்கால நாயக்கர் ஆட்சிக்காலத்தில் ஐயம்பாளையம் என்றாகியிருக்க வேண்டும் என்னும் கருத்து ஆய்வாளர்களிடையே நிலவுகின்றது. இங்கு குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

மேலும், தாண்டிக்குடி காஃப்பி ஆராய்ச்சி நிலைய வளாகம், பொம்மகாடு, முருகன்கோவில், சேத்துக்காடு, போன்ற இடங்களில் நடைபெற்ற அகல்வாய்வில் மிகப்பழமையான கல்லறைகள் காணப்பட்டன. இங்கு கிடைத்த சூதுபவளம், பளிங்குக்கல் மணிகள் போன்ற யாவும் இந்தியாவில் வேறெங்கும் கிடைத்திராத தொல்லியல் எச்சங்களாகக் கருதப்படுகின்றது. இவற்றை 'கார்பன் 14' என்ற ஆய்வுமுறைக்கு உட்படுத்தி ஆய்ந்த தொல்லியல் அறிஞர்கள், கி.மு.500 - கி.பி.200 என இப்பொருட்களின் காலத்தினைக் கணிக்கின்றனர். ஆகவே சங்ககாலத்திற்கும் இப்பகுதிக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பது உறுதிசெய்யப்படுகிறது. மேலும் பூர்வீகமாக இம்மலைசார்ந்த பகுதிகளில் வாழ்பவர்கள் பெரும்பாலும் இனக்குழு வாழ்வின் அடையாளங்களோடு வாழும் பழங்குடியினரேயாவர். இப்பகுதியில் நடைபெற்ற தொல்லியல் ஆய்வுகளின் மூலமாகவே இங்கு சங்ககால எச்சங்கள் இருப்பது வெளியுலகிற்குத் தெரிய வந்தது. சங்க இலக்கியப் புறப்பாடல்களில் ஐயூர்முடவனாரால் குறிப்பிடப்படும் தாமான் தோன்றிக்கோ எனும் சீறூர் மன்னன் வாழ்ந்த பகுதி இதுவாகத்தான் இருக்கும் என்பதற்கு இங்கு அகழ்ந்தெடுக்கப்பட்ட எச்சங்கள் போதிய சான்றுகளாக விளங்குகின்றன.





தாண்டிக்குடி மலையும் தொல்லியல் எச்சங்களும்

### 5.4.4 பொருந்தல் (பொருந்தில்)

திண்டுக்கல் மாவட்டம் பழனிக்கு அருகில் உள்ளதே பொருந்தல் எனும் சிற்றூர். இங்கு 2009 ஆம் ஆண்டு பாண்டிச்சேரி வரலாற்றுத்துறைப் பேராசிரியர்

கா.இராஜன் மற்றும் அவரது குழுவினரால் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வு தமிழக வரலாற்றில் புதிய திருப்பத்தினை ஏற்படுத்தியுள்ளது. பேராசிரியர் கா.இராஜன், துவாரகா, பூம்புகார், ராமாபுரம், பெரியபட்டினம், கொடுமணல், மயிலாடும்பாறை, தாண்டிக்குடி ஆகிய பகுதிகளில் நடைபெற்ற அகழ்வாய்வுகளில் பங்கேற்றவர். தமிழ்நாட்டில் எண்ணற்ற தொல்லியல் களங்களைக் கண்டறிந்து ஆய்வு மேற்கொண்டவராவார். இப்பொருந்தல் அகழ்வாய்வில் காணப்பட்ட புதை குழியில் இருந்த நெல்மணிகள் தமிழக வரலாற்றையே மாற்றி எழுதவேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி இருக்கிறது என்றால் அது மிகையில்லை. இங்கு இறந்த ஒருவரைப் புதைத்த குழியில் குடுவை நிறைய நெல்மணிகள் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. “இரு கூறாகப் பிரிக்கப்பட்டுள்ள இக்கற்பதுக்கையில் கருப்பு சிவப்பு நிறம் கலந்த மண்பாண்டங்களும், சிவப்பு நிற மட்பாண்டங்களும், பளபளபாக்கப்பட்ட கருப்புநிற மட்பாண்டங்களும், நான்கு கால்களையுடைய மண்ஜாடிகளும், குவளைகளும், தட்டுகளும், குடங்களும், இவற்றை வைப்பதற்கு உரிய புரிமணைகளும் இறந்தவருக்கு ஈமப்பொருட்களாக வைக்கப்பட்டுள்ளன. இக்கற்பதுக்கையினைச சுற்றி 12.50 விட்டமுள்ள கல்வட்டம் ஒன்று காணப்படுகின்றது. இக்கற்பதுக்கையில் நூற்றுக்கணக்கான மட்பாண்டங்கள், 7500க்கும் மேற்பட்ட மணிகள் காணப்படுகின்றன”[6] இறந்துபோன ஒருவரைப் பல்வேறு பொருட்களோடு வைத்துப் புதைக்கும் வழக்கம் அன்று நடைமுறையில் இருந்துள்ளது. அங்ஙனம் அக்கல்லறையில் நெல்லையும் அத்துடன் வைத்துப் புதைத்திருக்கிறார்கள். மட்கிப்போகாமல் இருந்த அந்நெல்மணிகள் தொல்தமிழரின் வரலாற்றைத் தீர்மானிக்கும் காரணியாக இப்போது உருப்பெற்றுள்ளது.

காலக்கணிப்பு வல்லுநர்களின் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட அந்நெல்மணிகளின் காலம் தமிழர்களது நாகரீக வாழ்வின் தொடக்கத்தினை மேலும் பின்னோக்கி நகர்த்திச் செல்கின்றது. பொருந்தல் அகழ்வாய்வின்போது எடுக்கப்பட்ட நெல், பயிர் செய்து விளைவிக்கப்பட்டதா அல்லது இயற்கையாக விளைந்ததா என்று முதலில் கண்டறிய முடிவு செய்யப்பட்டது. நெல்லின் காலத்தை அறிவியல் முறைப்படி

ஆராய வேண்டும் என்று அமெரிக்காவில் இருக்கும் 'பீட்டா அனலிடிக் லேப்' என்ற ஆய்வுக்கூடத்துக்கு அனுப்பப்பட்டது. அங்கு மேற்கொள்ளப்பட்ட புதுவிதமான ஏ.எம்.எஸ் (AMS - Accelerator Mass Spectrometry) என்ற பரிசோதனையில் அந்த நெல்லின் காலம் கி.மு.490 எனக் கண்டறியப்பட்டுள்ளது. மேலும், இரண்டு முறை (கார்பன் 14) ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட நெல்மணிகள் காலத்தால் மிகவும் தொன்மையானது என்று அறிவியல் அடிப்படையில் உறுதிசெய்யப்பட்டுள்ளது. இம்முடிவு தமிழர்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே பயிரிடல் நுட்பத்தினை பெற்றிருந்ததை உணர்த்துவதாக உள்ளது. பொருந்தல் நெல்லின் தொன்மை, தமிழர்கள் நெடுங்காலமாக வேளாண் உற்பத்தியில் ஈடுபட்டிருந்தார்கள் என்பதை மட்டும் விளக்குவதாக இல்லை. தமிழர்களுக்கென்று தனித்த எழுத்துமுறை பன்னெடுங் காலந்தொட்டே இருந்துள்ளதனையும் உணர்த்துகின்றது. இதற்குச் சான்றாக அகழ்வாய்வுக் களத்தில் கிடைத்த சுடுமண்ணாலான புரிமனை ஒன்றில் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்புகள் ('வயிர') காணப்படுகின்றன.



சூது பவள மணிகள் மற்றும் பொம்மைகள், மண்குடுவைகள்



நெல்மணிகள், எழுத்து பொறிக்கப்பட்ட மண் ஓடுகள், மண்ஜாடிகள், ஆய்வுக்களம்



அகழ்வாய்வு நடைபெற்ற இடமும், கிடைக்கப்பெற்ற மண் பாத்திரங்கள், மணிகளும், பொம்மைகளும்

அகழ்வாய்வில் நெல் தவிர தந்தத்தால் செய்யப்பட்ட தாயம், விளையாட்டுப் பொருட்கள், கண்ணாடி மணிகள் போன்றவையும் அதிகளவில் கிடைத்திருக்கின்றன. இந்த ஆய்வின் மூலமாக இப்பொருந்தல் என்பது பொருந்தில் என அழைக்கப்பட்ட

சங்ககாலத்தைச் சார்ந்த ஓர் சிற்றூர் என்பது தெளிவாகிறது. சங்ககாலப் புலவருள் பொருந்தில் இளங்கீரனார் எனும் புலவர் இவ்வூரைச் சேர்ந்தவர்தான் என்பதும் இச்சிற்றூரின் தொன்மைக்குச் சான்றாக உள்ளது. "பொருந்தில் இளங்கீரனார் என்பாரை நோக்குக. இவர் பொருந்தில் எனும் சிற்றூரில் பிறந்தவராதலின், பொருந்தில் இளங்கீரனார் என அழைக்கப்படுகின்றார். பொருந்தில் என்பது, கிடங்கில், விளங்கில் என்பன போல ஓர் ஊராம்; சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாராட்டிய புறநானூற்றுச் செய்யுள் ஒன்றும் பாலைத் திணைப்பொருளாக வந்த அகநானூற்றுச் செய்யுட்கள் இரண்டும் இவர் பாடிய பாடல்களாம்"[7] என்ற கருத்து பொருந்தில் சங்ககாலச் சிற்றூரே என்பதற்கு வலுசேர்ப்பதாக உள்ளது. மேலும் இப்பகுதி ஓர் இனக்குழுத்தலைவனால் (சீறூர் மன்னன்) ஆளப்பட்டது என்பது அகழ்வாய்வு மூலமாகப் புலனாகின்றது. அதனை பின்வரும் கூற்று மெய்ப்பிக்கின்றது. "இக்கற்பதுக்கை இப்பகுதியில் வாழ்ந்த குறுநில மன்னனுக்கு அல்லது தலைவனுக்கு எடுக்கப்பட்டதாகவே கருதவேண்டியுள்ளது"[8] கோடைமலை அடிவாரத்தில் இச்சிற்றூர் அமைந்துள்ளதனால் பொருந்தில் எனும் பெயர் பொருநன் (கோடைப் பொருநன் கடியவேட்டுவன், கோடைப் பொருநன் பண்ணி) என்ற கோடைமலை மன்னனின் அடைமொழியோடு தொடர்புடையதோ என்று எண்ணவும் இடமுண்டு.

### 5.4.5 சிறுமலை

திண்டுக்கலுக்குக் கிழக்கே அரண் போன்று அமைந்துள்ளது இச்சிறுமலை. இம்மலையில் சங்ககால மக்கள் வாழ்ந்தனர் என்பதற்குச் சான்றாக, அகநானூற்றுப் பாடல் ஒன்று சான்றாக அமைகின்றது.

"இழைஅணி நெடுந்தேர்க் கைவண் செழியன்
மழை விளையாடும் வளம்கெழு சிறுமலை" (அகம் 47:15-16)

பாண்டியன் செழியனின் ஆட்சிக்குட்பட்டதும், மழைப்பொழிவு மிக்க வளமான மலையாகவும் இச்சிறுமலை விளங்கியுள்ளது. தமிழ் இலக்கியங்களின் மகுடங்களான ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றாகவும், முதல் தமிழ்ப் பெருங்காப்பியமுமான

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப் பெற்றுள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க மலைத்தொடரே இச்சிறுமலையாகும். வரலாற்று நாயகர்களான கண்ணகி, கோவலன் கால்தடம் கண்ட இம்மலை, பசும்போர்வையாற் போர்த்தப்பட்ட இயற்கை வனப்பு மிக்க வளங்குன்றா வரமாகவே காட்சிதருகின்றது. பழங்குடியின மக்கள் மட்டுமே வாழ்ந்த இப்பகுதியில் தற்போது அதிக குடியேற்றங்கள் புகுந்துவிட்டன. கண்ணகி, கோவலன் தம்பதிகள் சோழநாட்டிலிருந்து மதுரைக்குக் குடியேர வருகையில் இச்சிறுமலையினைக் கடந்தே சென்றுள்ளனர். காப்பியம் வடித்த புலவர் இளங்கோ இம்மலைதனை வெகுவாகப் புகழ்கின்றார். அவர் குறிப்பிட்டுள்ள வரிகளில் 'தென்னவன் சிறுமலை' எனச் சுட்டுவதால், தென்னகத்தை ஆண்ட பாண்டியனின் வசம் இச்சிறுமலை இருந்ததென அறியமுடிகின்றது.

"வலம்படக் கிடந்த வழி நீர் துணியின்
அலறுதலைமராமும்உலறுதலைஓமையும்
பொரியரைஉழிஞ்சிலும்புல்முளிமூங்கிலும்
வரிமரல்திரங்கியகரிபுறக்கிடக்கையும்
நீர்நசைஇவேட்கையின்மான் நின்றுவிளிக்கும்
கானமும்எயினர்கடமும்கடந்தால்
ஐவனவெண்ணெலும்அறைக்கண்கரும்பும்
கொய்பூந்தினையுங்கொழும்புனவரகும்
காயமும்மஞ்சளும்ஆய்கொடிக்கவலையும்
வாழையும்கமுகும்தாழ்குலைத்தெங்கும்
மாவும்பலாவும்சூழ் அடுத்துஓங்கிய
தென்னவன்சிறுமலைதிகழ்ந்துதோன்றும்" (சிலம்பு, காடு:75-84)

கண்ணகி கோவலன் தம்பதியர்க்கு மதுரைக்குச் செல்லும் வழிதனை விளக்கி உரைக்கும் மாங்காட்டு மறையோன்,சூலம்போன்று மூன்று வழிகள்தோன்றும்என்று கூறிவிட்டு; ஒவ்வொரு வழியினையும் காட்சிப்படுத்தி விளக்குவான். அம்மூன்று வழியில் முதல்வழி வலப்புறமாகச் செல்லக்கூடிய வழியாகும். இதுவே தற்போதைய

சிறுமலை வழியாக மதுரைக்குச் செல்லும் பாதையாகும். இப்பாதை குறித்து கூறுமிடத்து, சிறுமலையின் வளம் விவரிக்கப்படுகிறது. அதில் வாழை, பாக்கு, மா, பலா எனப் பல கனிகள் காய்த்துக் குலுங்கும் செழுமையான மலை எனச் சுட்டப்படும். இக்காட்சியமைப்பு இன்றைக்கும் விரவிக் காணப்படுகின்றது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் ஆன பின்னரும், இந்தகாலச் சூழலில் அவர் காட்டிய இயற்கைக் காட்சிகள் இன்னமும் மிச்சம் இருப்பது ஆறுதல் அளிக்கின்றது. இன்றும் சிறுமலை வாழைப்பழம் என்பது பெயர்பெற்ற ஒன்றாகத் திகழ்கின்றது. இச்சிறுமலை அடிவாரத்தில் தான் மாம்பழத்திற்குப் புகழ்பெற்ற நத்தம் உள்ளது. தமிழக மாம்பழ உற்பத்தியில் முக்கிய இடம்வகிக்கும் பகுதியாகவும் இது உள்ளது. சிறுமலையின் வலப்புறமாகச் சென்றால் மதுரையை அடையலாம் என்ற இந்தக் குறிப்பு முற்றிலும் பொருத்தமானதாகவும், இன்றைக்குப் பயன்படுத்தும் தடமாகவும் உள்ளது வியப்புக்குறிய ஒன்றாகும்.



சிறுமலையின் தோற்றமும், அங்கு வாழும் இனக்குழு மக்களும், பாறை ஓவியமும்

சிறுமலையில் கண்டறியப்பட்டுள்ள பாறை ஓவியம், இங்கே இனக்குழு மக்கள் வாழ்ந்ததற்கான சான்றாகத் திகழ்கின்றது. அருவிமலை என்ற பகுதியில்

தொன்மையான பல ஓவியங்கள் காணக்கிடைக்கின்றன. செங்குத்தாக உயர்ந்துள்ள பாறைகளில் இவ்வோவியங்கள் வரையப்பட்டுள்ளன. ஓவியங்கள் காவி, வெள்ளை நிறத்தில் உள்ளன. பேராசிரியர் விசயவேணுகோபால் அவர்கள் இங்குள்ள ஓவியங்களை ஆராய்ந்து வெளிக்கொணர்ந்தார். மனித உருவங்கள், விலங்குகள் போன்ற கோட்டோவியங்கள், விலங்குகள் மோதிக்கொள்வது போன்ற காட்சி, வேட்டை நிகழ்வுகள் இங்குள்ள பறைகளில் சித்தரிக்கப்பட்டுள்ளன. இங்கு காணப்படும் ஓவியங்கள், பழனிமலையில் அண்மையில் கண்டறியப்பட்ட சங்ககால ஓவியங்களை ஒத்துக் காணப்படுவதால், இவையிரண்டும் சமகால மக்களால் வரையப்பட்டிருக்கக் கூடும். ஆதலின் இவை சங்ககாலத்தவையே எனக் கருதலாம். இதனை உறுதிசெய்யும் விதமாக சிந்துசமவெளி நாகரிகத்துடன் தொடர்புடைய குறியீடு ஒன்றும் தற்போது இச்சிறுமலைப் பகுதியில் கண்டறியப்பட்டுள்ளது. (காண்க, தினத்தந்தி - 28/8/12)

### 5.4.6 சிறுகுடி

இன்றைய திண்டுக்கல் மாவட்டத்தில் அமைந்துள்ள சிற்றூரே இச்சிறுகுடி. குறிஞ்சிநில அமைப்பினை ஒத்த கூறுகளை உடைய இச்சிற்றூர் ஆய்வாளர்களால் விவாதிக்கக் கூடிய ஒன்றாகத் திகழ்கின்றது. அதற்குக் காரணம், சங்க இலக்கியங்களில் சிறுகுடி எனும் சொல்; சிறிய குடும்பம், ஊர், குலம் என்ற பொருள்களில் பல இடங்களில் இடம்பெற்றுள்ளது. சங்ககாலத்தைச் சேர்ந்த சீறூர் மன்னனான பண்ணன் (சிறுகுடிக் கிழான் பண்ணன்) சிறுகுடி எனும் ஊரினைச் சார்ந்தவன். "நத்தத்திலிருந்து சமுத்திராபட்டியை அடைந்து வடக்கு நோக்கிச் செல்லும் சாலையில் சென்றால் செந்துறையை அடுத்துள்ள சிறுகுடி கிராமத்தினை அடையலாம். இவ்வூர் பாண்டிய நாட்டின் வட எல்லையில் சோழ நாட்டினை ஒட்டியமைந்துள்ளது. சோழ மன்னன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால் புகழ்ந்து பாடப்பட்ட (புறம்-173) பண்ணன் என்ற சங்ககால வள்ளலின் ஊர் இது என்று பலர் கருதுகின்றனர்"[9] "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்றும், "கழற்கால் பண்ணன்" (அகம் 177:16) என்றும், இவனைப் புலவர்கள் போற்றினர். சோழவேந்தன்

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால் 'யான்வாழுநாளும் பண்ணன்வாழிய' என்று கூறிச் சிறப்பிக்கப்பட்டுள்ளான். “கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடி” (புறம் 70) இவ்வாறாக அறியப்படும் பண்ணனின் சிறுகுடி இதுவாக இருக்கலாம். ஏனென்றால், கோடைமலைச் சீறூர் மன்னனான பண்ணியின் பெயர் போல இங்கு சுட்டப்படும் பண்ணன் எனும் பெயர் இருப்பதால் இக்கருத்து ஒத்துப்போகின்றது. இப்பகுதியில் தொல்லியல் அகழ்வாய்வுகள் மேற்கொள்ளப்பட்டால் மேலும் பல தரவுகள் கிடைக்கக்கூடும்.

**5.4.8 ஐவர்மலை (அயிரை மலை)**

பழனிக்கு வடக்காகத் திண்டுக்கல் மாவட்ட எல்லையிலும், கரூர் மாவட்டத் தொடக்க விளிம்பிலும் உள்ள மற்றொரு தொன்மையான இடமாக ஐவர்மலை எனும் இம்மலை காணப்படுகின்றது. சங்ககாலத்தில் சேரநாட்டுடன் இருந்த கருவூர் எனும் கரூக்குச் செல்ல இம்மலையினை ஒட்டி எளிய வழி ஒன்று உள்ளது. இவ்வழிச் சென்றால் விரைவாகக் கரூரை அடைய முடியுமென்று இவ்வூர் மக்கள் கூறுகின்றனர். சேர நாட்டுக்கும் பாண்டிய நாட்டுக்கும் வாணிபம் புரிந்தோர் பயன்படுத்திய பெருவழி ஒன்று பழனியை ஒட்டிச் சென்றிருக்கக்கூடும் என்று தொல்லியல் ஆய்வாளர்கள் அண்மையில் கண்டறிந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதுபோன்ற செய்திகள் இம்மலை அமைந்துள்ள பகுதியின் தொன்மையினை விவரிக்கும் சான்றுகளாகக் கொள்ளலாம். பஞ்சபாண்டவர்கள் இம்மலையில் வந்து தங்கியதாக ஒரு நாட்டுப்புறக் கதை வழக்காறு இப்பகுதியில் நிலவுகின்றது. அதனடிப்படையில் ஐவர்மலை என்ற பெயர் சூட்டப்பட்டதாக இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். மிகவும் பழமைவாய்ந்த இம்மலையில் சமணப்பள்ளி இருந்ததற்கான எச்சங்கள் பல காணப்படுகின்றன. இருப்பினும் கேரளாவில் இதே போன்று ஓர் அயிரைமலை இருப்பதாகக் கருதப்படுகின்றது. ஆயினும் சேரர்களின் தலைநகராய் இருந்த கரூருக்கு அருகாமையில் இங்குச் சுட்டப்படும் அயிரை மலை இருப்பதால் இதுவே பதிற்றுப்பத்தில் குறிப்பிடப்படும் சேரர்களது அயிரைமலையாக இருக்கக்கூடும்.




அயிரை மலையின் தோற்றமும் அங்குள்ள பழமையான நடுகல்லும்

இம்மலையிலுள்ள கல்வெட்டுக்கள் இம்மலையினை அயிரைமலை என்றே சுட்டுகின்றன. சங்ககாலத்தில் அயிரைமலை என்ற ஒன்று இருந்துள்ளது. இது சேரர்களுக்குறியதென அறியப்படுகின்றது. சங்கப்புலவர் பாலைக் கௌதமனார் என்பார் பதிற்றுப்பத்து மூன்றாம்பத்தில், பல்யானைச் செல்கெழு குட்டுவனைக் குறித்துப் பாடுகையில் 'அயிரை மலை' அவனுக்குறியதெனக் குறிப்பிடுகின்றார்.

"நேர் உயர் நெடுவரை அயிரைப் பொருந!" (பதிற் 21:29)

"அயிரை நெடுவரை போல" (பதிற் 70:26)

"கடவுள் அயிரையின் நிலைஇ" (பதிற் 79:18)

மேற்குறிப்பிட்ட பாடல் வரிகளில் குறிப்பிடப்படுவது போன்றே ஐவர்மலை எனப்படும் இம்மலையின் அமைப்பு தற்காலத்திலும் காணப்படுகின்றது. மலையின் மேலே பல தெய்வங்கள் உறையும் கோவில்கள் காணப்படுகின்றன. வற்றாத சுனை ஒன்றும் இங்குள்ளது. இம்மலைக்கு நேரெதிராகச் சற்று தொலைவில் உயரமான மற்றொரு மலையும் காணப்படுகின்றது. கருவூர் எனப்படும் கரூர் அக்காலத்தில் சேரநாட்டைச்

சார்ந்த பேரூராக இருந்தது என்பதை இலக்கியங்கள் மற்றும் தொல்லியல் அகழ்வாய்வுத் தரவுகளின் வாயிலாக அறிகின்றோம். அதனடிப்படையில் பார்க்கும்போது இந்த அயிரைமலை, பதிற்றுப்பத்தில் குறிப்பிடப்படும் சேரர்களது மலையே எனலாம்.

**5.4.9 பழனி மலை**

அண்மைகாலங்களில் திண்டுக்கல் மாவட்டம் பழனிமலைப் பகுதிகளில் நடைபெற்று வரும் தொல்லியல் தேடலில் நிறைய கற்குகைகளும், ஓவியங்களும், கல்பதுக்கைகளும் அறியப்பட்டுள்ளன. இவை பெருங்கற்படைக் காலப் பண்பாட்டு எச்சங்கள் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தொல்லியல் ஆய்வில் மிகவும் சிறப்பாகக் குறிக்கப்பெறும் தன்மையுடையது பெருங்கற்படைச் சின்னங்களின் அகழாய்வாகும். தமிழகமெங்கும் பரவலாகவும், அதிகமாகவும் காணப்பெறுவது இச்சின்னங்களேயாகும். இதனைத் தொல்லியலார் Megalithic என அழைப்பர். இக்கால ஈமக் குழிகள் மிகப் பெரிய கற்பலகைகளைக் கொண்டும், பெரிய கற்களைக் கொண்டும் அமைக்கப்பட்ட காரணத்தால் இதனைப் பெருங்கற்படைப் பண்பாடு என அழைப்பர். கல்அறை, கல்வட்டம், கல்படை, கல்குவை, கல்திட்டை, கற்கிடை எனப் பலவாறாக இவை அழைக்கப்படும். பெருங்கற்படைப் பண்பாடு 2500 ஆண்டுகட்கு முற்பட்ட பண்பாடாகும். பெருங்கற்படைச் சின்னங்களைச் சங்க இலக்கியங்கள் 'பதுக்கை' எனக் குறிப்பிடுகின்றன.

"செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை" (புறம் 3:20-21)
"வெண்நுனை அம்பின் விசைஇட வீழ்ந்தோர்
எண்ணுவரம்பு அறியா உவல்இடு பதுக்கை" (அகம் 109:7-8)
"இடுமுள் நெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரம் தேய்த்தார் பதுக்கை" (கலி 12:1-2)

2500 ஆண்டுகட்டு முற்பட்ட பெருங்கற்படையைக் குறிக்கும் சங்க இலக்கியப் பாடல்வரிகள் இங்கு நோக்கத்தக்கதாகும். பூமிக்குள் பதுங்கியிருப்பது,

பதுக்கப்பட்டிருப்பது பதுக்கை ஆயிற்று. இவை வீரம்காட்டி மாய்ந்த வீரர்களுக்கு எடுக்கப்பட்டது என்பதை 'வம்பப் பதுக்கை' என்பதன் மூலம் அறியலாம். வீரயுகக் காலமான சங்ககாலத்தில் பெரும்பாலும் வீரர்கட்கென்றே பெருங்கற்படைகள் அமைக்கப்பட்டன. ஆகவே இப்பண்பாடு சங்ககால மக்களுக்குரியதே என்பது தெளிவாகிறது. இத்தகைய தொல்லியல் எச்சங்கள் திண்டுக்கல் மாவட்டத்தின் பல பகுதிகளில் காணப்படுகின்றன. ஆதலின் இங்கு சங்ககால மக்கள் வாழ்ந்தனர் என்பதில் ஐயமில்லை. அண்மையில் திண்டுக்கல் மாவட்டம் பழனி அருகே ஆண்டிபட்டி மலைப்பகுதியில் மூவாயிரம் ஆண்டுகள் பழமைவாய்ந்ததென மதிப்பிடப்படும் சங்ககால ஓவியங்கள், வாழ்வியல் தடங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இங்கு காணப்படும் ஓவியங்கள் சுண்ணாம்புக் கரைசல், மூலிகைச்சாறு மற்றும் மரப்பிசின் கொண்டு வெள்ளை நிறத்தில் வரையப்பட்டுள்ளன.

இனக்குழு மக்களான சங்ககாலத் தமிழர்களின் வாழ்வியல் குறித்து இந்த ஓவியங்கள் சான்றுரைக்கின்றன. இங்கு காணப்படும் ஓவியங்கள் படக்கதையினைப் போன்று காணப்படுகின்றன. குறிஞ்சிநில மக்களின் வாழ்வியலை விளக்குவதாக இந்த ஓவியங்கள் காட்சியளிக்கின்றன. இந்த ஓவியங்களை நோக்குகையில், விழா நடப்பது போன்றும், பெண்கள் கூட்டமாகப் பானைகளில் நீர் எடுத்துச் செல்வது போன்றும் காட்சியளிக்கின்றன. மக்கள் தங்கள் குழந்தைகளுடன் சேர்ந்து மகிழ்ச்சியாக ஆடுவது போன்ற காட்சியும் வரையப்பட்டுள்ளன. இவ்வகை நடனத்தைத் தற்போதுள்ள மலைவாழ் பளியர், புலையர் போன்ற பழங்குடியினத்தைச் சார்ந்த மக்கள் இன்றுவரை ஆடிவருவது குறிப்பிடத்தக்கது. மேலும்யானை, புலி, முள்ளம்பன்றி போன்ற தோற்றங்கள், ஆண்களும், பெண்களும் தனித்தனியே வேட்டையாடும் ஓவியங்களும் காணப்படுகின்றன. நீர் நிறைந்த பள்ளம் ஒன்றில் யானை சிக்கிக்கொள்வது, பின்னர் யானையை ஆண்கள் காப்பாற்றி பழக்குவது, அதில் மன்னர் அமர்ந்து செல்வது, பாதுகாப்பு வீரர்கள் சூழப் போருக்குப் புறப்பட்டுச் செல்வது போன்ற நிகழ்வுகள் வரையப்பட்டுள்ளன. மேலும் சில ஓவியங்கள் மங்கிய நிலையில் காணப்படுகின்றன. இப்பகுதியில் இனக்குழு மக்கள் வாழ்ந்த குகைகள் பல

கண்டறியப்பட்டுள்ளன. இவை சங்ககால மக்கள் பயன்படுத்தியவையாக இருக்கலாம். மேலும் இக்குகைகளையொட்டி மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகளில் கருப்பு சிவப்பு நிறமுடைய பழமையான ஓடுகள் பல கிடைத்துள்ளன. இக்குகைகள் குறித்து ஆய்வு மேற்கொண்ட தொல்லியல் ஆய்வறிஞர்கள் இவை இரண்டாயிரம் முதல் மூவாயிரம் ஆண்டுகள் பழமையான என்று விவரிக்கின்றனர். இவற்றை வைத்து நோக்கும் போது, இப்பகுதி சங்ககால மக்கள் வாழ்ந்த நிலமே என உறுதியாகக் கூற இடமுண்டு. அதற்கு உறுதுணையாக இந்தக் குகைகளும், பானை ஓடுகளும், குகை ஓவியங்களுமாகிய வாழ்வியல் எச்சங்கள் விளங்குகின்றன. இந்த ஓவியங்கள் மற்றும் பானை ஓடுகளைத் தொல்லியல்துறைஆய்வாளர்நாராயணமூர்த்தி, முனைவர் கன்னிமுத்து, பழனிச்சாமி, ராஜாஆகியோர்மேற்கொண்ட ஆய்வுகள் மூலம் வெளிக்கொணரப்பட்டன. *(காண்க,தினத்தந்தி-04/03/2013)*



பழனிமலைப் பகுதியில் காணப்படும் கற்பதுக்கைகள் மற்றும் குகை ஓவியங்கள்

பழனி அருகேயுள்ள பட்டிகுளம் (பொட்டம்பட்டி அருகே) பகுதியில் அண்மையில் ஒரு தோட்டத்தில் பழங்காலக் கல்திட்டை இருப்பது கண்டறியப்பட்டது. இரண்டு

திட்டைகள் இங்கு உள்ளன. ஒன்று சிதந்த நிலையில் உள்ளது. மற்றொன்று நல்ல நிலையில் காணப்படுகின்றது. இதனை இப்பகுதி மக்கள் குள்ள மனிதர்கள் வாழ்ந்த வீடுகள் என்கின்றனர். ஆனால் இது 2000 ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த தொல்குடியினரது கல்லறைகள் என்பதுதான் உண்மை. இக்கற்குவைக்குள் உடைந்த மண்பாண்ட ஓடுகள் காணப்பட்டன. அவற்றில் ஒன்றில் 'த' என்ற தமிழ் எழுத்துக் குறி காணப்படுகின்றது. "சங்ககாலத்தில் இறந்தவர்களைப் புதைத்துப் பெரிய பாறாங்கற்களைக் கொண்டு கல்திட்டு அமைப்பது வழக்கம். பெருங்கற் காலத்தைச் சேர்ந்த இந்த முறை தென்னிந்தியா முழுவதும் காணப்படுகின்றது. - தொல்லியல் ஆய்வாளர் நாராயணமூர்த்தி" (காண்க,தினமலர்-15/4/13). பொதுவாக இறந்தவர்களின் பிணத்தை ஆரியர்கள் எரிப்பதையும், வட இந்தியர்கள் நீரில் விடுவதையும் (ஜல சமாதி), பாரசீகர்கள் கழுகுக்கு இரையாக்குவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஆனால் திராவிட முதுகுடிகள் பிணங்களைத் தாழிகளில் இட்டு மண்ணுக்குள் புதைத்தனர். அந்த தாழிக்குள் இறந்தவருக்கு விருப்பமான பொருட்கள், அவர்கள் பயன்பட்டுத்திய புழங்கு பொருட்களைச் சேர்த்தே புதைத்தனர்.

இன்றைய தொல்பொருள் ஆய்வுகளில் இது வெளிப்படுகின்றது. இன்றைக்கும் புதைக்கும் வழக்கமுள்ள தமிழ்க் குடிகள், இறந்தவரை அடக்கம் செய்கையில் அவர் பயன்படுத்திய ஆடைகளைக் குழிக்குள் இட்டுப் புதைகின்றனர். இந்நிகழ்வு ஆதிகாலத்து வழக்கத்தின் எச்சமாகவே தெரிகின்றது. "2003-ல் சுமார் ஆறு மாதங்கள் இந்தியத் தொல்லியல் ஆராய்ச்சிக் கழகக் கண்காணிப்பாளர் சத்தியபாமா தலைமையில் 10 ஆராய்சியாளர்கள் ஆதிச்சநல்லூரில் முகாமிட்டு அகழ்வாராய்ச்சி நடத்தினார்கள். 10-க்கு 10 அடி அகலத்தில் குழி தோண்டப்பட்டது. மூன்றடுக்கு மண்பாண்டங்கள், 168 முதுமக்கள் தாழிகள், பல இரும்புக் கருவிகள், விளக்குகள் கிடைத்தன. தாழிக்குள் மனித எலும்புகள், மட்கிய நிலையில் நெல்மணிகள், ஆயுதங்கள், உளிகள் என முதுமக்கள் பயன்படுத்திய பொருட்கள் கிடைத்தன"[10] எனும்செய்தி இங்கு நோக்கத்ததாகும்.இதே போல கொடைக்கானல் வட்டம் பாச்சலூர் அருகேயுள்ள பட்டியக்காடு செல்லும் மலைச்சாலையின் அருகே அழிவின்

விளிம்பிலுள்ள சில கற்குகைகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை சராசரியாக 10அடி அகலமும் 15அடி நீளமும் கொண்டவையாக உள்ளன. இப்பகுதியில் இனக்குழு அடையாளங்களுடன் காணப்படும் ஆதிவாசிகளான பளியர் இன மக்கள் அதிகமாக வாழ்கின்றனர்.

அடர்ந்த காடுகளுக்கு நடுவே மிக நேர்த்தியாக இக்குகைகள் வடிவமைக்கப்படுள்ளன. இவை சங்ககாலக் குறிஞ்சிநில மக்கள் வாழ்ந்தவையாக இருக்கலாம். “திண்டுக்கல் மாவட்டத்தில் பல பகுதிகளில் பழங்காலத் தொல்லியல் சின்னங்கள் விரவிக்கிடக்கின்றன. போதிய பராமரிப்பின்றி சிதைக்கப்பட்டும், கவனிப்பின்றியும் அழிந்துபோய்க் கொண்டுள்ளது”. (காண்க,தினத்தந்தி-12/3/13) திண்டுக்கல் மாவட்டத்தைப் பொருத்தமட்டில் சங்ககாலத்தில் பொதினி என அழைக்கப்பட்ட தற்போதைய பழனியினைச் சுற்றியுள்ள பகுதிகளில் தான் ஆதிமக்கள் வாழ்ந்ததற்கான எச்சங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. அவற்றில் அண்மையில் பழனிமலைக்குக் கிழக்கேயுள்ள வரதமா நதிக்கரையில் கிடைக்கபெற்ற தொல்லியல் எச்சங்களை ஆராய்ந்த ஆய்வாளர் நாராயண மூர்த்தி “தென்பழனி என்ற ஊர் இருந்ததற்கான சான்றுகள் இங்கே கிடைத்துள்ளன. அவற்றில் முதுமக்கள் தாழிகள், சங்ககால வகையினைச் சேர்ந்த செங்கல் துண்டுகள் குறிப்பிடத்தக்கவையாகும். பழனி மலைக்கல்வெட்டுக்கள் குறிப்பிடும் சுந்தரபாண்டியநல்லூர், இரவிமங்கலம் ஆகியவை அழிந்துவிட்டன. அதேபோல் தென்பழனியும் அழிந்தது. சங்ககால இலக்கியங்களில் குறிப்பிடும் பொதினி எனப்படும் பழனி அழிந்துபோன தென்பழனி தான்” (காண்க,தினமலர்-22/4/13) என்று கூறுகின்றார் அவரின் கருத்து ஆராயத்தக்க ஒன்றாகும்.

### 5.6 வாழ்வியல் எச்சங்கள்

வாழ்வியல் எச்சங்கள் எனப்படுபவை மனிதன் வாழ்ந்ததற்கான அடையாளக் கூறுகள் எனக்கொள்ளலாம். ஒரு காலகட்டத்தில் மனிதன் இனம் கடைபிடித்துவந்த வாழ்வியல் முறைகள் அடுத்த காலகட்டம் வரை தொடர்ந்து வருவது எச்சங்கள் எனப்படும். இனக்குழுக்களாக வாழ்ந்த சங்ககால மக்கள் தொழில் அடிப்படையில் பல

குழுக்களாக வாழ்ந்துவந்தனர். அவர்களது வாழ்வில் காணப்பட்ட கூறுகள், வழக்கங்கள் இன்றைக்கு வழக்கத்தில் இருக்குமாயின் அதனை வாழ்வியல் எச்சங்கள் எனக்கருதலாம்.

### 5.6.1 இன்றைய தமிழகத்தில் சங்ககாலக் குடிகள்

மனித வாழ்வில் அன்றாடம் வழக்கத்திலுள்ள பழக்கவழக்கங்கள், பண்பாடுகள் ஆண்டுகள் பலநூறு கடந்தபின்னும், காலங்காலமாகப் பின்பற்றப்படுமாயின் அல்லது அவற்றின் தாக்கங்கள் தற்கால வாழ்வில் பிரதிபலிக்குமாயின் அதனையே வாழ்வியல் எச்சங்கள் என்பர். 2000 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்ததாக நம்பப்படும் சங்ககாலத் திணைசார் குடிகளின் வாழ்வியல் கூறுகள் பல இன்றைய மக்களின் வாழ்வில் எச்சங்களாகக் காணப்படுகின்றன. ஆண்டுகள் பல ஆயினும் சங்ககால வாழ்வியல் முற்றிலும் அழிந்துவிடவில்லை. தொழில் அடிப்படையில் குலங்களாக அடையாளப்படுத்தப்பட்ட தொல்தமிழ்க் குடிகள் பிற்காலங்களில் தனித்த அடையாளத்துடன் செயல்படத் தொடங்கின. அதன் விளைவாகச் சாதி எனும் அமைப்பு ஏற்பட்டது. சங்ககாலத்தில் இருந்த குடிகள் குறித்து இயல் இரண்டில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இங்கு அதன் தொடர்ச்சியாக இன்றுள்ள அதன் எச்சங்கள் குறித்துக் காண்போம். சங்ககாலத்தில் திணை அடிப்படையிலும், செய்யும் தொழில் அடிப்படையிலும் பிரிவுகள் இருந்தன. இப்பிரிவினைகள் அடிப்படையில் மக்கள் பாவிக்கப்பட்டனர். இருப்பினும் பெரிய அளவில் பாகுபாடுகள் இருக்கவில்லை என்றே தோன்றுகின்றது.

சங்ககாலத்திற்கு அடுத்து ஏற்பட்ட அரசியல் மாற்றங்களால் இனக்கலப்புகள் ஏற்பட்டன என்பது வரலாற்று உண்மை. வர்க்கம் எனும் கட்டமைப்பு உருவான பின்பு குடிகள் எனும் அடையாளம் மாறியது. அதன் தொடர்ச்சியாக சாதி என்பது அழிக்க இயலாத அரசியல் எந்திரமாக உருப்பெற்று மிக மோசமான நிலையினை எட்டியுள்ளது என்பது கண்கூடு. இத்தருணத்தில் ஆயிரம் மாற்றங்கள் ஏற்படினும் தொல்தமிழ்க்குடிகளின் அடையாளங்களோடு காணப்படும் குலங்கள் இன்றும் இருப்பதைக் காணமுடிகின்றது. தமிழக அரசின் அரசிதழில்

அங்கீகரிக்கப்பட்டவையாக இக்குடிகள் இன்று திகழ்கின்றன. சங்ககாலத் திணை அடிப்படையிலும், அன்று மேற்கொண்ட தொழிலடிப்படையிலும் இருந்த குலங்களின் எச்சங்களாகக் கீழ்க்காணும் குடிகள் அடையாளம் காணப்படுகின்றன.

1. ஆதி திராவிடர்
2. கணக்கன்
3. கடையன்
4. காட்டுநாயகன்
5. கணியன்
6. காடர்
7. குறிச்சன்
8. குறவன் சித்தனார்
9. கூத்தன் (கன்னியாகுமரி)
10. குடும்பன்
11. மலைக்குறவன்
12. மன்னன் (கன்னியாகுமரி)
13. பள்ளியன்,பள்ளியர்
14. பள்ளன்
15. பாணன் (கன்னியாகுமரி)
16. பாணர் (கன்னியாகுமரி)
17. பறையன்
18. புலையன்,சேரமார்
19. பரதர் (கன்னியாகுமரி)
20. வெள்ளாளர்,நான்குடி வேளாளர்
21. வேலன்
22. வேட்டைக்காரர்
23. வேடன் (கன்னியாகுமரி)
24. வேட்டுவன்
25. வேடர்
26. வேடுவர்
27. யாதவர் (இடையர்)
28. குறும்பர்
29. நரிக்குறவர்
30. மீனவர்

31. நுளையர்
32. கள்ளர்
33. மறவர்கள்

மேற்கண்ட குடிகள் யாவும் சங்ககாலத்தில் அறியப்படுகின்ற தமிழ் மக்களின் குடிப்பெயர்களைத் தாங்கியுள்ளன. ஐந்திணைகளில் வாழ்ந்த சங்ககால மக்களின் வாழ்வியல் அடையாளங்கள் சில மேற்காணும் இக்குடிகளின் வாழ்விலும் எச்சங்களாகக் காணப்படுகின்றன. ஆட்சி மாற்றங்கள் மொழிக்கலப்புகள், இனக்கலப்புகள், பண்பாட்டுத் திணிப்புகள் எனப் பல மாற்றங்களை இக்குடிகள் கடந்து வந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வரிசையில் திண்டுக்கல் மாவட்டத்தில் ஆதி திராவிடர், குறவன், பள்ளன், குடும்பன், பறையன், வெள்ளாளர்கள், வேட்டுவன், வேடர், வேடுவர், யாதவர்(இடையர்), குறும்பர், நரிக்குறவர், கள்ளர், பிரமலைக்கள்ளர், மறவர், மலைக்குறவன், பள்ளியர்(பளியர்), வெள்ளாளர் போன்ற குடிகள் வாழ்கின்றனர். பின்வரும் சங்ககால வாழ்வியல் எச்சங்கள் சற்று இக்குடிகளிடம் வழக்கத்தில் உள்ளன.

**5.6.2 இருப்பிடங்கள்**

தமிழகச் சிற்றூர்களைப் பொருத்தமட்டில் கூரை என்பதே அடையாளமாக அண்மைக்காலம் வரை இருந்துவருகின்றது. அரசுத்திட்டங்கள், கல்வியறிவு, அதன் வெளிப்பாடான பொருளாதார முன்னேற்றம் போன்ற காரணங்களால் இன்று இருப்பிடங்களின் அமைப்பு மாற்றம் பெற்று வரினும், இன்றும் மலைக்கிராமங்கள், பொருளாதாரத்தில் பின்தங்கியுள்ள விளிம்புநிலை மக்கள் வாழும் பகுதிகளில் கூரை வீடுகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. இவ்வீடுகளை உருவாக்கிட மலைப்பகுதிகளில் வாழும் மக்கள் போதைப்புல், தைலப்புல் எனும் புல்வகைகளையே பயன்படுத்துகின்றனர். மண் சுவர்களை எழுப்பி மேற்கூரைக்கு இவ்வகைப் புற்களைப் பரப்புகின்றனர். இக்கூரைகள் மூன்று நான்கு ஆண்டுகள் வரையிலும் உறுதியாக இருக்கின்றன. தவிர, வீட்டின் உள்பகுதி குளிர்ச்சியாகவும் காற்றோட்டமாகவும் இருப்பதாகக் கூறுகின்றனர். இவ்வழக்கம் சங்ககாலந்தொட்டே

இருந்து வருகின்றது. சங்க இலக்கியங்களில் இதனைப் 'புல்வேய் குரம்பை' எனச் சுட்டுகின்றனர். சமதளங்களில் உள்ள சிற்றூர்களில் தென்னங்கீற்றுகள் கூரை அமைப்பதில் முக்கியப் பங்குவகிக்கின்றன. இதைக்கொண்டு 'கிடுகுகள்' உருவாக்கப்பட்டு அதைச் சேர்த்து அடுக்கி கூரை உருவாக்கப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் 'வாடு மடல்' என்ற பதம் இதனைக் குறிப்பதாகும். இருப்பிடங்களைக் குறிக்க 'பதி' எனும் சொல்லை சங்ககால மக்கள் பயன்படுத்தியதனை அறிகின்றோம். இன்றைய மலசர், கோடைமழைப் பளியர் இன பழங்குடிகள் தம் வீடுகளைப் பதி என்றே அழைக்கின்றனர். நெல் விளையும் பகுதிகளான ஆற்றுப்படுகைகளில் வாழ்வோர் நெல் வைக்கோலினைக் கொண்டு கூரை வேய்கின்றனர். தஞ்சாவூர் மாவட்டச் சிற்றூர்ப் புகுதிகளில் பெரும்பாலான குடிசைகள் இவ்வமைப்பில் காணப்படுகின்றன. இதனைச் சங்க இலக்கியங்கள் 'கருவை வேய்ந்த குடில், எனக்குறிப்பிடுகின்றனர். திண்டுக்கல் மாவட்டம் ஆத்தூர், ஒட்டன்சத்திரம், வேடசந்தூர் போன்ற பகுதிகளில் இவ்வகைக் குடியிருப்புகள் காணப்படுகின்றன.



புல்வேய் குரம்பைகள் சிறுமலைப்பகுதி



வாடுமடல் குரம்பைகள் மற்றும் அரண்கள் திண்டுக்கல் மாவட்டம் குறுந்தம்பட்டி

சங்ககால மக்கள் தம் இருப்பிடங்களைச் சுற்றிலும் வேலி அமைத்திருந்ததனை இலக்கியத்தரவுகள் வாயிலாக அறிகின்றோம். மூங்கில் தப்பைகளைக் கொண்டும், நொச்சிச் செடிகள், முட்செடிகளை வரிசையாக நட்டு வேலி (அரண்) அமைத்தது போன்று இக்காலத்திலும் அமைக்கப்பட்டுள்ளது. சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் குரம்பைகளையொத்த குடியிருப்புகள் இன்றும் எச்சங்களாகக் காட்சியளிக்கின்றன. சங்கால மக்கள் தருப்பைப் புல், காய்ந்த புல், ஈத்திலை, வைக்கோல், தென்னங்கீற்று போன்றவற்றைக் கூரை வேயவும்; நொச்சி, மூங்கில், வேலமுள், பனங்கருக்குடன் கூடிய மட்டை போன்றவற்றை வேலி அமைக்கவும் பயன்படுத்தியுள்ளனர். இன்றைய சிற்றூர்களிலும் இதன் எச்சங்கள் காணப்படுவதைப் பார்க்கமுடிகின்றது. திண்டுக்கல் மாவட்டத்தில் பெரும்பாலான சிற்றூர்களில் இத்தகு அமைப்பு இன்றளவும் உள்ளது.



இருப்பிடத்தினைச் சுற்றி நொச்சி வேலி, முள்வேலிகள் காணப்படும் தாமரைப்பாடி, முள்ளிப்பாடி ஊர்கள்

### 5.6.3 பொதுஇல் - மன்றம்

பொதியில் என்பது சங்ககாலச் சிற்றூர்களில் வசித்த மக்கள் அனைவருக்கும் பொதுவான ஒன்றாக இருந்தது. இங்கு சிற்றூரைச் சேர்ந்த முதியவர்கள் பொழுதுபோக்கு விளையாட்டுக்களை விளையாடி மகிழ்வர். இதன் அருகில் நடப்பட்டிருக்கும் கற்றூணில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பினர். (அகம் 167,307,377; புறம் 52; திருமுருகு 226 ;பட்டின 249) இவ்வமைப்பு இன்று ஒவ்வொரு சிற்றூரிலும் காணப்படுகின்றது. இதனை ஊர்ச்சாவடி, ஊர்க்கொட்டகை, திண்ணை, சவுக்கை என்கின்றனர். சங்க இலக்கியங்களில் கூறப்படும் பொதுயில் அமைப்பு சற்றும் மாறாமல் உள்ளது இங்கு நோக்கத்தக்கதாகும். இச்சாவடியில் முதியோர்கள் ஆடுபுலி ஆட்டம், தாயம் போன்ற விளையாட்டுக்களை ஆடுகின்றனர். இக்காட்சி சங்க இலக்கியங்களில் விவரிக்கப்பட்டவையாகும். இச்சாவடியருகே சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதைப் போலவே தெய்வம் உறைவதாக நம்பப்படும் கல் தூண்கள், மரங்கள் இன்றளவும் காட்சியளிக்கின்றன. திண்டுக்கல்

மாவட்டத்தைப் பொருத்தமட்டில் ஏறக்குறைய 80% சிற்றூர்களில் இவ்வமைப்பு காணப்படுகின்றன. ஊர்ப்பிரச்சனைகளை விவாதிக்கவும் இச்சாவடியில் மக்கள் கூடுகின்றனர்.



பொது இல் - திண்டுக்கல் மாவட்டம் செம்பட்டி பிரிவு



ஊர் மன்றம் - *திண்டுக்கல் மாவட்டம் நடுப்பட்டி*

### 5.6.4 ஏறுதழுவல்

சங்ககால முல்லைநிலத்தில் கொல்லேறு தழுவல் எனும் வழக்கம் வீரவிளையாட்டாக வழக்கத்தில் இருந்துள்ளது என்பதனை நாம் அறிவோம். முல்லைநில ஆயர்கள் வாழ்வில் முக்கிய அங்கமாக இச்செயல் நடைபெற்றுள்ளது. இவ்வழக்கம் இன்று தமிழகத்தின் பாரம்பரிய அடையாளங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது. சங்ககால முல்லைநிலத்தார் தம் காளைகளை அடக்கி வெற்றிகொள்ளும் ஆடவனுக்குத் தம் குடும்பத்திலுள்ள பெண் வாரிசுகளை மண்முடித்துத் தருவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இவ்வழக்கம் சற்றேறக்குறைய 30 வருடங்களுக்கு முன்புவரையிலும் இருந்துள்ளது. இன்று பெண் தரும் வழக்கத்திலிருந்து மாறி பொன் தரும் வழக்கமாக மற்றம்பெற்றுள்ளது. விலங்குவதை எதிர்ப்புச் சங்கத்தார் இதனை எதிர்த்த போதும், பல தடைகள் வந்தபோதிலும், ஒவ்வொரு வருடமும் பல உயிச்சேதங்கள் ஏற்பட்டபோதும் அதனைப் பொருட்படுத்தாமல் இவ்விளையாட்டு உயிர்ப்புடன் நடைபெற்றுவருகின்றது. திண்டுக்கல் மாவட்டத்தில் பல ஊர்களில் ஏறுதழுவல் ஒவ்வொரு வருடமும் நடத்தப்படுகின்றது.

தமிழர்கள் ஏறுதழுவதல் நிகழ்வுக்கு இந்த அளவிற்கு முக்கியத்துவம் கொடுக்கக் காரணம் வீரவிளையாட்டாகக் கருதியது மட்டுமல்ல அதனை ஓர் அறிவியல் உக்தியாகக் கையாண்டுள்ளனர் என்பதனை; “மாடுகளுக்கு கூர்மையாக மேல்நோக்கி வளர்ந்துள்ள கொம்புகள் உள்ளன. இந்த கொம்புகள் தான் சூரிய ஒளியை உள்வாங்கி உடலில் ‘வைட்டமின் டி’ யை ஊர்பத்திசெய்து கொடுக்கும் ஆண்டனாக்கள். ‘குளம்பு பட்ட மண்ணுக்குக் குண்டுமணி எருவும் வேண்டாம்’ என்பது பழமொழி. சூரிய ஒளியிலிருந்து உள்வாங்கப்பட்ட இயற்கையான உயிரோட்ட சக்தி மாட்டுக் குளம்பின் வழியே நிலத்திற்குப் பறிமாற்றம் செய்யப்பட்டு, மண்ணிலே ஊட்டம் ஏற்றப்படுகின்றது. ஊரின் நிலம் முழுவதும் மாடுகளின் குளம்பு பட்டு உரமேற வேண்டும் எனும் நோக்கத்திற்காக இது நடத்தப்பட்டிருக்கலாம். ‘அதிர ஓடினால் முதிர விளையும்’ எனும் பழமொழியும் இதனோடு தொடர்புடையதாகவே

உள்ளது. பூமி அதிர மாடுகள் ஓடிவருதலால் எழுந்த பழமொழியே இது. இவை நம் முன்னோர்கள் அனுபவப்பூர்வமாக உணர்ந்து அறிந்த உண்மைகளாகும்" (தினத்தந்தி - தினம் ஒரு தகவல், ப-16, 01/7/2013) என்ற செய்தி நமக்கு அறிவுறுத்துகின்றது. திண்டுக்கல் மாவட்டத்தின் பல பகுதிகள் முல்லைநிலக் கூறுகள் நிறைந்த பகுதிகளாகக் காட்சிதருகின்றன. குறிப்பாக புகையிலைப்பட்டி, கொசவபட்டி, பெரிய கலையமுத்தூர், மாரம்பாடி, வெள்ளோடு, அய்யம்பளையம் போன்ற ஊர்கள் முற்காலத்தில் காட்டுப்பகுதிகளாக இருந்தவை என்பது கள ஆய்வில் தெரியவருகின்றது. தவிர பெரும்பாலான ஊர்ப்பெயர்கள் சங்ககால முல்லைநில ஊர்ப்பெயராகக் குறிப்பிடப்படும் 'பாடி' என்ற பின்னொட்டுடன் அழைக்கப்படுகின்றன. சான்றாக, தாமரைப்பாடி, முள்ளிப்பாடி, மாரம்பாடி, கானப்பாடி, சீலப்பாடி போன்ற ஊர்களைக் கூறலாம். இவ்வூர்களில் சங்ககால முல்லைநிலக் குடிகளான ஆயர்கள் (யாதவர்கள்) வாழ்வதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். "முன்னெல்லாம் எங்க ஆளுக மாடத்தான் முதல்ல அவுத்துவிடுவோம் அதுக்கு அப்புறம் தான் மத்தவக மாடுகள விடுவாங்க. இது ஊர் வழக்கமாகவே இருந்துச்சு"[11] என்ற இத்தகவலைக் கூறியவர் ஒரு யாதவ முதியவராவார். யாதவர்கள் என்ற சமூகமே சங்ககால முல்லைநில வழித்தோன்றலாக விளங்குபவராவர்.

சங்க இலக்கியங்களில் நோக்குங்கால் முல்லைக்கலி தவிர வேறு இடங்களில் ஏறுதழுவுதல் குறித்த செய்திகள் ஆழமாக இல்லை என்றே தெரிகின்றது. பொதுவாகக் கலித்தொகை நூல் காலத்தாற் பிற்பட்டது என்பது அநேக ஆய்வாளர்களின் கருத்தாக இருக்கின்றது. ஆகவே ஏறுதழுவும் வழக்கம் காலத்தாற் பிற்பட்டதே என்றும் கருத வேண்டியுள்ளது. இருப்பினும் கருப்பொருள் பகுப்பினில் முல்லைநில மக்களினைக் குறிக்குங்கால் ஏறுதழுவல் சுட்டப்படுகின்றது. ஆநிரைகளுடன் வாழ்ந்து வந்த முல்லைநில மக்களின் வாழ்வில் இவ்வழக்கம் இருந்திருக்கக்கூடும். ஆனால் ஏனைய சங்க இலக்கிய நூல்களில் இவ்வழக்கம் குறித்துச் சுட்டப்படாதது ஏன்? என்ற வினாவிற்கு இது குறித்த விரிவான தனித்த ஆய்வு அவசியமாகின்றது.



ஏறுதழுவலைக் குறிக்கும் நடுகல் மற்றும் திண்டுக்கல் பகுதியில் நடைபெறும் ஏறுதழுவல் நிகழ்வு

### 5.6.5 நடுகல்

இன்றும், நமது ஊர்களில் இறந்தோரை புதைக்கும் வழக்கம் உள்ள சமூகத்தார், புதைத்த இடத்தின் மீது கல் நட்டு அதில் பெயர், மறைந்த ஆண்டு போன்றவற்றை பொறிப்பதனைக் காணலாம். இது சமுதாயக் குழுக்களைப் பொருத்து வேறுபடும். குறிப்பாக, கிறித்தவ சமூகத்தார் இவ்வழக்கத்தினைக் கொண்டுள்ளனர். திண்டுக்கல் மாவட்டத்தில் வாழும் 'அனுப்பக் கவுண்டர்' சமூகத்தில் இன்றும் இறந்தோருக்கு நடுகல் நடும் வழக்கம் உள்ளது. இது குறித்து அச்சமுதாயத் தலைவர் சுப்பிரமணி கூறுகையில், "நீ செத்தா உனக்கென்ன நடுகல் வெச்சா கும்பிடப் போறாங்கன்னு ஊர் நாட்டுல சொல்லுவாங்க. ஆனா எங்க சமூகத்துல இறந்த எல்லோருக்கும் நடுகல் ஊணுறது வழக்கம். போரில் படை வீரர்கள் இறந்தால் நடுகல் நட்டு அந்த வீரனை பெருமைப் படுத்துவாங்க. இதுக்கு வீரக்கல்லுனு பேரு. எங்க சமூகத்தினர் யாராவது இறந்திட்டா முதலில் மாமன் மச்சினன்களுக்குச் சொல்லி அனுப்புவோம். அவங்க

இறந்தவங்க நினைவா நடுகல் தயாரிக்கச் சொன்ன பிறகுதான் துக்க வீட்டுக்கே வருவாங்க. இறந்து எட்டு நாள் அல்லது பதினாறாம் நாள், மாமன் மைத்துனர்னு ஐந்து அல்லது ஏழு பேர் சேர்ந்து நடுகல்லைத் தூக்கி வருவாங்க. இந்த கல்லை நடுறதுக்கு முன்னாடி இறந்தவரோட எலும்புகளைக் குழிக்குள்ள போடுவாங்க. அதுக்கு மேல கல்லை நட்டதும் அதுக்கு அரப்பு வச்சு தண்ணி ஊத்தி கழுவி பூப்போட்டு கும்பிடுவோம்"[12] எனும் இத்தகவல் சங்ககால நடுகல் நடும் வழக்கத்தின் எச்சமாகவே தெரிகின்றது.

திண்டுக்கல் மாவட்டத்தில் 'வீரக்கல்' என்ற பெயரில் ஒரு சிற்றூர் உள்ளது. இவ்வூரில் கள ஆய்வு மேற்கொண்டபோது, இவ்வூரில் அக்காலத்தில் கொடிய கழுதைப் புலி ஒன்று ஊருக்குள் புகுந்து கால்நடைகளைக் கடித்து துன்புறுத்தியதாகவும், பலமுறை ஊரார் ஒன்றுகூடி முயன்றும் அதனைக் கொல்ல முடியாதபோது இளைஞன் ஒருவன் இரவில் அதனோடு மோதி அதனைக் கொன்றதாகவும், அதனால் உண்டான காயம் புரையோடி அவன் இறந்த இடத்தில் நடுகல் நட்டு வழிபட்ட தகவல்தனை ஊர் முதியவர்கள் கூறுகின்றனர். அதற்கான நடுகல் ஏதும் இப்பகுதியில் காணவில்லை. வீரன்கல் என்ற சொல்வழக்கே வீரக்கல் என்றாகியிருக்க வேண்டும். இவ்வீரக்கல்லினை மக்கள் வழிபடும் வழக்கம் சங்ககாலத்தில் தொடங்கி இன்றளவும் தொடர்கின்றது. தமிழகத்தின் பல சிற்றூர்களில் இவ்வாறான வீரக்கல்லினைக் காணமுடிகின்றது. இவை பல்வேறு காலகட்டங்களில் நடப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது. தமிழகத்தின் பல பகுதிகளிலும் கல் வழிபாடு என்பது தொன்றுதொட்டு மக்களிடம் இருந்துவரும் வழக்கமாகும். இன்றைக்கும் சிலைகள் பொதுவாகக் கல்லினைக் கொண்டே வடிக்கின்றனர். இது பண்டைய வழக்கங்களின் எச்சமாகவே தெரிகின்றது. மக்கள் நடமாட்டம் மிகுந்த பகுதிகளில் நம்பிக்கையின் அடிப்படையில் ஒரு கல்லினை நட்டு அதற்கு பெயர்சூட்டி வழிபடும் வழக்கத்தினைச் சிற்றூர்களில் அதிகமாகக் காணலாம். இவ்வாறான கல் வழிபாடுகள் இனக்குழு வாழ்வில் பின்பற்றப்பட்டிருத்தல் வேண்டும். உருவ வழிபாட்டின் தொடக்கமாக இதனைக் கூறலாம்.



அம்பாத்துறை, குருந்தம்பட்டி, பஞ்சம்பட்டி (பிரிவு) ஆகிய பகுதிகளில் காணப்படும் நடுகற்கள்



திண்டுக்கல் மாவட்டம் காமலாபுரம் அருகே காணப்படும் பழமையான நடுகல்

படத்தில் காணப்படும் இந்நடுகல், திண்டுக்கல் மாவட்டம் காமலாபுரத்திலிருந்து நிலக்கோட்டை செல்லும் குறுக்குச் சாலையின் கிழக்கே அமைந்துள்ளது. இந்நடுகல் காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியரும், எனது நெறியாளருமான அ.பிச்சை அவர்களால் கண்டறியப்பட்டது. நடுகல் இருக்கும் இப்பகுதி வறண்ட கரடுகள் சூழ்ந்த பகுதியாகும். இப்பகுதி மக்கள் இதனை இன்றும் வழிபட்டுவருகின்றனர். இதுகுறித்து பேராசிரியர் அ.பிச்சை அவர்கள் “தொல்காப்பியர் குறிப்பிடும் கொடிநிலை, கந்தளி, வள்ளி போன்றவற்றின் குறியீடு இந்நடுகல்லில் காணப்படுகின்றது. அதாவது, பிறை, சூரியன், லிங்கம் போன்ற குறியீடுகள் பொறிக்கப்பட்டுள்ளன. ஆகவே இது சங்ககாலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம்”[13] என்கிறார். நடுகல்லின் பக்கவாட்டில் விலங்குடன் போரிடும் வீரனின் தோற்றம் இரண்டுமுறை பொறிக்கப்பட்டுள்ளது. மற்றொரு பக்கவாட்டில் விலங்கு உருவமும்; சில ஆயுதங்களும் காணப்படுகின்றன. இதே அமைப்புடைய நடுகல் ஒன்று தேனி மாவட்டம் கம்பம் புதுப்பட்டி அருகே அண்மையில் நான் மேற்கொண்ட களஆய்வின்போது கண்டறியப்பட்டுள்ளது. நடுகல் வீற்றிருக்கும் இப்பகுதி முற்காலத்தில் பாலைநிலமாக இருந்திருக்கலாம். குறிப்பிட்ட இனத்தார் என்றில்லாமல் பல்வேறு சாதியினருக்கும் நடுகற்கள் எடுக்கப்பட்டன. அவ்வாறே பல்வேறு சாதிமக்களும் தற்போதும் நடுகற்களை வழிபட்டு வருகின்றனர்.

திண்டுக்கல் மாவட்டச் சிற்றூர்களில் எல்லைச்சாமி, ஊர்காத்தான் என்ற பெயர்களில் நடுகற்களை மக்கள் வழிபட்டு வருகின்றனர். அய்யனார், மதுரைவீரன், சங்கிலிக் கருப்பன், போன்ற சிறு தெய்வங்களும் நடுகல் வழிபாட்டுடன் தொடர்புடையவை ஆகும். மனிதர்களுக்கு மட்டுமில்லாது விலங்குகளுக்கும் நடுகல் எடுக்கப்பட்டுள்ளது. தன்னுடன் இறந்த அல்லது தன் உயிரைக் காக்க இறந்த குதிரை, நாய், யானை போன்ற விலங்குகளுக்கு நடுகல் பல இடங்களில் எழுப்பட்டுள்ளதை நன்றி உணர்வின் அடையாளமாக எடுத்துக் கொள்ளலாம். பழனி பெரிய நாயகி அம்மன் கோவில் வெளிப்பிரகாரத்தில் குதிரைக்காக எடுக்கப்பட்ட நடுகல் கண்டறிப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.6.6 இனக்குழுத் தலைமை

சங்க இலக்கியப் புறப்பாடல்களில் குறிப்பிடப்படும் சீறூர்மன்னர்கள் என்போர் இனக்குழுத் தலைவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இத்தலைவர்கள் குடிகளால் தேர்வுசெய்யப்பட்டனர். வீரம், வழிகாட்டல், மரபுசார் அறிவு நுட்பம் போன்ற கூறுகள் தேர்ச்சிக்கு அடிப்படைத் தகுதிகளாக இருந்திருக்கக்கூடும். அவ்வாறாகத் தேர்வுசெய்யப்படும் தலைவனே அக்குடிகளின் பிரதிநிதியாக இருப்பான். இவ்வழக்கம் இன்றைய திண்டுக்கல் மாவட்ட மலைப்பகுதிகளில் வாழும் பழங்குடியினரிடையே காணப்படுகின்றது. தாண்டிக்குடி, கடுகுதடி மலைப்பகுதியில் வாழும் மலைக்கிராம மக்கள் 'மழைக்கட்டு' எனும் பொறுப்பு வகிக்கும் தலைவனைத் தேர்வு செய்கின்றனர். தேர்வுசெய்யப்படும் மழைக்கட்டு இறக்கும் வரைக்கும் அப்பொறுப்பினை வகுப்பார். அவர் நினைத்தால் மழைவரும் என்று குடிமக்கள் நம்புவதால் மழைக்கட்டு எனப்படுகிறார். (காண்க, தினமலர்- 06/02/2012) இது சங்ககால இனக்குழுச் சீறூர் மன்னரை நினைவுபடுத்துவதால் அதன் எச்சமாகக் கொள்ளலாம்.

### 5.6.7 வெறியாட்டு

சங்ககால மக்களில் குறிப்பாக குறிஞ்சிநிலத்தாரின் இளம்பெண்கள் தம் காதலனை எண்ணி உருகி வாடுதலால் அவர்கள் மேனியில் சில மாற்றங்கள் ஏற்படும். அதனைக் காணும் தாய் அவளுக்குள் ஏற்படும் இம்மாற்றத்தினை ஆராய்ந்தறியாமல் சூர், ஆவி போன்ற ஏதோ அவள் உடம்பினுள் புகுந்ததாக எண்ணி அவளை வேலன் என்பவனிடம் அழைத்துச் செல்வது குறித்து சங்க இலக்கியங்கள் விவரிக்கின்றன. இதன் தொடர்ச்சியாக இன்று பேயோட்டும் நிகழ்வு இருக்கின்றது. பொதுவாக, பேய் பிடித்தல் என்று சொல்வது பெண்களையே பெரும்பாலும் பாதிக்கின்றது. அது ஒருவகை மனநோய் என்பதை அறியாது பாதிக்கப்பட்டோரை சாமியாடும் நபரிடம் அழைத்துச் சென்று அடித்துத் துன்புறுத்தும் வழக்கம் நடக்கின்றது. இது போன்றே சங்ககாலத்தில் நடைபெற்ற வெறியாடல் நடைபெற்றிருக்கக் கூடும். இன்றைய தமிழகச் சிற்றூர்களில் இன்றளவும் இத்தகைய பாதிப்பிற்கு உள்ளாகும் பெண்களைச் சாமியார்களிடம் அழைத்துச் சென்று சவுக்கு,

விளக்கமாறு, கள்ளிச்செடி கொண்டு அடித்துத் துன்புறுத்துகின்றனர். பேயோட்டுவதாகக் கூறிக்கொண்டு இந்நாகரிகக் காலத்திலும் இவ்வழக்கத்தினையே கடைபிடிக்கின்றனர். இவ்வழக்கம் திண்டுக்கல் மாவட்டத்தில் பரவலாகக் காணப்படுகின்றது.

### 5.7 தொழில்சார் எச்சங்கள்

தொழில் என்பது மனித நாகரிக மற்றும் பண்பாட்டு வளர்ச்சியில் முக்கிய அங்கமாகத் திகழ்கின்றது. சங்ககாலச் சமூகக் கட்டமைப்பு தொழிலின் அடிப்படையில் தான் கட்டமைக்கப்பட்டது என்பதை இயல் 2ல் விரிவாகக் கண்டோம். சங்ககாலத்தில் வாழ்ந்த தமிழ்க்குடிகள் மேற்கொண்ட தொழில்கள் இன்றும் உயிர்ப்புடன் மேற்கொள்ளப்படுகின்றன. குறிப்பாக நிலம்சார்ந்த தொழில்கள் இன்றைய தமிழகத்தில் தொல்சமூக எச்சங்களாக வாழும் குடிகளிடம் காணப்படுகின்றன. அவற்றுள் திண்டுக்கல் மாவட்டத்தில் வாழும் தொல்குடிகளின் தொழில்சார் எச்சங்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.இன்று தமிழக மலைவாழ் மக்களின் வாழ்க்கைத்தரம் ஓரளவு உயர்ந்துள்ளது என்றாலும், பண்டைய இனக்குழுவாழ்வின் எச்சங்கள் இவர்களிடையே முற்றிலும் அழிந்துவிடவில்லை என்பது இவர்கள் வாழ்வியல் மூலம் உணரமுடிகின்றது. கொடைக்கானல், பழனிமலை, சிறுமலை போன்ற மலைப்பகுதிகளான குறிஞ்சிநிலங்களில் வாழும் தொல்குடி அடையாளங்களுடன் திகழும் மலைவாழ் மக்கள் மேற்கொள்ளும் தொழிலில் சங்ககாலக் குறிஞ்சிநிலச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் மேற்கொண்ட தொழில்சார் கூறுகள் காணப்படுகின்றன. குறிப்பாக பளியர், மலைக்குறவர், புலையர் எனும் பழங்குடிகளிடம் தொல்சமூக எச்சங்கள் குடிகொண்டுள்ளன. இவ்விரு குடிகளின் முதன்மைத்தொழிலாகத் தேனெடுத்தல், கிழங்கு தோண்டுதல் உள்ளது. அடுத்ததாக சிறுது காலத்திற்கு முன்புவரை வேட்டைத்தொழில் இவர்களின் மரபு வழி ஒன்றாக இருந்துள்ளது. அரசாங்கத்தின் கெடுபிடிகளால் இன்று வேட்டைத்தொழிலை முற்றிலும் கைவிட்டுவிட்டதாகக் கூறுகின்றனர். இது சங்ககாலக் குறிஞ்சிநில மக்களான குறவர்களின் தொழிலினை நினைவுபடுத்துவதாக உள்ளது.



வள்ளிக்கிழங்கு தோண்டும் பளியர், தேனெடுக்கும் புலையர்

சங்ககால முல்லை நிலங்களில் வாழ்ந்த ஆயர்களின் வழித்தோன்றலாக அறியப்படும் இடையர்கள் (யாதவர், குறும்பர் என அடையாளப்படுத்திக் கொள்வோர்) ஆட்டிடையர், மாட்டிடையர் இருவகைப் பிரிவுகளாக தமிழகத்தில் உள்ளனர். இவர்களின் முக்கியத் தொழில் இன்றளவும் ஆநிரைகளேயாகும். திண்டுக்கல் மாவட்டச் சிற்றூர்களில் அறிந்தவரை யாதவர்களின் முதன்மைத் தொழில் பால் கறத்தல், தயிர் விற்றல், ஆடுமாடுகள் வாங்கி விற்றல் என்பதேயாகும். இச்செயல் சங்ககால முல்லைநில ஆயர்களின் தொழில்சார் எச்சமாக விளங்குகின்றது. இவர்களின் வாழ்வியலைச் சித்தரிக்கும் விதமாகப் பல தமிழ் நாவல்கள் படைக்கப்பட்டுள்ளன. கீதாரி, கிடை போன்ற நாவல்கள் இடையர்களோடு தொடர்புடைய நாவல்களாகும். ஆநிரைகளோடு பின்னிப்பிணைந்ததாக இம்மக்களின் வாழ்க்கை காணப்படுகின்றது. கிடைபோடுதல் எனும் ஆடு மேய்ச்சல் தொழிலினைப் பாரம்பரியத் தொழிலாக இம்மக்கள் மேற்கொள்கின்றனர்.



*கிடை போடும் ஆயர்கள் மற்றும் ஆட்டுப்பட்டி*

சங்ககால மருதநிலத்தினில் வாழ்ந்த தொல்குடிகளின் வழித்தோன்றலாக அடையாளப்படுத்திக் கொள்வோர் பள்ளர் (மள்ளர்) எனும் பிரிவினராவர். இவர்களில் அதிக நிலங்களுக்கு உடைமையாளராக விளங்குவோர் தம் பெயருக்குப் பின் நிலக்கிழார் எனும் அடைமொழிதனை இன்றளவும் பயன்படுத்தி வருகின்றனர். மேலும் இவர்களின் முக்கியத் தொழில் பயிரிடல் ஆகும். திண்டுக்கல் மாவட்டத்தில் வாழக்க்கூடிய இம்மக்கள் உழவுத்தொழில்தனை நம்பியே வாழ்ந்துவருகின்றனர். பெரும்பாலானோர் சொந்த நிலங்களிலும், பிறர் குத்தகை, ஒத்தி போன்ற உறுதிகளுடன் அடுத்தவர் நிலங்களில் உழுதொழில் மேற்கொள்கின்றனர். இவர்களை ‘குடும்பன்’ என்றும் அடையாளப்படுத்துகின்றனர். மருதநிலங்களில் தான் ‘குடும்பம்’ எனும் சமூக அமைப்பு உருப்பெற்றது என்பதெ மானிடவியல் அறிஞர்களின் கருத்து என்பது இங்கு குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.



*திண்டுக்கல் மாவட்ட உழவர்களும் மேற்கொள்ளும் பயிர்த்தொழிலும் (ஆத்தூர் பகுதி)*

சங்ககாலத்தில் தொல்குடியென அறியப்படும் குடிகளுல் பறையர் எனும் பிரிவினரும் குறிப்பிடத்தக்கவர்களாவர். இவர்களை அரசு ஆவணங்கள் 'ஆதிதிராவிடர்கள்' எனச்சுட்டுகின்றன. அக்காலத்தில் அரசுச் செய்திகளை பறையறைந்து நாட்டு மக்களுக்கு பறை எனும் இசைகருவியினை அடித்துக் கூவி அறிவிக்கும் தொழிலினைச் செய்தமையால் இவர்களுக்கு இப்பெயர் வந்தது. இன்றைய தமிழகச் சிற்றூர்களில் வாழும் இம்மக்களில் பெரும்பாலானோர் பறை (தப்பு) எனும் இசைக் கருவியனை நம்பியே தொழில் செய்து வருகின்றனர். மாட்டுத்தோல் கொண்டு பறை எனும் கருவியினை தயார் செய்கின்றனர். இவர்களின் மரபு உணவு மாட்டிறைச்சி ஆகும். சங்ககால ஆகோள் நிகழ்வு முடிந்து திரும்பும் வீரர்கள் அவற்றில் கொழுத்த காளையினை வெட்டி உண்ட செய்தி செவ்வியல் இலக்கியங்களில் பதிவாகியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இதன் மூலம் இனக்குழுத் தமிழர்களின் பாரம்பரிய உணவு இதுவே எனக்கொள்ளலாம். திண்டுக்கல் மாவட்டத்தில் வேடசந்தூர், மாரம்பாடி, பழனி

போன்ற சுற்றுவட்டாரங்களில் வாழும் இம்மக்கள் பறையடிப்பதை முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர்.



பறையடிக்கும் தொல்குடி வழித்தோன்றல்களின் எச்சங்கள்

சங்ககாலப் பாலை நிலங்களில் வாழ்ந்த மறவர்கள் இன்று மறவர், தேவர், கள்ளர் என்ற அடையாளத்துடன் வாழ்கின்றனர். ஆங்கிலேயர் ஆட்சிசெய்த காலம் வரை வழிப்பறி, கொள்ளை என்பதே இம்மக்களின் தொழிலாக இருந்துவந்தது. குற்றப் பரம்பரைச் சட்டம் போன்ற அடக்குமுறைகள் இம்மக்களிடையே மாற்றங்களைக் கொண்டுவந்தது வரலாறாகும். இம்மக்களின் முந்தைய கால வாழ்வியலும் சங்ககால எச்சமாகவே கருதவேண்டியுள்ளது. பின்னாளில் கல்வியில் முன்னேற்றமடைந்தபோது விழிப்புணர்வு பெற்று அத்தொழிலை இம்மக்கள் விட்டொழித்தனர். இம்மக்களின் முந்தைய வாழ்வியல் எச்சங்களை விவரிக்கும் விதமாகப் பல திரைப்படங்கள் வெளிவருவது இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும். அவ்வகையில் ராசையா, அரவான், பாலை, தென்மேற்குப் பருவக்காற்று போன்ற திரைப்படங்களில் இம்மக்களின் களவுத் தொழில் குறித்துச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

சங்ககால நெய்தல்நில மக்களாக வாழ்ந்தோர் பரதவர் எனப்பட்டனர். இன்றைய தமிழகத்தில் இம்மக்கள் திரளாக வாழ்ந்துவருகின்றனர். தூத்துக்குடி, திருநெல்வேலி, கன்னியாகுமரி, ராமநாதபுரம் போன்ற கடலோர மாவட்டங்களில் இம்மக்கள் வாழ்கின்றனர். ஆனால் திண்டுக்கல் மாவட்டத்தில் கடல்சார் நிலங்கள் இன்மையால் இம்மக்கள் இங்கில்லை. சங்ககாலப் பரதவர்களின் தொழிலாக நாம் அறிவது, மீன்வேட்டை, முத்து - சங்கு சேகரித்தல், மீன்வற்றல் விற்றல் ஆகும். இத்தொழில் இன்றளவும் பரதவர்களால் மேற்கொள்ளப்படுகின்றது. மேலைநாட்டுப் பயணிகளான தாளமி, பிளினி போன்றோர்களின் பயணக்குறிப்புகளில் பரதவர்களின் வாழ்வியல் முறைகளை விரிவாக விளக்கியுள்ளனர். இம்மக்களின் தொழில்கள் சங்ககால எச்சங்களாக மிளிர்கின்றன என்பதில் ஐயமில்லை.

### 5.8 முடிவுரை

3000 ஆண்டுகட்கு முந்தைய நமது தமிழ்ச் சமுதாய முன்னோடிகளின் வாழ்வியல் குறித்து அறிய உதவும் எழுத்துப்பூர்வமான ஆவணமே சங்க இலக்கியங்கள் ஆகும். இதற்கு வலுசேர்க்கும் விதமாக விளங்குபவையே தொல்லியல் எச்சங்களாகும். மனிதன் சமூகமயமாக வாழ்ந்திட அவன் உருவாக்கிய ஊர்களின் பங்கு முக்கியமானதாகத் திகழ்ந்தது எனலாம். சங்ககாலத்தில் மக்கள் வாழ்ந்த சிற்றூர்களில் பல பெயர் மருவிவும், திரிந்தும் இன்றைக்கும் காணப்படுகின்றன. அங்கு வாழும் மக்களிடம் பழங்கால வாழ்வியல் கூறுகளின் எச்சங்கள் உள்ளனவா என்று ஆராய்வது புதிய பல செய்திகளை வெளிக்கொணர்வதாக உள்ளது. திண்டுக்கல் மாவட்டம் தமிழ்ச்சமூக வரலாற்றினை பறைசாற்றும் பல தொல்லியல், வாழ்வியல் எச்சங்களைக் கொண்டுள்ளது. இம்மாவட்டத்தில் பல்வேறு இன மக்கள் தொல்தமிழரின் வாழ்வியல் அடையாளங்களுடன் காணப்படுகின்றனர். தமிழர் வரலாற்றை தீர்மானிக்கும் பல அரிய எச்சங்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றன.

## குறிப்புகள்

1. ஆர்.ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப-1
2. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை - 13, ப-93
3. ம.மணிமாறன், மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள், ப-115
4. ஜான் கென்னடி, கோடைமலைப் பழங்குடியினர், ப-34
5. பிங்கல நிகண்டு,ப-381
6. செம்மொழி செம்மொழித்தமிழாய்வு மத்திய நிறுவனச் செய்தி மடல்-3, 2009 சனவரி-சூன்,ப-44
7. கா.கோவிந்தன், சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை - மாநகர்ப் புலவர்கள்- கஉ, ப-46
8. செம்மொழி செம்மொழித்தமிழாய்வு மத்திய நிறுவனச் செய்தி மடல்-3, 2009 சனவரி-சூன், ப-43
9. ப.ஆ. சீதாராம் குருமூர்த்தி, திண்டுக்கல் மாவட்டத் தொல்லியல் கையேடு,ப-116
10. ஆனந்தவிகடன் வார இதழ், 25.4.12,ப-116
11. கள ஆய்வுத் தகவல், நாள்: 18.01.2013, தகவலாளர் - திரு.மாடசாமி நாட்டாமை.
12. கள ஆய்வுத் தகவல், நாள்: 03.03.2013, திரு.இராமசாமி மணியக்காரர்.
13. பேராசிரியர் அ.பிச்சை அவர்களின் உரையாடலில் இருந்து பெறப்பட்டது.
14. சங்க காலத்தில் 'ஆய்' என்பது குடிவழிப் பெயராக இருந்ததாகத் தெரிகின்றது. முல்லை நிலச் சீறூர் மன்னர்கள் வழிநடத்திய பகுதியாக இது இருந்திருக்கலாம். அக்காலத்தில் பழனி மலையினை அடுத்துள்ள இப்பகுதி காடுகள் சூழ்ந்து இருந்திருக்கக் கூடும். எனவே, காடுசார் முல்லை நிலமாதலின், அங்கு முல்லை

நிலக்குடிகளான ஆயர்கள் குழுமி வாழ்ந்திருந்ததால் ‘ஆயர்கள் குடி’ என்று வழங்கப்பட்டு, பின்னாளில் ஆய்குடி என்று மருவியிருக்கலாம். இதன் வழித் தோன்றலாக, பிற்காலத்தில் இப்பகுதி பாளையமாக (ஆயக்குடி ஜமீன்) இருந்தது இங்கு ஒப்புநோக்கத்தக்கதாக உள்ளது.

15. திண்டுக்கல் மாவட்டம் நிலக்கோட்டை வட்டத்தில் வைகை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ள தாதபட்டியில் அண்மையில் கிடைக்கப்பெற்ற நடுகல் சங்ககாலத்தைச் சேர்ந்தது என்று உறுதிசெய்யப்பட்டுள்ளது.

16. வேங்கைமரம் குறித்த நம்பிக்கை பழங்குடியின மக்களிடம் அதிகமாகக் காணப்படுகின்றது. வேங்கை மரத்தின் பட்டையினைக் கத்தி கொண்டு இம்மக்கள் சீவுகின்றனர். அதிலிருந்து சிவப்பு நிறத்தில் இரத்தம் போல் மரத்தின் பால் வடிகின்றது. அடுத்த சில வினாடிகளில் சிவப்புநிறம் கருமையாக (தார்போல்) மாறிவிடுகின்றது. அதனைச் சேகரித்துத் தங்கள் குழந்தைகளின் நெற்றியில் பூசுகின்றனர். அவ்வாறு செய்கையில் அவர்களுக்குப் பயம் விலகி, வீரம் குடிகொள்ளுவதாக நம்புகின்றனர். சங்ககாலக் குறிஞ்சிநில மக்கள் தம் இருப்பிடங்களை வேங்கை மரங்கள் சூழ்ந்த பகுதிகளிலேயே பெரும்பாலும் அமைத்தனர் என்பதனை இயல் இரண்டில் விளக்கியுள்ளோம் இக்குறிப்பு இங்கு நோக்கத்தக்கதாகும்.

## இயல் - 6

## ஆய்வு முடிவுரை

### 6.1 முன்னுரை

ஏட்டில் உள்ள இலக்கியங்கள் யாவும் வெற்றுவரிகளல்ல. அவை சமூகத்தின் பிரதிபலிப்பாக விளங்குபவையாகும். இலக்கியங்களுக்கான விதை சமூகத்தில் இருந்துதான் பெறப்படுகின்றன. ஒவ்வொரு இலக்கியமும் ஏதாவது ஒரு தாக்கத்தினால் எழுந்தவையே எனலாம். இலக்கியமும் சமூகமும் நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவையாகும். இவை இரண்டிற்குமுள்ள தொடர்பு ஆழமானதாகும். எழுத்தாளன் தான் அனுபவித்த, பாதிக்கப்பட்ட, கண்டுணர்ந்த நிகழ்வுகளையே இலக்கியம் என்னும் ஊடகத்தின் வாயிலாக விவரிக்கின்றான். அவ்வகையில் சங்ககாலத்தில் நிலவிய வாழ்வியல் அனுபவங்களை அழகியல் உக்தியுடன், தமக்கேயுரிய புனைவுத் திறத்துடன் புலவர்கள் விவரித்துள்ளவையே சங்க இலக்கியங்களாகும். அப்படிப்பட்ட இலக்கியத் தரவுகளை முன்வைத்து ஆய்வுசெய்து பெறப்பட்ட முடிவுகளை இவ்வியல் விவரிக்கின்றது.

### 6.2 இருப்பிடங்கள்

சமூகமயமான மனிதனுக்குப் பாதுகாப்பான குடும்ப வாழ்க்கைக்குக் குடியிருப்புகள் அவசியமாகின்றன. இருப்பிடங்கள் தான் சமூகம் உருவாகக் காரணமாக அமைந்தது. இருப்பிடங்கள் இல்லையேல் மனிதன் நாடோடியாகவே இருந்திருப்பான். குடும்பம், சமூகம், ஊர் என்ற இவைகளெல்லாம் தோற்றம் பெற்றிருக்காது. அந்த வகையில் சங்ககால மக்கள் சமூகமயமான வாழ்வு வாழ்ந்தார்கள் என்றால், அதற்கு அவர்கள் இருப்பிடங்கள் ஓர் முக்கியக் காரணமாகும்.

6.2.1 இருப்பிடத்தின் அமைப்பை வைத்து அதுசார்ந்தவர்களின் பின்புலத்தினைக் கணிக்க முடியும். அவ்வகையில் ஐந்திணை மாந்தர்கள் இருப்பிடங்களை நோக்குகையில் அம்மக்களின் சமூகப் பொருளாதாரப் பின்புலம் தெளிவாக

விளங்குகின்றது. குடிசைகளில் வாழ்ந்த மக்களில் பெரும்பாலோர் இனக்குழு மரபில் வந்த மக்களாவே உள்ளனர். அதாவது இனக்குழுத் தலைமை கொண்ட மக்கள் வாழ்ந்த வீடுகள் பெரும்பாலும் குடிசைகளாகவே இருந்தன. சான்றாக, குரம்பை, சிற்றில், குற்றில், குடில் போன்ற இல்லங்களில் இம்மக்கள் வாழ்ந்தனர். நெடுநகர், வளமனை, மாடம் போன்ற வீடுகள் சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்த மக்கள் வாழ்ந்தவையாகும்.

6.2.2 பேரூர்கள் அதிகமாகக் காணப்பட்ட ஆற்றுப் படுகைகளில் (மருதநிலம்) உறுதியான இல்லங்கள் அமைக்கப்பட்டன. அங்கு கிழார்கள், அரசர்கள் போன்ற அதிகாரவர்க்கத்தினர் வாழ்ந்தனர். ஆனால் முல்லை மற்றும் குறிஞ்சி, பாலை போன்ற நிலங்களில் எளிமையான குடிசைகளே பெரும்பாலும் காணப்பட்டன. இங்கு சீறூர் மன்னர் என்னும் இனக்குழுத் தலைவர்கள் அவர்கள் சார்ந்த குடிகள் வாழ்ந்தனர். இம்மக்களது வீடுகள் முந்தைய இனக்குழு வாழ்வினது எச்சங்களோடு காணப்பட்டன.

6.2.3 புல்வேய் குடிசைகள், ஈத்திலைக் குரம்பைகள், வாடுமடல் குடில்கள் (தென்னை ஓலை, பனை ஓலை) என்னும் அமைப்பு சிற்றூர்களுக்கே உரித்தானவையாகும். இவ்வகை இருப்பிடங்கள் சூழலியலுக்கு ஏற்றவையாகும். இவற்றால் புவிக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படுவதில்லை. இவ்வகை அறிவினை உடையவர்களாகச் சிற்றூர் மக்கள் காணப்படுகின்றனர். இன்றைக்கு உள்ள நிலைமை அவ்வாறு இல்லை. அடுக்கு மாடி வீடுகளால் நெருக்கடியும் சுற்றுச்சூழலுக்குத் தீங்கும்தான் ஏற்படுகின்றன.

6.2.4 சங்ககாலப் பேரூர்களில் காணப்பட்ட ‘எழுநிலை மாடங்கள்’ (ஏழு அடுக்குகள் கொண்ட வீடுகள்) இன்றைய பேரூர்களுக்கு வித்தாக அமைந்தவையாகத் தோன்றுகின்றது. ஆகவே, சிற்றூர் மக்களது வீடுகளே சூழலுக்கு உகந்தவை. பேரூர்களில் எயில்களுக்கு அகழிகள், உயர்ந்த மதிற்சுவர்களை எழுப்பித் தங்களைப் பாதுகாத்துக் கொண்டர் என்றால், சிற்றூர்மக்கள் இயற்கை அரண்களான மலைகளின் சாரலிலும்,

முள்மரங்களை நட்டு வேலியமைத்தும் தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர். இவ்விரு செயல்களும் அந்தந்த மக்களின் பின்புலத்தினையே காட்டுகின்றது.

### 6.3 சிற்றூர்ச் சமூகமும் அதன் உட்கூறுகளும்

சமூகம், சமுதாயம் என்ற இரு சொற்களும் ஒன்றுபோலத் தோன்றினாலும் அவை வெவ்வேறு பொருளுடையவையாகும். இரண்டுமே மக்களை உள்ளடக்கிய அமைப்பாகும். சமூகத்தின் உட்கூறே சமுதாயம். சமுதாயத்தில் பிரிவுகள் உண்டு, சமூகத்தில் மக்கள் அனைவரும் ஒருசேரக் குறிக்கப்படுகின்றனர். தொல்காப்பியர் காலத்தில் சமூகம் பல கூறுகளாக இருந்ததை அறிய முடிகிறது. நாற்பாற்குலம், மேலோன், கீழோன், இழிசினன் போன்ற சொற்கள் அக்காலத்தைய சமூக ஏற்றத்தாழ்வுகளைக் குறிக்கின்றன. தொல்காப்பியர் தமிழரா? தமிழ் கற்றுத்தேர்ந்த ஆரியரா? என்று எண்ணத் தோன்றுகின்றது. ஏனென்றால் மனுதர்மம் குறிப்பிடும் ஆரியச் சாயலில் தொல்காப்பியரது கருத்துக்கள் இருப்பதைக் காணமுடிகின்றது. வீரத்தினை முன்வைத்து ஆண்களுக்கான உரிமை முதல் நிலையிலும், கற்புக் கோட்பாட்டினை முன்வைத்து பெண்கள் இரண்டாம் நிலையினராகவும் பாவிக்கப்பட்டனர். பெண்களைக் கோழைகளாக எண்ணி அடக்கிய சமூகமாக விளங்கியது தொல்காப்பியர் காலச் சமூகம். பெண்களில் ஒரு பிரிவினரை ஆண்களின் சுயதேவைக்கெனப் பரத்தை, காமக்கிழத்தி என அடையாளப்படுத்தி அவர்களைத் தங்கள் உடற்பசிக்குப் பயன்படுத்தியதனைக் காணமுடிகிறது.

6.3.2 சங்ககாலச் சிற்றூர்கள் பண்டைய இனக்குழுச் சமூக எச்சங்களுடன் வாழ்ந்த மக்களைக் கொண்டிருந்தன. இனக்குழுத் தலைவன் என்னும் சீறூர்மன்னனின் வழிகாட்டுதலில் சங்ககாலச் சிற்றூர்கள் இயங்கியன. பண்டைத் தமிழகத்தில் முதன்முதலில் சிற்றூர் அமைப்பே தோற்றம் பெற்றது; அதிலிருந்தே பேரூர்கள் வளர்ந்து விரிவடைந்தன. பண்டைத் தமிழக அரசியல் சீறூர் மன்னனிடம் இருந்தே துவங்குகிறது.

6.3.3 சீறூர்மன்னர் வீரத்திலும், பண்பிலும், கொடைச் சிறப்பிலும், தன்மானத்திலும் வேந்தரை விடச் சிறந்து விளங்கினர். பாதீடு, மகள்மறுத்தல், வேந்துவிடு தொழில் என்ற இவையாவும் முதுகுடிச் சீறூர் மன்னர் பின்பற்றிய செயல்களாகும். இவை யாவும் தம் குடிகளைக் காக்கவும், தன்மானம் கருதியும் சீறூர் மன்னன் செயல்பட்டதனைக் குறிக்கின்றன. இப்படிப்பட்ட இனக்குழு மரபைத் திட்டமிட்டுச் சில உயர்வர்க்கங்கள் அழிக்க நினைத்தன. அரசர்களின் நாடுகொள்ளும் செயலால் பல சிற்றூர் மன்னரும், பல சிற்றூர்களும் சீரழிக்கப்பட்டன. இதற்கு மகள் மறுத்தல் நிகழ்வு முக்கியக் காரணமானது.

6.3.4 சிற்றூர் மன்னரின் அடியொற்றி எழுந்தவர்கள் குறுநில மன்னர் எனப்பட்டனர். பல சிற்றூர்களை ஒருங்கிணைத்து ஆண்டவர்கள் குறுநில மன்னராவர். மருத நிலம் மற்றும் இதர நிலங்களில் காணப்பட்ட சிற்றூர்களில் நில உடைமையாளர்களாக எழுச்சி பெற்றோர் கிழார் எனப்பட்டனர். குறுநில மன்னர்களின் எழுச்சியினையும் அரசர்கள் தடுக்க நினைத்தனர். ஆயினும் குறுநில மன்னர்கள் வீரம் செறிந்தவர்களாக அரசர்களை எதிர்த்து வந்தனர்.

6.3.5 தொல்காப்பியர் காலம் போன்றே சங்க காலமும் பிரிவினைச் சமூகமாக விளங்கியது. குடி, குலம் என்னும் சொற்கள் மக்கள் கூட்டத்தையும், பிரிவுகளையும் குறிக்கும் சொற்களாகும். சங்ககாலத்தில் பல குலக் குழுக்கள் காணப்பட்டன. இனக்குழுச் சமூகம் மறைந்த போது எழுந்த உடைமை வர்க்கம் குடிகளிடம் பிரிவினைகளை விதைத்தது. சங்கப் பாக்களில் இடம்பெற்றுள்ள மேலோன், கீழோன், இழிசினன் போன்ற சொற்கள் ஆதி இனக்குழுச் சமூக எச்சங்கள் கொண்ட மக்களைப் பிரிவினைக்கு உட்படுத்திய ஏற்றத்தாழ்வுகள் மிக்க சமூகமாகச் சங்க காலத்தை அடையாளப்படுத்துகிறது. இன்றைய சிற்றூர்களில் காணப்படும் பிரிவினைகளுக்குச் சங்ககாலத்தில் நாடுகொள்ளும் விளைவால் ஏற்பட்ட உடைமை ஆதிக்கச் சமூகம் உருவாக்கிய சமூகப் பிரிவினைகளே மூலக் காரணமாக விளங்கியன.

### 6.4 சிற்றூர் வாழ்வியல்

மலைகளும் குன்றுகளும் அவற்றைச் சார்ந்த இடங்களும் குறிஞ்சி நிலத்தில் இருந்த ஊர்களுக்குக் குறிச்சி என்று சுட்டப்பட்டன. இது வானம்பார்த்த பூமியாக விளங்கின. தினை இந்நிலத்தின் முக்கியப் பயிராக விளங்கியது. மரம் செடி கொடிகளை வெட்டி அப்புறப் படுத்திக் கிளறிக் கொத்தி நிலத்தைப் பண்படுத்தினார்கள். பண்படுத்திய நிலத்தை ஏரினால் உழாமல் இயற்கையான மழைநீரை எதிர்நோக்கிப் பயிரிடப்பட்டவையாகும். மலையுச்சியிலுள்ள பாறைகளில் மலைத்தேன் கிடைத்தது. கிழங்குகளும் கனிகளும், வேட்டையாடப்பட்ட இறைச்சியும் இம்மக்களின் முக்கிய உணவுகளாயின.. தேனை மூங்கிற் குழாய்களில் வைத்துப் பதப்படுத்தி ஒருவகை மதுவையும் (தேறல்) தினையரிசியிலிருந்தும் (தோப்பிக்கள்) மதுபானம் உண்டாக்கினார்கள். இவர்களுடைய வாழ்க்கை கடின வாழ்க்கையாகவே இருந்தது எனலாம். இவர்களுடைய உணவு உற்பத்தி போதுமானவையன்று, பற்றாக்குறையாகவே இருந்தது. இவர்களுடைய வாணிகம் பொதுவாகப் பண்டமாற்றாக இருந்தது. மலைத்தேன், யானைத் தந்தம், புலித்தோல், அகில், கட்டை, சந்தனக் கட்டை ஆகியவற்றை அண்டை நிலத்தவரிடம் விற்று மாற்றுப் பண்டங்களைப் பெற்றுக்கொண்டார்கள். இவர்கள் வாழ்ந்த இயற்கைச் சூழ்நிலை நாகரிகம் பெறுவதற்கு ஏற்றதாக இல்லை என்றே கருத வேண்டியுள்ளது.

6.4.2 மலைகளின் அடிவாரத்தில் உள்ளது முல்லை நிலம். இங்கு வாழ்ந்த மக்கள் பசுக்களையும் ஆடுகளையும் எருமைகளையும் வளர்த்தார்கள். அவைகளைக் காடுகளில் ஓட்டி மேய்த்தார்கள். வரகு, கேழ்வரகு ஆகிய தானியங்களைப் பயிரிட்டார்கள். அவரை, துவரை போன்றவைகளையும் பயிரிட்டார்கள். இவை வானம் பார்த்த பயிர்களாகும், மழையை, எதிர்பார்த்தே பெருவாரியான வேளாண்மை இருந்தது. வரகு, தினை போன்றவற்றை உணவாக உண்டார்கள். பால், தயிர், நெய் போன்ற ஆநிரைகளில் இருந்து பெறப்படும் பொருட்களை உணவாக உண்டார்கள்.

உபரியினைப் பெரும்பாலும் பண்ட மாற்றாகவே விற்றார்கள். முல்லை நிலத்து மக்கள் வாழ்க்கை, குறிஞ்சி நிலத்து மக்கள் வாழ்க்கையை விடச் சற்று உயர்ந்திருந்தது.

6.4.3 ஏரிகள் அல்லது ஆறுகளைச் சார்ந்திருந்தது மருத நிலம். நிலவளமும் நீர் வளமும் உள்ள மருத நிலத்தில் மண் வளம் மிக்க வயல்களில் நெல்லைப் பயிரிட்டார்கள். எருதுகளையும், எருமைகளையும் பூட்டிய ஏர்களினால் நிலத்தை உழுது, பண்படுத்தி எருவிட்டு விதை விதைத்து நீர்பாய்ச்சி நெல்லை விளைத்தார்கள். கரும்பையும் காய்கறி முதலான உணவுப் பொருள்களையும் பயிரிட்டார்கள். நெல்லைப் பயிரிட்டு உணவுக்குக் கட்டுப்பாடில்லாமல் வாழ்ந்தபடியினால் மருத நிலத்து மக்கள் வாழ்க்கை மற்ற நிலத்து மக்கள் வாழ்க்கையைவிட பலமடங்கு உயர்ந்திருந்தது. வாழ்க்கையில் அதிகம் கவலைப்படாமல் இருந்த இவர்களுக்கு ஓய்வும் கிடைத்தது. ஆகவே இவர்கள் நாகரிகம் பண்பாடும் பெற்று வாழ வாய்ப்பிருந்தது. உலகத்திலே எல்லாத் தேசங்களிலும் மக்கள் நாகரிகம் பெற்ற இடம் ஆற்றங்கரைகளிலும் ஏரிக் கரைகளிலுந்தான் என்று வரலாறு கூறுகிறது. இது உண்மையே. தமிழ்நாட்டிலும் மக்கள் நாகரிகம் பெற்று வளர்ந்த இடம் ஆற்றங்கரைகளும் ஏரிக்கரைகளுமே. ஆகவே, மருத நிலத்திலே தான் தமிழருடைய நாகரிகமும் பண்பாடும் வளம் பெற்று வளர்ந்தன. கைத்தொழில்களும், கலைகளும் வாணிகமும் செல்வமும் அரசியலும் மருத நிலங்களிலே செம்மையாகச் செழித்து வளர்ந்தன. மருத நிலத்து மக்கள் கட்டடங்களையும் மாளிகைகளையும் அரண்மனைகளையும் அமைத்துக் கொண்டு நாகரிகமாகவும் வசதியாகவும் வாழ்ந்தார்கள்.

6.4.3 நெய்தல் நிலம் மணல் நிலம் ஆகையினால் இங்கே நெல், கேழ்வரகு முதலான தானியங்கள் விளையவில்லை. ஆகவே நெய்தல் நிலத்து மக்கள் கட்டுமரங்களிலும் படகுகளிலும் கடலில் வெகு தூரம் போய் வலைவீசி மீன் பிடித்துவந்து விற்று வாழ்ந்தார்கள். கடலில் சுறா, இறால், திருக்கை முதலான மீன் வகைகள் கிடைத்தன. அவற்றைப் பிடித்துவந்து

அயல் ஊர்களில் விற்று (பண்டமாற்று செய்து) தானியங்களைப் பெற்று வாழ்ந்தார்கள். விற்று எஞ்சிய மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்தி உலர்த்திக் கருவாடு செய்து விற்றார்கள். சில இடங்களில் கடற்கரையோரங்களில் உப்பளங்கள் இருந்தன. அங்கு கடல்நீரைப் பாய்ச்சி உப்பு உண்டாக்கினார்கள். உப்பை நெல்லுக்குப் பதிலீடாகப் பெற்றார்கள். நெய்தல் நிலத்து மக்கள் வாழ்க்கை கடினமான வாழ்க்கையே. குறிஞ்சி நில மக்கள் வாழ்க்கை ஒரு வகையில் கடினமானது என்றால் நெய்தல் நிலத்து மக்கள் வாழ்க்கை வேறு வகையில் கடினமானது.

6.4.4 சங்ககால இனக்குழு மக்கள் புலால் உணவினையே விரும்பியுண்டனர். இது பண்டைய நாடோடி இனக்குழு வாழ்வில் மேற்கொண்ட வேட்டைச் செயலின் தொடர்ச்சியாகவே தெரிகின்றது. குறிப்பாகச் சங்ககாலச் சிற்றூர் மக்களே இவ்வகை வேட்டை உணவுகளைப் பெரிதும் விரும்பி உண்டனர். அந்தந்த நிலங்களில் காணப்பட்ட உண்ணக்கூடிய விலங்குகளைத் தத்தம் பாரம்பரிய மரபுகளின் அடிப்படையில் வேட்டையாடி உண்டனர் என்பதைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. தமிழக இனக்குழு மக்களின் ஆதிகாலத்து புலால் உணவில் ஆநிரை இறைச்சி முக்கியமான ஒன்றாகத் திகழ்ந்தது. குறிப்பாக மாட்டிறைச்சி, தொல்காப்பியப் புறத்திணையில் ஆநிரை கவர்ந்த வீரர்கள் அம்மகிழ்ச்சியைக் கொண்டாட காளையினை அறுத்து உண்ட செய்திகள் பதிவாகியுள்ளன. சீறூர் மன்னர்களும் காளையினை அறுத்து உண்டதாகப் புறப்பாடல்கள் விவரிக்கின்றன. ஆனால், பிற்காலங்களில் இவ்வுணவு தீட்டாகக் கற்பிக்கப்பட்டது. அதனை உண்போர் தாழ்ந்த மக்கள் என அடையாளப்படுத்தப்பட்டனர். உண்மையில் இது ஆதித்தமிழர்களின் பாரம்பரிய உணவு என்பது குறிப்பிடத்தக்கது.

6.4.5 சங்ககால இனக்குழு மக்கள் தம் வாழ்வில் பல்வேறு நம்பிக்கைகளையும், சடங்கு முறைகளையும் கொண்டிருந்தனர். இது ஆதிகால இனக்குழு வாழ்வில் ஏற்பட்ட அச்சத்தின் விளைவால் உருவானவையே ஆகும். வழிபாடு என்னும் போது நடுகல் வழிபாடே இனக்குழு மக்கள் ஏற்படுத்திய

வழிபாட்டு முறையாகத் தெரிகின்றது. ஏனையவை அச்சத்தினாலும், பிறரால் புகுத்தப்பட்டவையுமாகவே தெரிகின்றது.

6.4.6 ஆதிச் சிற்றூர்ச் சமூகம் வேந்தர்களால் சிதறடிக்கப்பட்ட பின்பு நகர்மயமாதல் என்னும் நிகழ்வு அன்றே தொடங்கிற்று எனலாம். கோட்டைகளும் மாடமாளிகைகளும் அரசர்களால் நிர்மாணிக்கப்பட்டன. எண்ணற்ற சிற்றூர்களும், சிற்றூர் வாழ்வின் அடையாளங்களும் அழிக்கப்பட்டன; சிற்றூர்கள் பேரூர்களாயின. இதுவே இன்றைக்கும் தொடர்கின்றது. இன்று சிற்றூர்களைத் தேட வேண்டியுள்ளது. நகர்மயமாதல் என்பது பல சிற்றூர்களை விழுங்கிவிட்டது. இதனால் நமது பண்பாடுகளும் வாழ்வியல் விழுமியங்களும் அழிக்கப்பட்டு, நமது அடையாளங்களையும், வரலாறுகளையும் அடுத்த தலைமுறைகள் அறியமுடியாமல் போகின்றன.

## 6.5 சங்ககால வாழ்வியல் எச்சங்கள்

சங்ககால மக்கள் வாழ்வியலை வெறும் இலக்கியச் சான்றுகளை மட்டும் வைத்துக்கொண்டு வரையறுப்பது அதன் உண்மைத் தன்மையினைக் குறைக்கும் என்பதால், அதற்கு வலு சேர்க்கத் தொல்லியல் எச்சங்கள் குறித்த ஆய்வு அவசியமாகின்றது. திண்டுக்கல் மாவட்டத்தில் கிடைக்கப்பெற்ற தொல்லியல் எச்சங்களை வைத்துப் பார்க்கும்போது, (குறிப்பாக பொருந்தல், தாண்டிக்குடி அகழ்வாய்வு) இம்மாவட்டத்தின் பெருவாரியான பகுதிகள் சங்ககால மக்கள் வாழ்ந்தவையே என்பது உறுதியாகின்றது. அவ்வாறு கிடைக்கப்பெறும் சங்ககால எச்சங்களை ஆய்வுக்கு உட்படுத்துவதும், அவற்றைப் பாதுகாத்திட வழிவகை செய்வதும் அவசியமான ஒன்றாகும்.

6.5.1 தமிழகத்தில் தொல்லியல் அகழ்வாராய்ச்சிகளின் மூலம் கிடைக்கப்பெற்ற பல்வேறு எச்சங்களை அறிவியல் பூர்வமாகக் கணிக்கப்பட்டதில், அவை சுமார் 2500 ஆண்டுகட்கு முற்பட்டவை எனத் துல்லியமாக நிரூபிக்கப்பட்டுள்ளது. அவ்வாறு கிடைக்கும் வாழ்வியல் தடயங்களைப் பார்க்கையில், அவற்றோடு சங்க இலக்கியம் குறிப்பிடும் மக்கள் வாழ்வு

பல்வேறு வகைகளில் நெருங்கிய தொடர்பு கொண்டவையாக இருப்பதால் சங்ககால வாழ்வியல் அடையாளங்களைத் தேடி ஆவணப்படுத்த வேண்டியது அவசியமான ஒன்றாகும்.

6.5.2 திண்டுக்கல் மாவட்டம் சங்ககால நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை எனும் நான்கு வகைப்பட்ட நிலங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. சங்ககால எச்சங்கள் பொதுவாகக் குறிஞ்சிசார் மலைப் பகுதிகளிலேயே அதிகளவில் காணப்படுகின்றன. சங்ககாலத்தில் வாழ்ந்த குடிகளின் வழித்தோன்றல்கள் இம்மாவட்டத்தில் பெருவாரியாக வாழ்ந்துவருகின்றனர். தமிழக வரலாற்றுக் கட்டுமானத்தில் திண்டுக்கல் மாவட்டம் முக்கியப் பங்குவகிக்கின்றது. இதற்கு இங்குக் காணபப்படும் சங்ககாலத் தொல்லியல் எச்சங்களே சாட்சியாகின்றன. இனக்குழு வாழ்வின் நேரடி எச்சங்களான இம்மாவட்டத்தின் மலைப்பகுதிகளில் மிகுதியாக வாழும் புலையர், பளியர் போன்ற பழங்குடியினர் சங்ககால வாழ்விலைப் பிரதிபலிப்பவர்களாகக் காட்சியளிக்கின்றனர்.

6.5.3 சங்ககால இனக்குழு மக்களும் அவர்களின் பண்பாடுகளும் அரசர்களின் பிற்போக்குச் சிந்தனையினால் உருத்தெரியாமல் இருட்டடிப்பு செய்யப்பட்டன. தொல்குடிமக்கள் சமூகத்தின் அடிநிலைக்கு நகர்த்தப்பட்டனர். பார்ப்பனச் சூழ்ச்சியால் மண்ணின் மைந்தர்கள் ஓரங்கட்டப்பட்டு தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கப்பட்டனர். இன்றும் அவ்வாறே இனக்குழு எச்சங்களான ஆதிவாசி மக்கள் சுரண்டப்படுகின்றனர்.

6.5.4 இன்றைக்கும் ஐவகை நிலங்கள் உள்ளன. ஆனால் அவை சங்ககாலச் சூழலில் இல்லை. நகர்மயமாதலால் சிதைக்கப்பட்டு உருமாறி வருகின்றன. முல்லைநிலக் காடுகளும், குறிஞ்சிநில மலைகளும், மருதநில வயல்களும் தரைமட்டமாக ஆக்கப்பட்டு அங்கு வீட்டுமனைகளும், ஆலைகளும் உருவாக்கப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ள எண்ணற்ற உயிரினங்கள் இன்று காணாமற் போயுள்ளன. கடற்புரங்களிலும் இதே நிலைதான். அவற்றின்

விளைவு; சுனாமி, நிலச்சரிவு, வெள்ளச்சேதம், வெப்பமயம்(Global Warming) போன்ற புதிய புதிய அழிவுகள் பெருகிவருகின்றன. இதன் காரணம், நமது பண்டைய வாழ்வினை மறந்து வாழ்வதேயாகும்.

6.5.5 இந்த நிலை மாற நம் சங்ககால மக்கள் வாழ்ந்த வாழ்வியலையும், அதற்குச் சான்றாக அமையும் தொல்லியல் எச்சங்கள் மற்றும் வாழ்வியல் எச்சங்களை மீட்டுருவாக்கம் செய்தலும்; காணப்படும் எச்சங்களைப் பேணிப்பாதுகாத்து, அடுத்த தலைமுறை அறியுமாறு செய்வதும் நமது கடமையாகும்.

6.5.6 இதுவரை சங்ககாலச் சமூகம் குறித்த ஆய்வுகள் இயற்கைச் சூழலியத்தினால் அக்காலத்தினை உயரிய பொற்காலம் என்றே கூறிவந்துள்ளனர். மேலும், சங்ககாலம் குறித்த பொதுவான கண்ணோட்டமே இருந்துவந்துள்ளது. சங்ககாலச் சமூக அடுக்குகளைப் பகுத்துப் பார்த்தோமேயானால், சங்ககாலச் சமூகத்தின் அடிப்படை அங்குள்ள சிற்றூர்களில் வாழ்ந்த இனக்குழு மக்களே என்பது புலனாகும்.

### 6.5.7 எதிர்கால ஆய்வுகள்

சங்ககாலப் பண்பாடு குறித்த எச்சங்கள் இன்றைய தமிழகத்தில் உள்ளனவா என்ற ஆய்கின்றபோது, வளர்ந்து வரும் கலாச்சாரச் சீரழிவுகள், நவீனமயமாதல், ஆடம்பர வாழ்வு மோகம் போன்றவை எஞ்சியுள்ள ஒன்றிரண்டு மரபுகளையும் மழுங்கடிப்பதாக உள்ளன. இந்நிலை தொடர்கையில் தமிழர்களுக்கென்ற தனித்துவமான பண்பாடுகள் இருந்தனவா? என்று அடுத்த தலைமுறை கேட்கும் அவலம் ஏற்பட்டுவிடும். ஆகவே இருப்பதைத் தக்கவைக்கவும் ஆவணப்படுத்தவும் **'காலந்தோறும் சிற்றூர் வாழ்வியல்'** என்னும் ஆய்வினை இவ்வாய்வினை மாதிரியாகக் கொண்டு ஒட்டு மொத்தத் தமிழகத்தினையும் ஆய்வுக்களமாக எடுத்துக்கொண்டு ஆய்வு செய்து, தமிழத்தில் இதுவரை கிடைக்கப்பட்ட தொல்லியல் எச்சங்களைச் சங்ககாலத்தோடு ஒப்பிட்டு வகைப்படுத்தி ஆவணப்படுத்தினால் செம்மொழித் தமிழுக்கும், தமிழ்ச் சமூகத்திற்கும் பயனுள்ளதாக அமையும்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்:


.................... சங்க இலக்கியங்கள் (மூ.உ.),
(எட்டுத்தொகை பத்துப்பாட்டு ஆகிய 18 நூல்கள்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை - 98.
ம.ப. - 2011.


## துணைமைச் சான்றுகள்:


அழகர், க., விருதுநகர் மாவட்டப் பளியர்களின் வாழ்வியல்
வெண்ணிலா வெளியீடு
மேல ஆவரம்பட்டி,
இராஜபாளையம் - 117
மு.ப. - 2004.

அறவாணன், க.ப., தமிழ் மக்கள் வரலாறு
(தொல்தமிழர் காலம்)
மாணவர் மறுதோன்றி அச்சகம்
பாரிமுனை, சென்னை-29
மு.ப. - 2005.

அன்னிதாமசு., தமிழர் சமூகவியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
மு.ப. - 2000.

அங்கமுத்து, தி.நா., (உ.ஆ.) சீவகசிந்தாமணி (மூ.உ.)
வானதி பதிப்பகம்,
தி.நகர், சென்னை - 17
2007

ஆளவந்தார், ஆர்., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
மு.ப. - 1984.

இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
மு.ப. - 1970.

ஃபிரடெரிக் எங்கெல்ஸ்., குடும்பம் தனிச்சொத்து அரசு
ஆகியவற்றின் தோற்றம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
இ.ப. 2011.

கந்தையா, ந.சி., வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தமிழகம்
(Pre Historic - Tamils)
புரொகிரசிவ் அச்சகம்,
சென்னை
இ.ப - 1948.

………….. தமிழர் சரித்திரம்
அமிழ்தம் பதிப்பகம்,
தி. நகர்,
சென்னை - 17
மு.ப. - 2003

................ பெண்களும் சமூகமும் அன்றும்-இன்றும்
அமிழ்தம் பதிப்பகம்,
தி. நகர்,
சென்னை - 17
மு.ப. - 2003.

கரிகாலன், நைசி., (தொ.ஆ.) பத்துப்பாட்டு ஆய்வுகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப - 2011.

காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
ம.ப - 2008.

காமாட்சி, மு., (தொ.ஆ.) சங்ககாலம்: தொல்பொருள் ஆய்வுகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப - 2011.

கிருஷ்ணராஜா, சோ., சங்ககாலச் சமூகமும் சமய -
மெய்யியற் சிந்தனைகளும்
குமரன் புத்தக நிலையம்
வடபழனி, சென்னை - 26
மு.ப - 2007.

கைலாசபதி, க., தமிழ் வீரநிலைக் கவிதை
குமரன் புத்தக நிலையம்
வடபழனி, சென்னை - 26
மு.ப - 2006.

கோவிந்தன், கா., கா.கோவிந்தன், சங்கத்தமிழ்ப் புலவர்வரிசை-8,
(கிழார் பெயர்பெற்றோர்),
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த
-நூற்பதிப்புக் கழகம், (லிமிடெட்)
பிராட்வே, சென்னை -1
மு.ப - 1954.

.......................... சங்ககால அரசர் வரிசை -ரு
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த
-நூற்பதிப்புக் கழகம், (லிமிடெட்)
பிராட்வே, சென்னை -1
ம.ப - 1963.

.............................. சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை
(மாநகர்ப் புலவர்கள் - கஉ,)
திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த
-நூற்பதிப்புக் கழகம், (லிமிடெட்)
பிராட்வே, சென்னை -1
ம.ப - 1964.

........................... தமிழர் தோற்றமும் பரவலும்
ராமையா பதிப்பகம்
சென்னை - 14
மு.ப - 2011.

சங்கரன், கி.ரா., தமிழக வரலாற்றில் சில போக்குகள்
பாவை பப்ளிகேஷன்ஸ்
இராயப்பேட்டை, சென்னை - 14
மு.ப - 2010.

சண்முகம் பிள்ளை, மு., சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
ம.ப - 1996.

…………… சங்கத் தமிழர் வாழ்வியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113.
ம.ப - 2004.

சிதம்பரனார், சாமி., தொல்காப்பியத் தமிழர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப - 2002.

…………….. எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்
அறிவுப் பதிப்பகம்
இராயப்பேட்டை, சென்னை - 14
இ.ப. - 2008.

சிற்றம்பலம், தி.க., பண்டைய தமிழகம்
குமரன் பப்ளிஷர்ஸ்
வடபழனி, சென்னை - 26
ம.ப. - 1999.

சீதாராம் குருமூர்த்தி., (ப.ஆ) திண்டுக்கல் மாவட்ட தொல்லியல் கையேடு
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
தமிழ்வளர்ச்சி வளாகம்,
எழும்பூர், சென்னை - 8
மு.ப. - 2007.

சுப்பிரமணியன், கா., சங்ககாலச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
ம.ப. - 2011.

சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ.) தொல்காப்பியம் தெளிவுரை
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
மு.ப. - 1998.

சுப்பிரமணியன், தி., தமிழகத் தொல்லியலும் வரலாறும்
(தகடூர் பகுதி)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2009.

.......................... தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப - 2011.

சுப்பிரமணியன், ந., சங்ககால வாழ்வியல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை - 98.
ம.ப. 2010.

சுப்புரெட்டியார், ந., தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை - 14
ம.ப - 1988.

செல்வராசு, நா., சங்க இலக்கிய மறுவாசிப்பு
(சமூகவியல் மானுடவியல் ஆய்வுகள்)
காவ்யா
கோடம்பாக்கம், சென்னை - 24
இ.ப. - 2009.

சேதுப்பிள்ளை, ரா.பி., ஊரும் பேரும்
பழனியப்பா பிரதர்ஸ்
சென்னை - 14
மு.ப. - 1946.

சேதுராமன், பி., ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2011.

தனஞ்செயன், ஆ., சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2010.

,, குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2012.

தாயம்மாள் அறவாணன்., தமிழ்ச் சமூகவியல் (ஒரு கருத்தாடல்)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
மு.ப. - 2002.

திருநாவுக்கரசு, த., (ப.ஆ.) தமிழ்ப் பண்பாடு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
ம.ப. - 2009.

திருஞானசம்பந்தம், ச., (உ.ஆ) புறப்பொருள். வெண்பாமாலை
(தெளிவுரை)
கதிர் பதிப்பகம்,
திருவையாறு - 04
மு.ப. - 2006.

துரை அரங்கசாமி, அ., சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்
பாரி நிலையம்,
பிராட்வே, சென்னை - 01
இ.ப. - 1980.

தேவநேயப் பாவாணர், ஞா., பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும்
திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த
-நூற்பதிப்புக் கழகம்,(லிமிடெட்)
சென்னை-18
இ.ப. - 1992.

தேவி, ந., சங்க இலக்கியத்தில் மக்கட் பெயர் அடைகள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2010.

பக்தவத்சல பாரதி (ப.ஆ.) தமிழகத்தில் நாடோடிகள்
(சங்ககாலம் முதல் சமகாலம் வரை)
வல்லினம்
இலாசுப்பேட்டை, புதுவை - 08
மு.ப. - 2003.

………….. பண்பாட்டு மானிடவியல்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம் - 01
ம.ப. - 2009.

…………… (தொ.ஆ.) தமிழர் உணவு
காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ்
நாகர்கோவில் - 01
மு.ப. - 2011.

…………… (ப.ஆ.) பண்பாட்டியல் நோக்கில்
பண்டைத்தமிழர் சமயமரபுகள்
புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு
-ஆராய்ச்சி நிறுவனம்
புதுவை
மு.ப. - 2011.

பழனிவேலு, கே., சங்க இலக்கியம் பாட்டுமரபும் எழுத்துமரபும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப. - 2010.

பரமசிவன். தொ., அறியப்படாத தமிழகம்
காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ்
நாகர்கோவில் - 01
இ.ப. - 2010.

பாலசுந்தரம், தி.சு., பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை,
திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த
-நூற்பதிப்புக் கழகம், (லிமிடெட்)
பிராட்வே, சென்னை -1
இ.ப. - 1953.

பாலுச்சாமி, எ., மருதத்தில் மக்கள் வாழ்வியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
மு.ப. - 2011.

பாலசுப்பிரமணியன், கு.வெ., சங்க இலக்கியத்தில் புறப்பொருள்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம் - 01
மு.ப. - 2007.

............... சங்க இலக்கியக் கொள்கை
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை - 01,
மு.ப. - 2008.

பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சி.பி,டி வளாகம், சென்னை - 113
ம.ப. - 2000.

பெருமாள்சாமி, வெ., சங்ககாலத் தமிழகத்தின் சமூகநிலை
பாரதி புத்தகாலயம்
தேனாம்பேட்டை, சென்னை - 18
மு.ப - 2007.

மணவழகன், ஆ., பழந்தமிழர் தொழில்நுட்பம்
அய்யனார் பதிப்பகம்
ஆதம்பாக்கம்,
சென்னை - 88
மு.ப - 2010.

............... தொலைநோக்கு
அய்யனார் பதிப்பகம்
ஆதம்பாக்கம்,
சென்னை - 88
மு.ப - 2010.

மணிமாறன், ம., மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள்
தி பார்க்கர்,
இராயப்பேட்டை சாலை,
சென்னை - 14
மு.ப - 2004.

மனோன்மணி சண்முகதாஸ்., பண்டைத்தமிழர் வாழ்வியற் கோலம்
-இருப்பிடம்-
குமரன் புத்தக இல்லம்,
வடபழனி, சென்னை - 26.
மு.ப - 2002.

மாதையன். பெ சங்க இலக்கியச் சொல்லடைவு
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
மு.ப - 2007.

............... சங்க இலக்கியத்தில் குடும்பம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98
மு.ப - 2010.

............... சங்ககால இனக்குழுச் சமுதாயமும்
-அரசு உருவாக்கமும்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
இராயப்பேட்டை, சென்னை - 14
மு.ப - 2004.

............... சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
அம்பத்தூர், சென்னை - 98,
இ.ப 2010.

மாணிக்கனார், வ.சுப., (உ.ஆ) திருக்குறள்-தெளிவுரை
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை - 108
ம.ப - 2006.

முத்தையா, கே., தமிழ் இலக்கியங்கள் கூறும் வர்க்க சமுதாயம்,
சிகரம் பதிப்பகம்,
இராயப்பேட்டை, சென்னை,
மு.ப - 1981.

ரத்னம், க., (மொ.ஆ) தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்
(7தொகுதிகள்)
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
ம.ப - 2004.

............... (மொ.ஆ) தென்னிந்திய மானிட இன இயல்
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம் - 01
மு.ப - 2001.

ராஜ்கௌதமன்., பதிற்றுப்பத்து ஐங்குறுநூறு சில அவதானிப்புகள்
விடியல் பதிப்பகம்,
உப்பிலிபாளையம்,
கோயம்புத்தூர் - 15
மு.ப - 2010.

,, கலித்தொகை - பரிபாடல்
(ஒரு விளிம்புநிலை நோக்கு)
விடியல் பதிப்பகம்,
உப்பிலிபாளையம்,
கோயம்புத்தூர் - 15
மு.ப - 2011

வானமாமலை, நா., (ப.ஆ) மக்களும் மரபுகளும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை - 98.
இ.ப 1993.

வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு (சங்ககாலம்),
குமரன் புத்தக இல்லம்,
குமரன் காலனி,
வடபழனி, சென்னை - 26.
ம.ப - 2006.

வெள்ளைவாரனார், க., சங்ககாலத் தமிழ்மக்கள்
பானு பதிப்பகம்
திருச்சிராப்பள்ளி - 14
மு.ப - 2007

| | |
|---|---|
| வின்சென்ட், இலா., | தமிழ் இனமும் நிலமும் ? |
| | பாரதி புத்தகாலயம் |
| | தேனாம்பேட்டை, சென்னை - 18 |
| | மு.ப - 2010 |
| வேதாசலம், வெ., & | தொல்லியல் சுவடுகள் |
| - டெக்லா, ச., (ப.ஆ) | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் |
| | அம்பத்தூர், சென்னை - 98 |
| | மு.ப - 2011 |
| வேங்கடசாமி, சீனி., | பழங்காலத் தமிழர் வாணிகம் (சங்ககாலம்) |
| | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் |
| | அம்பத்தூர், சென்னை - 98 |
| | ம.ப - 2011 |
| வையாபுரிப்பிள்ளை, ச., (ப.ஆ) | இன்னாநாற்பது (மூ.உ) |
| | சக்தி காரியாலயம், |
| | சென்னை |
| | 1944 |
| ஜான் கென்னடி., | கோடைமலைப் பழங்குடியினர் |
| | முகில் பப்ளிகேஷன்ஸ் |
| | சிந்தாமணி தெரு |
| | மதுரை - 01 |
| | மு.ப - 1999 |
| ஜோதிராணி, க.அ., | சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் |
| | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், |
| | சி.பி,டி வளாகம், சென்னை - 113 |
| | மு.ப - 2011 |

பதிப்புத் துறையினர்　　சமூகவியல் கொள்கைகள்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
மு.ப - 2000

இராசரத்தினம், கு., & முதலியோர்., தமிழ் இலக்கியங்களில் ஊர்ப்பெயர்கள்
(2-வது பன்னாட்டுக் கருத்தரங்கம்)
தமிழ்சக்தி வெளியீடு,
சுப்பிரமணியபுரம்,
காரைக்குடி.
2011

## ஆங்கில நூல்கள்:

Pillai, K.K.,　　The Caste System in Tamil Nadu
MJP Publishers
Chennai – 05
R P. - 2007

Srinivas Iyengar, P.T.,　　History of the Tamils,
Asian Educational Services
Safdarjang Development Area
New Delhi – 16
R. P. 1983

Thani Nayagam.s.Xavier.,　　Tamil Culture
Tamil Cultural Society,
Colombo, Ceylon
R.P. - 1955

## இதழ்கள்

- ஆனந்த விகடன் (வார இதழ்) 2012, அண்ணாசாலை, சென்னை - 02.
- இந்தியா டுடே (இதழ்,) மயிலாப்பூர், சென்னை - 04, 2005.
- சமூக விஞ்ஞானம் (காலாண்டு இதழ்), காலாண்டு ஆய்விதழ் (இதழ் 28,33), இராயப்பேட்டை, சென்னை - 14, 2010 - 2011.
- செம்மொழி நிறுவனச் செய்தி மடல், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை - 05, 2009.

## கலைக்களஞ்சியங்கள்:

வாழ்வியல் களஞ்சியம் — தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
தஞ்சாவூர்.
மு.ப. - 1991.

சாரங்கபாணி, இரா., (ப.ஆ.)., சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் (தொகுதி 1,2)
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர். ம.ப. - 2003.

…………………….. கலைக்களஞ்சியம்,
தமிழ் இணையக் கல்விக்கழகம்,
www.tamilvu.org.

## அகராதிகள் - நிகண்டுகள்

அடோன் தமிழ்-தமிழ்-ஆங்கிலம் அகராதி — அடோன் பதிப்புக் குழுமம்
ஜி.பி.ஒ திருவனந்தபுரம் - 01
ம.ப. - 201.1

| | |
|---|---|
| இராசா, கி., | புறநானூற்று அகராதி<br>இராயப்பேட்டை, சென்னை - 14<br>மு.ப. - 2010. |
| கழகத் தமிழ் அகராதி | திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த<br>-நூற்பதிப்புக் கழகம், (லிமிடெட்)<br>பிராட்வே, சென்னை.<br>ம.ப. - 2003. |
| சூடாமணி நிகண்டு | வித்யா அச்சகம், சென்னை<br>பத்தாம் பதிப்பு. |
| பிங்கல நிகண்டு | மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை<br>சென்னை.<br>மு.ப. - 1917. |
| வடமலை நிகண்டு | Madurai Project (இணைய தளத்திலிருந்து). |


## இணையதளங்கள்


- **www.googleimage.com**
- **www.maduraiproject.com**
- **www.noolagam.com**
- **www.tamilvu.org**
- **www.tamilwikipedia.com**

## காடுகள் சூழ்ந்த முல்லைநிலம்



## முல்லைக் கொடியும் மலர்களும்



## குறிஞ்சியும் முல்லையும் நிலைதிரிந்த பாலைநிலம்



## பாலைமரம் - அதன் பூக்களும் காய்களும்



## செழிப்புமிக்க மருதநிலம்



## மருதமரம் - பூக்களும் காய்களும்



## மூவேந்தர்குடி பூக்கள்

### பாண்டியரின் வேப்பம்பூ



### சேரர்களின் பனம்பூ



## சங்ககாலச் சிற்றூர் மக்கள் வீடுகள் கூரைகள் அமைக்கப் பயன்படுத்தியவை



ஊகம்புல் (போதைப்புல்)



தருப்பைப் புல்

## சங்ககால அமைப்பு கொண்ட சிற்றில்கள்





## கள ஆய்வு நடைபெற்ற இடங்கள்



**வள்ளிக்கிழங்கு தோண்டும் பளியர்களோடு ஆய்வாளர்**



**சிறுமலைவாழ் மலையின இனக்குழுத் தலைவரிடம் தரவு சேகரித்தபோது..**

## கள ஆய்வின்போது காணப்பட்ட நடுகற்கள்



திண்டுக்கல் மாவட்டம் ஆத்தூர்ப் பகுதியில் உள்ள நடுகல்



திண்டுக்கல் மாவட்டம் தாண்டிக்குடி மலைப்பகுதியில் உள்ள நடுகல்



**வேட்டைக்குக் கிளம்பும் பளியர்கள் - சிறுமலை**



**வேங்கைமரப் பால் சேகரிக்கும் பளியர் - சிறுமலை**



மலைகளில் வாழும் குறவர் இன மக்கள் - பழனிமலைத்தொடர்



குகைகளில் வாழும் பளியர்கள் - பொன்னருவி (சிறுமலை)




**ஊர்சபை - சிறுகுடி**



**தாய்த்தெய்வ வழிபாட்டு எச்சம் - ஐயலூர் (திண்டுக்கல்)**



பளியர்களின் வழிபடும் வனதேவதை (பளிச்சியம்மன்) சிறுமலை



பழங்குடியினர் வழிபடும் முருகன் (சிலைற்ற வேல் மட்டுமே உள்ள கோவில்) தாண்டிக்குடி



குறவர்கள் வழிபடும் மரவழிபாடு (அரசமரம்) - பாச்சலூர்



மரவழிபாடு - மன்னவனூர்

## திண்டுக்கல் மாவட்டத்தில் காணப்படும் சங்ககால மரங்களும் மலர்களும்



சரக்கொன்றை



வாகை



ஈசல்



ஆமை*

- *. - ஆய்விற்குத் தொடர்புடைய அரிய சில நிழற்படங்கள் இணையதளத்திலிருந்து பெறப்பட்டவையாகும்.

## சங்ககால ஊர்ப்பாகுபாடுகளின் அடிப்படையில் அமைந்துள்ள திண்டுக்கல் மாவட்டச்சிற்றூர்கள்

| குறிஞ்சி | முல்லை | மருதம் | பாலை |
|---|---|---|---|
| தாண்டிக்குடி | இடையகோட்டை | நல்லூர் | நத்தம் |
| பூதகுடி | முலையூர்(முல்லையூர்) | ஆத்தூர் | புலியூர்நத்தம் |
| சிறுகுடி | ஆயக்குடி | ஐயலூர் | பிள்ளையார்நத்தம் |
| பூண்டி | பாடியூர் | புத்தூர் | பாகாநத்தம் |
| செங்குறிச்சி | தாமரைப்பாடி | புதூர் | கோட்டநத்தம் |
| கொடைக்கானல் | முள்ளிப்பாடி | மானூர் | செந்துறை |
| சிறுமலை | வடுகம்பாடி | குளத்தூர் | பாலப்பட்டி |
| பண்ணிமலை(பன்றிமலை) | சாத்தம்பாடி | சேத்தூர் | கள்ளிமந்தையம் |
| பண்ணியாமலை | மண்டவாடி | புங்கமத்தூர் | வெம்பூர் |
| கன்னிவாடிமலை | ஆலம்பாடி | கோட்டையூர் | கூம்பூர் |
| தோணிமலை | மாரம்பாடி | கோட்டூர் | வெறிப்பூர் |
| பூம்பாறை | கானப்பாடி | கீரனூர் | கல்லடிபட்டி |
| கவுஞ்சி | வீரக்கல் | சந்தையூர் | கருங்கல் |
| வெள்ளகவி | சிரங்காடு | மடூர் | சுல்லெறும்பு |
| பண்ணைக்காடு | வடகாடு | டி.கூடலூர் | தீண்டாக்கல் |
| ஆடலூர் | ஆவிளிபட்டி | சித்தூர் | மணலூர் |
| பாச்சலூர் | இடையபட்டி | புஷ்பத்தூர் | கணவாய்பட்டி |
| பெரியூர் | குறும்பபட்டி | பள்ளபட்டி | பாறைப்பட்டி |
| வில்பட்டி | வில்வாதம்பட்டி | | மட்டப்பாறை |
| பூலத்தூர் | பண்ணுவார்பட்டி | | வேடசந்தூர் |
| காமனூர் | பண்ணைப்பட்டி | | |
| மன்னவனூர் | விராலிபட்டி` | | |
| அடுக்கம் | வேலம்பட்டி | | |
| பழனிமலை | எல்லபட்டி | | |
| | விளாம்பட்டி | | |
| | குடகிபட்டி | | |
| | கொழுமன்கொண்டான் | | |